சாந்தலிங்கஸ்வாமிகள்

சாத்திரம். 4-ம்.

---

# கொலைமறுத்தல்

# வைராக்கியசதகம்

# வைராக்கியதீபம்

# அவிரோதவுந்தியார்.

உ.



கணேசாய நம:

திருப்பேரூர்

சாந்தலிங்கசுவாமிகள்

அருளிய




# கொலைமறுத்தல்
# வைராக்கியசதகம்
# வைராக்கியதீபம்
# அவிரோதவுந்தியார்

திருப்போரூர்

சிதம்பரசுவாமிகள்

இயற்றிய உரையுடன்

S. மாணிக்கசுவாமிகளால்

பதிப்பிக்கப்பெற்றது.

எலெக்டிரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், கோயமுத்தூர்.

1927

விலை 1—8—0.

உ

கணேசாய நம:



திருப்பேரூர்

## சாந்தலிங்கசுவாமிகள்

அருளிய




# கொலைமறுத்தல்
# வைராக்கியசதகம்
# வைராக்கியதீபம்
# அவிரோதவுந்தியார்



திருப்போரூர்

## சிதம்பரசுவாமிகள்

இயற்றிய உரையுடன்



**S. மாணிக்கசுவாமிகளால்**

பதிப்பிக்கப்பெற்றது.



எலெக்டிரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், கோயமுத்தூர்.

1927

விலை 1—8—0.

# பதிப்புரை



உலகமுழுதுங் காக்கு முழுமுதலிறைவன் பேரருளாற் றிருவாய் மலர்ந்தருளிய வேதாகம மாதியினுண்மைப் பொருளுணர்ந்த பெரியார், கருணையானப்பொரு ளினிதினுணர்ந் தியாவருமுய்ய நூல்கள் செய்தனர். அத்தகைய சிறந்த நூல்களுள், திருப்பேரூர் சாந்தலிங்க சுவாமிகளால் செய்தருளிய கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியா ரென்னு நான்கு நூல்களையு நற்றமிழ்வல்லார் நாடுகின்றனர். இந்நான்கு சாத்திரங்களுமுறையுடன் பலவிடங்களி னின்றும் பார்வையிடப் பட்டச்சிட்டு வெளிவந்திருக்கின்றன. ஆயினு மிவை சாந்தலிங்க சுவாமிகளின் றிருவாக் காதலா லிம்மூர்த்திகள் சமாதிகோயில் கொண்டருளிய வித்திருமடத்தினின்றும் வெளியிடல் வேண்டு மென்றபல வன்பர்களின் வேண்டுகோளாலும், இம்மடத்திற்கு வேண்டுவன வுபகரித்துப் பேரன்புடையவரு மான, பொள்ளாச்சி, ஸ்ரீமான் P. இரத்தின சபாபதிக் கவுண்டரவர்கள், இந்நூல்க ளச்சிட்டு வெளியிடுவதற்குப் பணவுதவி செய்து அதில் வரு மாதாயத்தைச் சாந்தலிங்க சுவாமிகளின் கோயிற் றிருப்பணிக் குபகரிக்க வெனத் தூண்டினதினாலும், இந்நூல்களை யச்சிடலானேன். சாந்தலிங்க சுவாமிகள் திருவுருவப் படமுஞ் சேர்க்கப்

பெற்றிருக்கிறது. இந்நூலாசிரியரின் சரிதச் சுருக்கமும், அரும்பதவுரையும், உதாரணச் செய்யுட்களின் பிழைதிருத்தங்களுஞ் செய்துபகரித்த ஸ்ரீமத் கோ. வீர. சுப்பைய சுவாமிகளிடத்து வணக்கத்துடன் நன்றி செலுத்துகிறேன். பெரியோர் பிழை பொறுக்க.

S. மாணிக்கசுவாமி,

§ சாந்தலிங்கசுவாமிகள் மடம்,

பேரூர்,

கோயமுத்தூர்.

§ இவ்விலாசத்தில் புத்தகம் கிடைக்கும்.



உ

சிவமயம்.

கணபதயே நம:

சென்னை ஆனந்தாஸ்ரமம்

ஸ்ரீமத். வீர. சுப்பைய சுவாமிகள்

அவர்கள் எழுதிய

---

திருப்பேரூர்

# ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகள்

# சரித்திரச் சுருக்கம்.

—):(—

கடல்சூழ்ந்த வுலகி லொருபாக மாய பரதகண்ட மென்னுமிப்புண்ணிய பூமியி லிறைவனது திருவருள் பெற்ற வுண்மைஞான சித்தர்களாய பெரியோர்கள் தோன்றி யாங்காங் கெழுந்தருளிப் பாவிகண்முதற் பக்குவர்வரை யவரவர்கட் கருள் புரிந்து வருதல், காட்சி, ஆகம, ஐதிக வளவைகளான் யாவரு மறிந்ததேயாம். அவ்வண்ணம் வெளிப்பட்ட பெரியார்களுட் சிறந்தாராவார் சாந்தலிங்க சுவாமிகளென்னும் பெரியார்.

சுமார் இருநூற்றெண்பது வருடங்களுக்குமுன்பு சிவத் தலங்களுட் சிறந்த திருப்பதியாய், பல தெய்விகம் விளங்குவதாய், காஞ்சிமாநதி யென்னும் புண்ணிய தீர்த்தமுடையதாய் விளங்கும் மேலைச்சிதம்பர மென்னுந் திருப்பேரூரின் கண்ணே யிப்பெரியாரிருந்தனர். இவர் வீரசைவ சமயஞ் சார்ந்த வுயர்குலத்தி னடுநா டல்லது தொண்டை நாட்டி லவதரித்தவ ராதல் வேண்டும். இவர் சிறுவயதிலே நற்குண நல்லொழுக்கம் பூண்டு கல்வியிற் சிறந்து சிவபெருமா னிடத்து மடியவ ரிடத்து மிக்க வன்புடையராய் தேகவளர்ச்சியுடன் ஞான சாதனங்களும் வளர்ந்து முற்றியதா லவ்வயதிலேயே மாதாபிதா சுற்றத்தினரின் கருத்தை விட்டு, சூரிய வெப்பந் தாங்காது வருமொருவன் குளிர் நிழல் தேடல்போல், பிறப்பாகிய துன்பந்தாங்கா தஃதின்றிய நிலையை யடைவதே கருத்துடையராயினர். ஞானாசிரிய ரெங்

குள்ளா ரென்று தேடும் விருப்பத்துடன் புண்ணிய தலயாத்திரையாகப் புறப்பட்டு, புண்ணிய தீர்த்த ஸ்நானஞ் சிவாலய தரிசனஞ் செய்துகொண் டாங்காங்கு சென்று வருவாராயினர். இது நிற்க.

கும்பகோணத்தில் வேளாண் செட்டிகள் வம்சத்திலுதித்து, சிறுவயதிலே கல்விப் பயிற்சியுஞ் சாத்திர வாராய்ச்சியு நன்னெறியும் பெற்ற வொருவரிருந்தனர். இவர் புண்ணியத்தல யாத்திரையாகச் சென்று வருகையில் திருவாவடுதுறைக்கு வர, அங்கு திருக்கைலாய பரம்பரை நமச்சிவாய மூர்த்திகளைக் கண்டு தரிசித்து, தம்மை யாட்கொள்ள வெழுந்தருளிய வருளுருவெனக் கருதி யிருந்தனர். மூர்த்திகளுஞ் சில நாட்களுக்குள் தீட்சைகளையு முபதேசமும் புரிந்து சாத்திரங்களையுந் தெளியக்கூறி சிவப்பிரகாச வென்றழைத்தனர். இச்சிவப்பிரகாச சுவாமி கணிட்டைகூடி சுவானுபவநிலை யடைந்ததை யாசிரியர் கண்டு மகிழ்ந்து, 'ஆதீன பரம்பரை விளங்குவதற் கிங்கு வரும் பக்குவர்க்குபதேசிக்க,'' எனக் கட்டளையிட்டுத் தாம் சமாதியிலிருந்தனர். பின் சிவப்பிரகாச சுவாமிகள் குருமூர்த்தியி ளாணைவழியே யங்கிருந்தனர். அக்காலத்தி லரசரா லதிகாரம் பெற்று நடுநாட்டிற் கதிகாரியாயிருந்த வைணவ சமயத்தில் வெறிகொண்ட வொருவர், சிதம்பரத்தில் நடராஜப் பெருமானுக்கு நடந்து வந்த நித்தியபூசை திருவிழாமுதலியவை கண்டு பொறாது, அவ்வைபவங்களை நிறுத்தி, தில்லைக் கோவிந்தராஜப் பெருமாளுக்கே செய்வித்தனர். தில்லைவாழந்தணர்களும் மற்றையோருந் திருவாவடுதுறைக்கு வந்து சுவாமிகளிடத்து முறையிட சுவாமிகளு மாசிரியரி னுத்தரவினால் சிதம்பரம் வந்து சேர்ந்தனர். இவ்வதிகாரிக்கரச ரிராயவேலூரிலிருக்கு மிராயரெனத் தெரிந்து பின்பங்கு சென்று மந்திரி வீரசைவரா யிருந்ததால் சுவாமிகள் சிவாஞ்ஞையாற் றமு மிலிங்கந்தரித்து, அம்மந்திரியின் மூலமாய் நடராஜப் பெருமானுக்குப் பழையபடியே பூசையாதிக ணடத்துவித்து, அவ்வரசனது வேண்டுகோளுக்காக மழையில்லாக் காலத்து மழை பெய்வித்து, அவர்களது வேண்டுகோளின்படியே திருவண்ணாமலையி லமைக்கப்பட்ட திருமடத்தில் சிலகால மெழுந்தருளியிருந்து, அத்துவித வெண்பா முதலிய பதினாறு சாத்திரங்கள் செய்து யாத்திரையாக வெழுந்தருளி, திருக்காளத்திக்குச் சென்று, அங்கு எதிர்த்த மத்துவாசாரியரை வென்று சைவராக்கியங்கு சிலகாலம் வசித்து வந்தனர். அங்கிருந்தும் வரும்போது திருச்செங்கோடென்னுஞ் சிவஸ்தலத்திற்கு வந்தனர். அங்கிருந்த பிராமணரனைவருங் கூடி சுவாமிகளது தெய்விகமறிய, அச்சந்நிதி

யிலிருக்கும் கல்விடபத்தைக் காட்டி "இக்கடலையை இவ்விட பந்தின்னச் செய்வீராக." என மொழிந்தனர் சுவாமிகள், அக் கடலையை யக்கல் விடபத்தின்முன் வைப்பித்து, "வில்லார் மணிச்சபையின் வித்தகா கூடலின்முன்—கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை—கட்டுரையே யாகிலிந்தக் கல்லே றெழீஇக்கடலை—யிட்டவிவர் முன்றினச்செய் யே." எனக் கூற லும், அவ்விடபம் முன்வைத்த கடலை முழுமையுந் தின்னக்கண்ட வவ்வியாவரு மடிமையாயினர். பின்சில தலங்கட்குச் சென்று திருவண்ணுமலை வந்து தங்கினர்.

சாந்தலிங்கசுவாமிகள் திருவண்ணுமலைக்கு வந்தபோது அங்கமர்ந்திருந்த * சிவப்பிரகாச சுவாமிகளைக் கேள்வியுற்றுச் சென்று நமஸ்கரித்து துதித்து சுவாமிகளினது கருணையைப் பெற்றுத் திருக்கூட்டத்துடன் வசித்து வந்தனர். இவரது ஆத்தம், அங்கம், தானம், சத்பாவமென்னு நான்கு பணிகளையு மதிதீவிர பக்குவத்தையுஞ் சுவாமிக ணோக்கி யுண்மகிழவும், சாந்தலிங்க சுவாமிகள் சமயம் பார்த்து சந்நிதியிற் சென்று மிக்க வணக்கத்துடனு மதிவிநயத்துடனுந் தமது குறையை விண் ணப்பிக்க, சிவப்பிரகாச சுவாமிகளு மருட்கண் ணோக்கம் வைத்து முறையாக வுபதேசஞ் செய்தருளினர்.

சுவாமிகளவ்வுபதேசப் பொருளைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடி சுவானுபவ நிலையிலே நாட்டமா யிருந்தனர். இது கண்ட வாசிரியர் களிகூர்ந் தருளொடு சாந்தலிங்க சுவாமிகளை நோக்கி, "அன்ப! நீ விரும்புமோர் தலத்தெய்தி யங்கிருந்து நீயடைந்த நிலைமை பின்வருபவர்களும் பரம்பரையாயடைவதற்குப் பக்குவர்க்கருளுக," எனக் கூறியருளினர்.'' அவ்வாஞ்ஞையைக் கடவாதவராய் பிரிவாற்ருது, அரிதிற் பிரிந்து தமக்கு வழிபடு கடவுளாகிய நடராஜப் பெருமான் றிருநடனஞ் செய்வதாகிய இரசத சபையையுடைய மேலைச் சிதம்பரத்திற்கு வந்து தனித்த தோரிடத்தில் நிட்டை கூடி தங்கியிருந்தனர்.

சாந்தலிங்க சுவாமிகளின் நற்குணங்களைக் கண்ட வன்பர்கள் திருமட மமைத்திருத்தி யுபசரித்தனர். சுவாமிக ளம்மடத்தி

* இச்சிவப்பிரகாச சுவாமிகள் திருவண்ணுமலையினின்றுந் தமக் கடிமை பூண்ட துறையூ ரரசரா லமைக்கப்பட்ட திருமடத்தில், வந்து தங்கி அவரா லுபசரிக்கப்பட்டு சிலகாலம் வசித்தமையால், இவருக்குத் துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் என்று வழங்கி வருகிறது

லமர்ந்து ஸ்நானம், உணவு, சாத்திரம் போதித்த லாகிய விக்கா லங்களைத் தவிர மற்றையபோது நிட்டைகூடி யிருத்தலிலே காலங் கழித்தனர். ஒருநா ணிருவிகற்ப நிட்டையி னின்றும் விழித்து சகளமூர்த்த சிவபெருமானைக் கரைந்துருகிய வுள்ளன்புடன் சிந் தித்துக் கொண்டிருக்கும் போது, மனம்பொறிகட் கொருமையா கிய தவத்தானும், பேரன்பானும், அடியார்க் கெளியரா மம்பலவாணர் மரகதாம்பிகையுடன், இடப வாகனத்தின்மீ தெழுந் தருளித் தம்முன் றரிசனந் தந்தருளினர். தமதிரு கண்ணாரக் கண்டு களிகூர்ந்தெழுந்து சிரமீது கரங்கூப்பி யுள்ள நெகிழக் கண் களினின்றுநீர் மழையெனச் சொரிய வானந்தக்கடன் மூழ்கி வாய்குளறித் துதித்து விழுந்துவிழுந் தெழுந்து தம்மை மறந்தவ ராயினர். இத்தரிசனத்தைத் தமதுநூலிற் றாமே பலதடவையும் பகர்ந்துள்ளார்கள். அவை வருமாறு:—

பிரானேதிருத்தில்லையுளாயன்றிப்பேதையேன்மு
ன்னோரானேறிவர்ந்தம்பிகையோடெளிதோடிவந்தாய்
வரானேவினமெம்மிறையென்றுனைநாடிவாடி
யிராநாயடியேற்கெதிர்தோன்றிலையின்றிதென்னே. (க)

ஆனேறிவர்ந்தென்னெதிரேவிரைந்தன்றுவந்தோய்க்
கேனோவெறுப்பிப்பொழுதோர்சற்றிரங்குகில்லாய்
நானேவறிவேனுன்பெருமையைநம்பனேநீ
தானேபொறுத்தாளுகண்டாயென்றவறெலாமே. (உ)

தில்லைப்பதிமேயசிவப்பிரகாசனேயோ
தொல்லைப்பிறவாநெறிமேவியதோன்றலேயோ
வல்லற்பிறவிக்கிளைத்தேன்றனையஞ்சலென்றோர்
சொல்லைப்பகராய்விடைமீதினந்தோன்றிநின்றே. (ங)

சார்ந்தாய்குருவாகியவாய்விடைதன்னில்வந்தாய்
கூர்ந்தாயருளிற்பிறவாநெறிகூட்டுவித்தா
யோர்ந்தேன்குறையின்றெனினுங்குறையுண்டுகண்டாய்
பேர்ந்தோடுமெனெஞ்சமுன்னன்புபிறக்குமட்டே. (ச)

உவந்தாயெனதைம்புலனும்மிரிந்தோடவோர்நாட்
டவந்தான்சிறிதும்மிலிபால்விடைதன்னின்மின்னோ
டிவர்ந்தேதவராநாளும்விளங்கிலையென்னைகொல்லோ
வவந்தான்மிகுபாவியுன்லீலையறிந்திலேனே. முதலனவாம். (ரு)

பின் சிறிதுநேரத்திற்கு எவ்வருட் பெருஞ்சோதி மறைந்தருளவும், அத்திரு வுருவத்தே கருத்தூன்றித் தேக கரணங்களசைவற்றிருந்ததை யங்குள்ளாரிற் சிலர் நோக்கி யாதுந் தோன்றாததிசயித்தனர். இவ்வருட் டரிசனத்தைப் பின்னருந் தரிசிக்கப் பேரவா வுற்றன ரென்பது மேற்கூறிய பாடல்களானே விளங்குகின்றது. சுவாமிகளுக் குபாசனாமூர்த்தம் பரசிவமூர்த்தங்களுள் நடராஜப் பெருமா னென்பதுஞ் சதகத்தின் பிற்பாதியின் தோத்திரங்களி லறியக்கிடக்கின்றது. நாட்குநா ளடியார் கூட்டம் பெருகி, கேட்டலிற் கிளர்ச்சியுள்ளோரும், சிந்தித்துத் தேர்வோரும், நிட்டையி னிலைப்போரும், தம்மையடிமைகொண்ட ஆசிரிய ரருங்குற்றேவலிற் குறிப்பினரு மாகிக்குழுமியது. சுவாமிகள், பொம்மைய பாளையத்தி லனந்த சித்திகளுடனுஞ் சிவஞானத்துடனுங் கூடி யெழுந்தருளியிருந்த சிவஞான பாலைய தேசிகரைத் தரிசிக்கு மாதரத்தோடு திருப்பேரூரி னின்று மெழுந்தருள உத்தேசித்திருந்தனர்.

திருவண்ணா மலையி லிருந்த சிவப்பிரகாச சுவாமிகள், குருதரிசனஞ் செய்யத் திருவாவடுதுறைக்கு வருமார்க்கத்தில் திருக்கலயநல்லூர் சிவஸ்தல வர்ச்சகரி னிறந்தசிறு புத்திரனை "ஞானக்கூத்தர்" வென்றழைக்க வுடனே யவனெழுந் தோடிவர, அப்புத்திரனைத் தம்முடன் வைத்துக்கொண்டனர். பின் வரும்வழியில் தீவர்த்திக் கெண்ணை யில்லாத தறிந்து காவேரி நீரைக்கொண் டெரிப்பித்தும், ஒருவனது குட்டநோயைத் தீர்த்தும், ஒருவனது பிரமகத்தியைப் போக்கியு மிவை முதலிய வருள் விளையாட்டுடன் திருவாவடு துறைக்கு வந்து, ஆசிரியரைப் பன்முறை வணங்கி வாழ்த்தி வதிந்திருக்குங் காலத்தில், தமது தேசிகமூர்த்திகள் விதேகமுத்தி யடையவும், செய்யவேண்டிய சமாதிக் கிரியைகளை முடித்து, அம்பலவாண தேசிகருக் கபிஷேகஞ் செய்து திருவாவடுதுறை யாதீனத்திற் கமர்த்தினர். பின்பு திருவண்ணாமலைக் கெழுந்தருளக் கருதிப் புறப்பட்டு வரும்போது வழியில், தமக்கு விதேகமுத்தி யெய்துங் காலஞ் சமீபித்ததை யுணர்ந்து தம்முடனிருக்கும் ஞானக்கூத்தருக்குச் சிவலிங்க தாரணமு மாசாரியாபிடேகமுஞ் செய்து வீர சைவாதீனத்திற்குத் தேசிகராய் திருவண்ணாமலையி லிருக்கும்படி செய்து தாம் பட்டீச்சுரத்தருகே பரசிவத்திற் கலந்தருளினர்.

சாந்தலிங்க சுவாமிகள், ஆசிரியரது பரமமுத்தி தசையைக் கேட்ட வக்கணமே யடியருடன் பட்டீச்சுரம் வந்து தேசிகரது

பிரிவாற்ருது தேர்ந்து துதித்து, தம்முடன் வந்த வன்பர் கூட்டத்தைத் திருப்பேருருக் கனுப்பிவிட்டு சிவஞான பாலைய சுவாமிகளின் றரிசனப்பொருட் டங்கிருந்து நீங்கி வழியி லோரூரிற் றங்கினர்.

வேளாளர்க்குத் தீட்சா குருவாகிக் காஞ்சீபுரத்தி லிருந்த குமாரசுவாமி தேசிகர்க்கு, அண்ணுமலையாரி னனுக்கிரகத்தான் மூன்று புத்திரர்களு மொரு புத்திரியும் பிறந்தனர். அவர்கட்கு முறையே சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப்பிரகாசம், ஞானம்பிகை, என்பன நாமங்களாகும். இவர்கள் கல்விபயிலுங் காலத்திற் பிதா சிவசாயுச்சிய மடைந்ததால், மூத்தவராகிய சிவப்பிரகாச சுவாமிகள் சகோதரருடன் திருவண்ணுமலைக்குச் சென்று, அச்சோண சைலத்தைப் பிரதட்சணஞ் செய்துவரும் போதே சோணசைல மாலை பாடியருளினர். இவரது மகிமை யறிந்த வண்ணுமலைரெட்டியா ரென்னு மன்பர் சிவப்பிரகாச சுவாமிகளுக் கடிமை பூண்டு தமது கிராமமாகிய * துறைமங் கலத்தில் திருமடமமைத் துபசரிக்க சுவாமிக ளங்கு வசித் திருந்தனர்.

சிவப்பிரகாச சுவாமிகள் தம்மிரு சகோதரர்கட்கும் மண முடித்துவிட்டு, ஞானம்பிகை சிறுவயதானதால் சகோதரரிடத் துக் கல்வி பயில வைத்துவிட்டுத் தாம் துறவினராக ஸ்தலங்க டோறுஞ் சென்றும், சிதம்பரத்திலும், காஞ்சீபுரத்திலும் மற்றை யிடங்களிலுஞ் சிலகாலம் வாசஞ்செய்து மொழிபெயர்ப்பாகவும் பிரபந்தங்களாகவு முப்பது நூல்கட்குமே லியற்றியருளினர். மற்ருெருகால் துறைமங்கலத்தி லிருந்து காஞ்சீபுரத்திற்கு வரும் வழியில் சாந்தலிங்க சுவாமிகள் தங்கிய பதியில் தாமும் வர, அங்கு சுவாமிகளைக் கண்டு களிகூர்ந்து நேயத்துட னளவளாவிய பின் சுவாமிகளை நோக்கி, "பேரூரென்னுந் திவ்விய தலத்தினின் றுந் தாங்க ளெழுந்தருளிய தெக்கருத்தோ," எனச் சிவப்பிரகாச சுவாமிகள் வினவலு மதற்கு சுவாமிகள், "பொம்மைய பாளையத் திலிருக்குஞ் சிவஞானபாலைய தேசிகரென்னும் பெரியாரைத் தரிசித்தல் வேண்டு மென்னும் பெருவேட்கையுற்று வந்தேன்," என்றுரைத்தருளினர். தாமுங் கூடவருவதாகக் கூறிச் சேர்ந் திருவரும் போந்து பொம்மைய பாளையத்திற்குச் சமீபமாக வொரூரி லிரவு தங்கினர். சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகளை நோக்கி,

* இவ்வடிகளுக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிக ளென்று வழங்கி வருகிறது.

"யாமிருவருஞ் சிவஞானபாலைய தேசிகரைத் தரிசிக்கச் செல்வதால் தேசிகர்மீது பாமாலைபாடுக," என வேண்டவும், அதற்கு "யாம் நரஸ்துதிசெய்யேம்." என மறுத்தனர். இரவு சிவப்பிரகாச சுவாமிகளின் கனவில் முருகப்பெருமான் மயில் வாகனத்தின்மீ தெழுந்தருளி மலர்களை யொருபாத்திரத் தேந்தி, "இவைகளை மாலையாகத் தொடுத்து நமக்கணிவாய்," என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனர். சுவாமிகள் விழித்ததிசயித்து சாந்தலிங்கசுவாமிகளிடத் துரைத்தருளவும், "தமதருளைப் பெற்றாராய்த் தம்மினும் பேதமின்றி யிருக்குஞ் சிவஞானபாலைய தேசிகரது மகிமையை யறுமுகக் கடவு ளுணர்த்தியருளினர்," என்று சுவாமிகள் கூறியதைக் கேட்டுப் பேருவகை யுற்றுத் தேசிகர்மீது நெஞ்சுவிடுதூது, தாலாட் டென்னும் பிரபந்தங்களைப் பாடியருளினர்.

பின்னிருவருஞ் சென்று, சிவஞானத்துடன் சித்தபுருஷராய்ச் சுமார் ஐந்நூறு வயதுடைய தேசிகரைத் தரிசித்துப் பாமாலையைத் திருவடிக் கணிந்தனர். சிவஞானபாலைய சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகட் கனுக்கிரகம் புரிந்து ஞானாம்பிகையை சாந்தலிங்க சுவாமிகட்கே மணம் புரிவித்தல் தகுதியென மொழிந்தருளினர். சுவாமிகள், அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு களிப்புடன் றமது தங்கையை சாந்தலிங்க சுவாமிகளுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தனர்.

பின்பு சாந்தலிங்க சுவாமிகள் ஞானாம்பிகையுடன் திருப்பேரூருக்கு வந்து தங்கியிருந்தனர். இவ்வம்மையாரின் ஒழுக்கங்களைக் கண்டா ரனைவரும், இவரது பெயர் காரணப் பெயராகுமென்று முன்னமே யறிந்தோ விவரது பிதா விப்பெயரிட்டதென்றனர். அம்மையாருந் தம்பதியின் குறிப்பறிந் தொழுகி, அறவாழ்க்கைக்குத் துணையாய்த் தங்கேள்வரை, "அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்—போஒய்ப் பெறுவ தெவன்," என்னு மெய்ம்மொழிக் கிலக்கியமாக்கித் தங்கணவர் மகிழுமாறு நடந்தனர். சுவாமிகளும், "பிச்சையு மையமு மிட்டுப் பிறன்றார, நிச்சலு நோக்காது பொய்யொரீஇ—நிச்சலுங், கொல்லாமை காத்துக் கொடுத்துண்டு வாழ்வதே, யில்வாழ்க்கை யென்னு மியல்பு," என்னும் பெரியார் வாக்கின்படியே யில்லறம் வழுவாது நடத்திக் கொண்டு வருங்காலத்தில், தினந்தினம் புதிய வடியாருட னமுது கொள்வது வழக்கமாகலான், ஒரு நாள் புதியரின்றித் தேடவும், அவ்வமயம் திகம்பரராய் மௌனவிரதராய் நித்திரையை வென்றவராய் விளங்கிய மௌனசுவாமிகள் சிதம்பரத்தினின்று

பிரிவாற்றாது தோர்ந்து துதித்து, தம்முடன் வந்த வன்பர் கூட்டத்தைத் திருப்பேரூருக் கனுப்பிவிட்டு சிவஞான பாலைய சுவாமிகளின் றரிசனப்பொருட் டங்கிருந்து நீங்கி வழியி லோரூரிற் றங்கினர்.

வேளாளர்க்குத் தீட்சா குருவாகிக் காஞ்சீபுரத்தி லிருந்த குமாரசுவாமி தேசிகர்க்கு, அண்ணாமலையாரி னனுக்கிரகத்தான் மூன்று புத்திரர்களு மொரு புத்திரியும் பிறந்தனர். அவர்கட்கு முறையே சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப்பிரகாசம், ஞானாம்பிகை, என்பன நாமங்களாகும். இவர்கள் கல்விபயிலுங் காலத்திற் பிதா சிவசாயுச்சிய மடைந்ததால், மூத்தவராகிய சிவப்பிரகாச சுவாமிகள் சகோதரருடன் திருவண்ணாமலைக்குச் சென்று, அச்சோணசைலத்தைப் பிரதட்சணஞ் செய்துவரும் போதே சோணசைல மாலை பாடியருளினர். இவரது மகிமை யறிந்த வண்ணாமலைரெட்டியா ரென்னு மன்பர் சிவப்பிரகாச சுவாமிகளுக் கடிமை பூண்டு தமது கிராமமாகிய * துறைமங்கலத்தில் திருமடமமைத் துபசரிக்க சுவாமிக ளங்கு வசித்திருந்தனர்.

சிவப்பிரகாச சுவாமிகள் தம்மிரு சகோதரர்கட்கும் மணமுடித்துவிட்டு, ஞானாம்பிகை சிறுவயதானதால் சகோதரரிடத்துக் கல்வி பயில வைத்துவிட்டுத் தாம் துறவினராக ஸ்தலங்கடோறுஞ் சென்றும், சிதம்பரத்திலும், காஞ்சீபுரத்திலும் மற்றையிடங்களிலுஞ் சிலகாலம் வாசஞ்செய்து மொழிபெயர்ப்பாகவும் பிரபந்தங்களாகவு முப்பது நூல்கட்குமே லியற்றியருளினர். மற்றொருகால் துறைமங்கலத்தி லிருந்து காஞ்சீபுரத்திற்கு வரும் வழியில் சாந்தலிங்க சுவாமிகள் தங்கிய பதியில் தாமும் வர, அங்கு சுவாமிகளைக் கண்டு களிகூர்ந்து நேயத்துட னளவளாவிய பின் சுவாமிகளை நோக்கி, "பேரூரென்னுந் திவ்விய தலத்தினின் றுந் தாங்க ளெழுந்தருளிய தெக்கருத்தோ," எனச் சிவப்பிரகாச சுவாமிகள் வினவலு மதற்கு சுவாமிகள், "பொம்மைய பாளையத்திலிருக்குஞ் சிவஞானபாலைய தேசிகரென்னும், பெரியாரைத் தரிசித்தல் வேண்டு மென்னும் பெருவேட்கையுற்று வந்தேன்," என்றுரைத்தருளினர். தாமுங் கூடவருவதாகக் கூறிச் சேர்ந்திருவரும் போந்து பொம்மைய பாளையத்திற்குச் சமீபமாக வோரூரி லிரவு தங்கினர். சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகளை நோக்கி,

* இவ்வடிகளுக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிக ளென்று வழங்கி வருகிறது.

"யாமிருவருஞ் சிவஞானபாலைய தேசிகரைத் தரிசிக்கச் செல்வதால் தேசிகர்மீது பாமாலைபாடுக," என வேண்டவும், அதற்கு "யாம் நரஸ்துதிசெய்யேம்." என மறுத்தனர். இரவு சிவப்பிரகாச சுவாமிகளின் கனவில் முருகப்பெருமான் மயில் வாகனத்தின்மீதெழுந்தருளி மலர்களை யொருபாத்திரத் தேந்தி, "இவைகளை மாலையாகத் தொடுத்து நமக்கணிவாய்," என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனர். சுவாமிகள் விழித்ததிசயித்து சாந்தலிங்கசுவாமிகளிடத் துரைத்தருளவும், "தமதருளைப் பெற்றாராய்த் தம்மினும் பேதமின்றி யிருக்குஞ் சிவஞானபாலைய தேசிகரது மகிமையை யறமுகக் கடவு ளுணர்த்தியருளினர்," என்று சுவாமிகள் கூறியதைக் கேட்டுப் பேருவகை யுற்றுத் தேசிகர்மீது நெஞ்சுவிடுதூது, தாலாட் டென்னும் பிரபந்தங்களைப் பாடியருளினர்.

பின்னிருவருஞ் சென்று, சிவஞானத்துடன் சித்தபுருஷராய்ச் சுமார் ஐந்நூறு வயதுடைய தேசிகரைத் தரிசித்துப் பாமாலையைத் திருவடிக் கணிந்தனர். சிவஞானபாலைய சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகட் கனுக்கிரகம் புரிந்து ஞானம்பிகையை சாந்தலிங்க சுவாமிகட்கே மணம் புரிவித்தல் தகுதியென மொழிந்தருளினர். சுவாமிகள், அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு களிப்புடன் றமது தங்கையை சாந்தலிங்க சுவாமிகளுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தனர்.

பின்பு சாந்தலிங்க சுவாமிகள் ஞானம்பிகையுடன் திருப்பேரூருக்கு வந்து தங்கியிருந்தனர். இவ்வம்மையாரின் ஒழுக்கங்களைக் கண்டா ரனைவரும், இவரது பெயர் காரணப் பெயராகுமென்று முன்னமே யறிந்தோ விவரது பிதா விப்பெயரிட்டதென்றனர். அம்மையாருந் தம்பதியின் குறிப்பறிந் தொழுகி, அறவாழ்க்கைக்குத் துணையாய்த் தங்கேள்வரை, "அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்—போஒய்ப் பெறுவ தெவன்," என்னு மெய்ம்மொழிக் கிலக்கியமாக்கித் தங்கணவர் மகிழுமாறு நடந்தனர். சுவாமிகளும், "பிச்சையு மையமு மிட்டுப் பிறன்றார, நிச்சலு நோக்காது பொய்யொரீஇ—நிச்சலுங், கொல்லாமை காத்துக் கொடுத்துண்டு வாழ்வதே, யில்வாழ்க்கை யென்னு மியல்பு," என்னும் பெரியார் வாக்கின்படியே யில்லறம் வழுவாது நடத்திக் கொண்டு வருங்காலத்தில், தினந்தினம் புதிய வடியாருட னமுது கொள்வது வழக்கமாகலான், ஒரு நாள் புதியரின்றித் தேடலும், அவ்வமயம் திகம்பரராய் மௌனவிரதராய் நித்திரையை வென்றவராய் விளங்கிய மௌனசுவாமிகள் சிதம்பரத்தினின்று

மேலைச்சிதம்பரத்திற் கெழுந்தருளவும், அவ்வடியரை யழைத்து வந்து தமது வீரசைவ முறையி னனுட்டானமுந் தவறு திருக்க வம்மௌன மூர்த்தியின் சடையிற் சிவலிங்க மொன்ற ணிந்து கூட்டவைத் தமுதருந்தினர். அதனுற் சிதம்பரத்தி லிருக்கும் மௌன சுவாமிகளின் பரம்பரை சிவலிங்க தாரண மாயதென்பர். இந்நிகழ்ச்சி சாந்தலிங்க சுவாமிகளின் றுறவு காலத்தி லென்றுஞ் சாற்றுவர். சுவாமிகளின் கல்வித் திறத்தாலுஞ் சாந்தங் கருணை முதலிய வுத்தம குணங்களாலும் ஞான தீரத்தாலு மிவரது புகழ் தேசமெங்கும் பரவ, ஆங்காங்கிருந்து முத்தி விருப்புடைய வில்வாழ்வினருந் துறவினரும் வந்து ஞானுபதேசம் பெறுபவ ரும், பெறும்பொருட்டுச் சமயம் பார்த்திருப்போரும், நூலாய்வோ ருமா யடியர் குழாங்குழுமியது. சிவபெருமானின் றிருவரு ளா லடியர் வேண்டிய வேண்டியயாங் கெய்தும்படி யுபசரிக்கப் பட்டனர். சாத்திரபாடஞ் சொல்லும்போது மற்றையபோது மதிதீவிர வைராக்கியத்தையே யுபதேசித் தருளுவதை யடியரிற் சிலர், "என்னே, சுவாமிகள் தாமில்வாழ்க்கையி லிருப்பவரா யிருந்து கொண்டு பரம விரத்தியை யுபதேசித்தருளுகின்றனர்," என வொருவருக் கொருவர் தங்களுள் வினவிக்கொண்டு வருவதை சுவாமிகள் குறிப்பி லுணர்ந்து, அவர்களையந் தீர்ந்து தெளியக் கருணை கூர்ந்து, ஒருநாள் பாட மாரம்பமானதும் ஞானம்பிகையை யழைத்துத் தமது மடிமீ திருத்திக்கொண்டு பாடஞ் சொல்லி யருளினர். கற்போர் ஆச்சரியத்துட னென்றுந் தமக்குப் புலப் படாத முன்னைய சந்தேகந் திடப்பட்டுக்கொண்டே வரும்போது, சுவாமிகளும் ஞானம்பிகையும், திரு நீலகண்டக் கைலை நாயகனுங் கௌரியுமாகத் தோன்றக் கண்டனர். சிலர் திடீரென வெழுந்து விழுந்து வணங்கியும், சில ரெம்பெருமான்றிறத் தென்னே நினைந் தேம், என்னே வாயாற் பிதற்றினேம், என்றெண்ணி மதிமயங்கிச் செய்வதறியாது நிற்போரும், சிலர் தந்தைதா யனையா யெம்பிழை பொறுக்க, எங்கருணை வள்ளால் பொறுக்க, சிறியேந் தவறிழைத் தலும் பெரியோய் பொறுத்தலு மியல்பன்றோ வெனத் துதிப்பவரு மாயினர். சுவாமிகளோ மிக்க தயையுடன் கையமர்த்தி யினிது கூறியருளினர்.

தம்பின்னு முலகோ ருய்யத் திருவுள்ளங்கொண்டு, சாதனக் கிரமமாக, கோலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், என்னு நான்கு நூல்களையுஞ் சீவ காருண்ணியம், ஈசுரபத்தி. பாசநீக்கம், பரம ஞான மென்பவையை யுணர்த்துவனவா யுரைத்தருளினர்,

கொலைமறுத்தலோ, அநேகவித வாதிகளை முன்னிட்டு, இனி வினவுதற்கில்லை யென்னும்படி யவர்களது வினாக்களுக்கு விடையாக விருபத்திரண்டு செய்யுட்களான் முற்றுப் பெறுகிறது. கொலைமறுப்பைப் போதிக்கு நூல்கண் மற்று மிருப்பினு மிது போன்று முறைப்படுத்தியும் வினவுவாரின் பக்குவத்திற் கேற்பவும், கேட்டபின் மனப்பூர்வமாய் மறுத்தற் கியலாமலும், யுக்தி திருட்டாந்தங்களோடு கூடியதாயும், காருண்ய முடையார்க்கும் வேதாகம புராண சாத்திரங்கட்குஞ் சம்மதமாயும், கொலை, புலாலுணவு நீக்கத்தைப் போதிப்பதொன் றில்லையென நூலுணர்ந்தோர் நுவலுகின்றனர். இதற்குரையுங் கற்றோரே யன்றிக் கல்லார்க்கும் விளங்குவதாய், இனிய வசனங்களாய், உலோகாயதன் முதன் மாணாக்கன்வரை வாதிகளின் வினாவின் பிரகாரத்தை விளம்புவதாய், அவரவர்க்குத் தகுந்த வகையான விடைவாக்கியங்களோடு கூடியதாய், பிரமாண நூல்களின் செய்யுட்களை யுதாரணங்களாகக் கொண்டுநின்று, கற்போ ரியாவருங் களிக்கும்படியாகி நூலாசிரியர் கருத்தைச் செவ்வனே தெளிவிப்பதாகும். இந்நூலானே யித்தமிழ் நாட்டிற் கொல்லா விரதமும் புலாலுணவு மறுப்புங் கொண்டோ ரெண்ணிலராவர்.

மற்றைய நூல்களினருமை கூறுதற்கியலாததாய் கற்போரே யினிதுணர்வர். சாந்தலிங்க சுவாமிகளின் சரிதங் கூறியருளிய பெரியார் "கூசலறக் கருணை கூட்டுங் கொலைமறுப்பு—மீசனது பத்திக் கினிதாஞ் சதகமும்பொய்ப்—பாச முழுதும் பறித்தெறியுந் தீபமுநெஞ்—சூசனிக ராட்டொழிக்கு முந்தியுமா நூற்பெயரே," என்றும், "பெற்றதைக் கீழாக்கிப் பெறுததனை மேலாக்குங்—குற்ற முயிரின் குணமென்றோர் பாசுரத்திற்-சொற்றனனவ் வாறுபல சொற்களுல கத்தனையும்—விற்றளித் திட்டாலும் விலைமேவா விண்டனனே," என்றும், "எம்மதத்தி லுள்ளவர்க ளொந்நிட்டை சொன்னாலுஞ்—சம்மதமே யாமெமக்குத் தற்போதமாயிலெனப்—பொய்ம்மதத்தோர் நாணப் புகன்றருளு மப்புனிதன்—மும்மதமாப் போலு முழுஞான வீரனம்மா" என்றுங் கொண்டாடியுள்ளார். அன்றியும், "ஆனந்த மோனம்வரு மாசையறு மெய்ப்பொருளு—மோனந்த நிட்டையென முன்னம்வருந்—தேனந்து, முந்தியார் நூறு முதாரணத்தோ டேபடித்த—புந்தியார்க் கீதே பொருள்." என வுந்தியாரின் பயனை மற்றொரு பெரியாரு முரைத்தருளினர். கற்றார் யாரே யிந்நூல்களி னருமையைக் கண்டு காமுறாதார்?

வைராக்கிய தீபத்தில், புறத்துறவே யகப்பற்றையும் வாசனையை யுங் கெடுத்து, அஞ்ஞான விருடேறந்து ஞான மடைதற்குச் சாதன மெனவும், துறவற நியமங்களையும் வற்புறுத்திக் கூறியிருத்தலின், இவரது மகிமை யறியாத் துறவினர் சிலர், கையேட்டுத் தம்பி ரானிடத்து "இல்வாழ்வினருக்குத் துறவி னனுபவமுந் துறவோர் க்கு விதித்தலுங் கூடுமோ"? என வழக்கிட்டனர். தம்பிரானு மவர்கட்குச் சமாதானஞ் சாற்றிவிட்டு சுவாமிகளின் சந்நிதியில் வந்து, "நூலாசிரியரி னனுட்டானத்தை யொட்டியே நூலின்கருத் தும், நூலின்கருத்தை யொட்டியே நூலாசிரியரி னனுட்டான முங் கொள்ளப்படு மாதலா லிந்நூ லுலகி லெங்கும் பயன்படு தற்குச் சிறிது தடைபோலும்," என்றனர். சுவாமிகளு மகிழ்ச்சி யுற்றுத் துறவிற் கொருப்பட்டு சிவபெருமான் றிருவுள்ள மெவ் வாறோ வெனத்தெரியக் கையேட்டுத் தம்பிரானுடன் மற்றையோ ரையுநோக்கி, "இன்று யாம் பிச்சைக் கேகின்றேம்; முதலிற் பாலன்னங் கிடைப்பின் பேருரெம்பெருமான தாஞ்ஞையெனத் துறவறங் கைக்கொள்வேம்," என்றுரைத்தருளினர். உச்சி யம்போதின் மீதரும் பசிக்குச் சாதிசமய மின்ஞரினியா ரென வெண்ணுது திருவருட் சிந்தையுடன் பிச்சைக்குச் செல்லவும், சென்றவிடத்தின் முன்ன ரொருகோபாலனது குடிசையினின்றும் பாலடிசில்வரவும், சுவாமிகள் திருவருட் செயலை நோக்கி யுவப்புட னவ்வடிசிலைக் கையாரவேற் றவ்விடத்தே யுண்டு மற்றுஞ் சென்ற சென்ற விடமெல்லா மவ்வன்னமே கிடைக்க வாங்கியுண்டு பசி தீர்த்துக் கொண்டு மடத்திற்கு வந்து தருமவாழ்க்கைத் துணைவி யாகிய ஞானம்பிகையைநோக்கி, இனிநாந் துறவாச்சிரமம் பூணத் துணிந்தேம், ஆதலால் நீ நினது தமையரிடத்தே சென்று சான் றோர்க்குச் சம்மத சீலத்துட ளொழுகுவாய்" எனக்கூறி யாசீர் வதித்தனர். அக்கட்டளையின்படியே யம்மையாரும் பலதரம் வணங்கி நன்மொழி பெற்றுச் சென்றனர்.

பின்பு சுவாமிகள் துறவுபூண் டவ்வாச்சிரமத்திற் கேற்பப் பிட்சையாதி நியமங்களோடு மிக்க வைராக்கியத்துடன், "அதி தீவிர விரத்தர்," எனத் துறவோரு மறவோரு மறையும்படி யிருந்தனர். சுவாமிகளை யன்புடன் வந்து தரிசித்தோர், தரிசன வேதிமுன் னிரும்பு போன்று மாயாப் பாச மாய்ந்த பாசராய்ச் செல்வர். அதிகமா யறைவதென், தெருவிற் பயிக்கத்தின்பொ ருட் டொருநாள் செல்லும்போ தொருசிறுவனை யன்பினு ளேக் கிப் பரிசிக்கவும், அதுமுதல் லச்சிறுவ னுட்குநாட் பற்றுநீங்கி சுவாமிகட் கடியனுயின, னுதலால், சுவாமிகள் வீதிவழி வரும்போ தெல்லாம் மைந்தரைத் தாயர் மறைத்து வைப்பரென்பர்.

தாம் தம்மையண்டினோரைப் பக்குவப்படுத்தியும், அவரவர் பக்குவத்திற்கேற்பக் கொல்லாமை, ஈசுரபத்தி, பந்த மறுத்தல், பர ஞான மென்பவைகளை யுபதேசித்தருளினர். இவரது சீடர் பலரே யாயினு மவர்களது திருநாமங்களுஞ் சரிதைகளு மறைந்தன வாயினு மவருட் சிறந்தவரு ளொருவரும் பெருந்தவத்தினரு மாகிய குமாரதேவ ரென்னு முனிவர் பிரசித்தி பெற்றவர்.

இவர் கன்னடதேயத் தரசராய் வீரசைவ நெறியினராய் வாழு நாள்,நல்விவேகந் தோன்ற வனைத்தும்விட்டு ஞானசிரியரைத் தேடி நற்றலங்கடோறுஞ் சென்று வரும்போது திருப்பேரூரில் சுவாமி களின் கீர்த்தி கேள்வியுற்று வந்து தரிசித்து, இம்மூர்த்தமே நம்மை யுய்விக்கவந்த விறைவனெனக் கருதித் தம்மை யடிமை கொள்ள விண்ணப்பித்தனர்.

சுவாமிகள் இவரது தீவிர பக்குவ முணர்ந்து முணரார் போன்று, "அரசராயிருந்தோர்க்கு நம்மிடத்தென்ன காரியமிருக் கின்றது; பிரார்த்தித்தலால், எருதிற்குப் புல்லறுக்கப் போகலாம்," எனக் கையேட்டுத் தம்பிரானிடத்துக் கூறவும், அவரு மவ்வுத் தரவைக் குமார தேவரிடத்துத் தெரிவிக்கவும், திருத்தொண்டு கிடைத்தது மகாபாக்கிய மென்னுங் களிப்புடன் சென்று புல் லறுக்கும்போது கையறுப்புண் டிரத்தஞ் சொரிவதை யயலிற் புல்லறுப்போர் கண்டு, தாங்களே யறுத்துக் கட்டிச் சுமந்துவந்து மடத்திற் சேர்த்தனர். இவ்வண்ண மூன்றுநாள் கழிந்தபின் கையேட்டுத் தம்பிரானறிந்து, இப்பணியை மாற்ற சுவாமிகளி டத்துத் தெரிவித்தனர். சுவாமிகளுங் கிருபையுடன் குமார தேவ ரைப் பார்த்துக் கோபிப்பார் போன்று சிலவசனங் கூறவும், அது கேட்டு வணங்கிப் பயந்தொருபுற மொதுங்கி மௌனமுற்றிருந் தனர். பின்னவரை யடியார் கூட்டத்துடன் சேர்த்துச் சிலநாட் களுக்குள், பாலனின் பசிகண் டாற்றுந் தாயென, சுவாமிகள் தீட்சையாதிகளும் ஞானோபதேசமுஞ் செய்தனர். குமாரதேவ சுவாமிகளுந் தெளிந்து சமாதியிலிருக்கு நியமங்கொண்டிருக்க, சுவாமிக ளிவரது மனநிலைமையைக்குறித் துண்மகிழ்ந் திருந் தொருநா ளவரை நோக்கி, "அன்ப! நினக்கு நேயமாகிய புண் ணிய தலத்துற்று வைகுவாய்," என்றுரைத்தருளவுந் தமதாசிரி யரை வணங்கி வழிக்கொண்டனர்.

குமாரதேவர் வரும்வழியில், திருவாரூரில் வீரசைவ மருளென் போர்க் கிரதத்தை நிறுத்தி யருளென் றறிவுறுத்திப்பின் விருத்தா சலத்தி னதிக்கரை யரசமரநீழலிற் களைத்துவந்து சாய்ந்த போது,

உலக மாதாவாகிய பெரியநாயகியார் மானிடச் சிறுசுந்தரியா யெழுந்தருளிவந்து, ஆலயத்திருந்த சுவர்ண பாத்திர பாலையருந்தக் கொடுத்து "நீ யித்தலத்தே வைகுவாய்," என வறைந்தருளி, மறைந்தனர். சுவாமிகள் தேவி யென்றறிந்து கருணையைத் துதித்திருந்தனர். பின்பம் மரத்திருந்த பைசாசத்திற்குச் சாபத்தை நிவர்த்தித்தும், தன்னை வசஞ்செய்ய வருகின்றானொரு மந்திரவாதியெனப் பத்திரகாளி முறையிடவும், அம்மந்திரவாதியைத் துரத்திக் காளிதேவியைக் காத்தும், இவை முதலிய திருவருட் டிருவிளையாட்டுடன் வசித்திருந்தனர். பிச்சைக்குச் சென்றவொரு பிரபுவின் மனையில், பிள்ளைகட்குக் கல்வி பயிற்றிக்கொண்டிருந்த வீரசைவராய சிதம்பர கவிராஜரைக்கண்டு, அவரது புண்ணிய முதிர்ச்சியாற் குமாரதேவ சுவாமிக ளொருவினை விடுக்கவதற்குப் பயனறியாது பயந்து சுவாமிகளை வணங்கிப் பின்றொடர்ந்தனர். அதுமுதற் கவிராஜ ரச்சுவாமிகளுக் கடிமை பூண் டொனிருந்தனர். குமாரதேவ சுவாமிகள் தமதாசிரியரைத் தரிசிக்குங் கருத்துடன் கவிராஜரைக் கூட்டிக்கொண்டு பேரூர் வந்தனர். அப்போது ததிகாலை யானதால், சுவாமிகள் திருமடத்தின் முற்றத்தைச் சாணத்தாற் சுத்தஞ் செய்யவுங் கூடவிருந்த கவிராஜருந் திருவலகிட்டனர். விடிந்தபின் சாந்தலிங்கசுவாமிகளைத் தரிசித் தருணோக்கம்பெற் றங்கு சிலநாளிருந்தபின் கவிராஜரைச் சுவாமிகளி னருணோக்கத்திற்குப் பாத்திரமாக்கக் கருதி, "இவரிங்கிருக்கலாமே," எனக் குமாரதேவர் தந் தேசிகர்முன் மொழிய, "நமக்குச் சந்ததிசாலும், நீயே யிவனை யழைத்துச்சென்று நினக்குரைத்ததை யுபதேசிப்பாய்," என மொழிந்தனர். குமாரதேவ சுவாமிகளு மாசிரிய ராஞ்ஞைப்படியே விருத்தாசலம் வந்து சிதம்பர சுவாமிகளுக் குபதேசித்தருளினர். இருவரும் சிலநாட்கழித்துத் திருப்பேரூர் வந்து குருமூர்த்திகளைத் தொழுதனர். சாந்தலிங்க சுவாமிகள், கவிராஜ சுவாமிகளி னிலையையுங் கல்வித் திறத்தையு முணர்ந்து, தாமியற்றிய கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், ஆகிய நான்கு நூல்களையுங் கண்ணுடைய வள்ளலாருளிய வொழிவிலொடுக்கத்தையுங் குமாரதேவரிடங் கொடுத்து, இந்நூற்களுக்குரை யிவரை யியற்றச் செய்வாய் என மொழிந்தனர். அவ்வாறே சிதம்பர சுவாமிகளிடத்துக் கொடுக்கவும், சுவாமிகள் வணங்கி யிருகையேற்றுச் சிரமீது கொண்டனர். இருவரும் விருத்தாசலம் வந்தபின்னர், சிதம்பர சுவாமிகள், பரமாசிரிய ராஞ்ஞைப்படி நூல்கட் குரையியற்றி ஆசிரியரின் விடைபெற்றுத் திருப்பேரூர் வந்து சுவாமிகளிடத்துத் தொழுது

கொடுக்க, நன்கு பார்த்துத் தன்கருத்தின் வண்ண முறையியற்றி யிருப்பதற்கு மகிழ்ந்தனர்.

இவ்வுரையி னருமையா னூலணியும் விளங்கி, யரும் புலவர்களாற் போற்றப்பட்டு வருகிறது. தேசிக ரிவ்வுரையை யேற்றுக் கொண்டனரெனத்தெரிந்த குமாரதேவர் பரமப்பிரீதி யுடன் * சிதம்பரசுவாமிகளை மதுரைக்கேகக் கட்டளையிட்டனுப்பி விட்டு, மற்றும் வந்த பக்குவிகட் கனுக்கிரகஞ் செய்தும் விருத் தாம்பிகை தம்முன் வந்து கட்டளையிட்ட வண்ணம், மகாராஜா துறவு முதலிய பதினாறு சாத்திரங்களுஞ் செய்தனர்.

இவ்வாறு சாந்தலிங்க சுவாமிகளின் சீடர் பரம்பரை தமிழ் நாடெங்கும் பரவி வந்தது. சுவாமிகணீண்ட வாயுளுடனிருந்து திருப்பேரூரில் காஞ்சிமாநதிப் புண்ணிய தீர்த்தக் கரையிற் றம் மாணுக்கர்முன், மாசி-மீ மக நட்சத்திரத்தன்று விதேக கைவல் லியநிலை மேவினர்.

ஸ்ரீமத் சாந்தலிங்கசுவாமிகள்
சரித்திரச்சுருக்கம்
முற்றுப்பெற்றது.

சாந்தலிங்கதேசிகன் றிருவடி வாழ்க.

இச்சரிதம் பெரியார் மூலமாகவும் வெளிவந்திருக்குஞ் சில நூல்களின் மூலமாகவுஞ் சேகரித்து வரையப்பட்டது.



---

*சிதம்பரசுவாமிக ளாசிரிய ராணையான் மதுரைக்குவந் தங்கயற் கணம்மையி னருள்பெற்று, திருப்போரூர் சென்று முருகப் பெருமான் சந் நிதியை விளக்கித் திருப்போரூர் சந்நிதிமுறை யென்னும் பாமாலை பாடி யப்பரனடிக்குச் சாத்தி யங்கிருந்தனர்.

சிவமயம்.

## சந்தான குருபரம்பரை துதி.

பதினான்கு சீர் விருத்தம்.

புண்ணியன்கைலைக் குருபரம்பரையிற்
போந்தமெய்கண்ட சந்ததியிற்
பொருவில்சீர்த் துறைசைநகர்வளர்
சிவப்பிரகாசர்தம் பொன்னடிபுனைந்த
எண்ணினற்றவத்துச் சாந்தலிங்கேச
னெல்லையின் மோனானந்தநிலையாம்
இரும்பொருளளித்த விருத்தவம்பிகையா
ளின்புறுங் குமாரசத்குரவன்
திண்ணியவருள்சேர் சிதம்பரதேவன்
செப்புறும் பழனிமாமுனிவன்
திருவமாறுமுகன் குவாகத்தான்
செப்பும் வேலாயுதத்திறலோன்
கண்ணினுக்கிமையாங் குழந்தைவேலடியேன்
கருமலங்களைந்த முத்தையன்
கருதுமிச்சந்தானக் குரவர்கட்டாட்
கமலமுண்ணினைந்து கைதொழுவாம்.



கணபதி துணை.

# கொலை மறுத்தல்.

## மூலமும் உரையும்.

### விநாயகர் துதி.

*இன்ப மாய தருதிடை யோங்கவுந், துன்ப மாயது தூரத்து ணீங்கவு, முன்ப ராபரன் மொய்குழ லோடணைந், தன்பி னீன்றவோ ரானையைப் போற்றுவாம்.*

இன்பமாயது இடையறாது ஓங்கவும் - என்பது. [1] மனோரதமான நன்மைகள் மேன்மேலும் உண்டாகவும்,—துன்பமாயது தூரத்துள் நீங்கவும். எ - து. [2] தாபத்திரயங்களினாலே வரும் இடையூறுகள் தூரத்தின்கண்ணே நீங்கவும்,—முன் பராபரன் மொய்குழலோடு அணைந்து அன்பின் ஈன்ற ஓரானையைப் போற்றுவாம். எ - து. ஆதிகாலத்திலே பரமசிவன் பராசத்தியோடு கூடி அன்புடனே பெற்றருளிய ஒப்பில்லாத விக்கினேசுரனாகிய யானையைத் துதிப்பாம். என்றவாறு.

துன்பந் தூரத்துணீங்க என்றதனால், தம்முடைய மனோ வாக்குக் காயத்துத் தோன்றாமல் நீங்க என்றாரெனக் கொள்க. இன்பமாயதோங்கவும் துன்பமாயது நீங்கவும் என்றதனால் ஆனந் தப்பேறும் அஞ்ஞானத்திழப்பு மென்றுமாம்.

இதன்கருத்து. இந்நூல் செய்து முடியுமளவும் விக்கின நிவிர்த்தியுண்டாகவும், அதன்மேலும் உலகத்தின் கண்ணே குற்றந் தீர்ந்து விளங்கவும், வேண்டி விக்கின கர்த்தாவை வழிபட்டது.

---

1. மனோரதம் - மனத்திச்சித்தது. 2. தாபத்திரயம் - ஆதியாத்மிகம் ஆதி பௌதிகம் ஆதி தெய்விகம் என்னும் முத்துயரம்.

## நூல்.

திருமலிபூ மகனாதி யைவருமா மொருபரமிச் சிறிய னேற்குந், தருமிருதா டலைமிசைக்கொண் டஞ்சினர்தீக் கறங்கொலைமை தள்ளிச் சார்தற், கருமறையாகம நெறிச் சொற் பொருளமைத்திக் கொலைமறுத்த லறஞ்சொன் மாண்பா, னிருமுணர்வி லேனுரையு நலந்தருமென் றுளந் துணிந்தீண் டியம்பா நின்றேன். (1)

திருமலி பூமகனாதி ஐவருமாம் ஒருபரம் இச்சிறியனேற்கும் தரும் இருதாள் தலைமிசைக்கொண்டு. எ - து. அழகு நிறைந்த செந்தாமரை மலரினிடத்தே தோன்றிய பிரமாமுதலாகிய பஞ்சகர்த்தாக்களுந் தானேயாய் அவர்களையுங் கடந்து சர்வவியாபியாய் வாக்குமனாதீதமாயிருக்கும் பரமசிவம் தன்னுடைய கருணையினாலே கரசரணாதி அவயவங்களையுடைய ஆசாரியமூர்த்தியாய் இப்பூமியின்கண்ணே எழுந்தருளிவந்து ஒன்றுக்கும் பற்றாத சிறுமையுடையேற்கும் பிறவியாகிய கடலை நீந்தும்படி தெப்பமாகத் தந்தருளிய இரண்டு திருவடிகளையும் என் புன்றலைமேல் வைத்துக்கொண்டு அவைகளினது அருளினால்;—தீக்கு அஞ்சினர் கொலைமை தள்ளி அறஞ்சார்தற்கு. எ - து. நரகத்தில் வீழ்வதற்கு அஞ்சினவர்கள் கொலைத்தன்மையாகிய இடுக்கணை அப்பாற் படுத்தி தருமத்தை அடையும்பொருட்டு,—அருமறை ஆகம நெறிச் சொற்பொருள் அமைத்து. எ - து. அருமையாகிய வேதாகமங்களிற் கொல்லாமைக்கு ஒதிய சத்தார்த்தங்கள் பொருந்தச் செய்து,—இக்கொலைமறுத்தல். எ - து. இந்தக்கொலைமறுத்தலாகிய நூலை,—அறஞ்சொல் மாண்பான் இரும் உணர்வு இலேன் உரையும் நலந்தரும் என்று உளந்துணிந்து ஈண்டு இயம்பா நின்றேன். எ - து. அறத்தின் பகுதியைக் கூறிய மாட்சிமையினாலே மிகுந்த அறிவின்மையனாகிய என்னுடைய புன்மொழியும் பெரியோரது சபையின்கண் நன்மையைத் தருமென்று மனசிலே துணிந்து இவ்விடத்து யானறிந்த மாத்திரஞ் சொல்லுகின்றேன். எ - று.

இ - து, கடவுள் வணக்கமும் முதனூலும் இந்நூலின் பெயரும் விடயபிரயோசனாதிகாரி சம்பந்தமும் அவையடக்கமுங் கூறியது.

தருமிருதாடலை மிசைக்கொண்டு என்பதனால், கடவுள் வணக்கமாயிற்று. அருமறையாகமநெறி என்பதனால், முதனூலாயிற்று,

இக்கொலைமறுத்தல் என்பதனால், நூற்பெயராயிற்று, இந்நூற்கு விடயமாவது கொல்லாமை. அது கொலைமைதள்ளி என்பதனாற் பெறப்பட்டது. பிரயோசனம் தருமப்பிராப்தி. அது அறஞ் சார்தற்கு என்பதனாற் பெறப்பட்டது. அதிகாரி நரகத்துக்கு அஞ்சினோன். அது அஞ்சினர் நீக்கு என்பதனாற் பெறப்பட்டது. சம்பந்தமாவது சத்தார்த்தங்கள். அது சொற்பொருளமைத்து என்பதனாற் பெறப்பட்டது. அறஞ்சொன்மாண்பானென்னுரையு நலந்தரும் என்றவதனால், அவையடக்கம் பெறப்பட்டது. அஃது எங்ஙனமெனின், சத்தத்திலே எழுத்துச் சொற்பொருள் யாப் பணிக் குற்றங்கள் பொருந்தினும், அர்த்தத்தில் வேதாகம விருத்த மாயினும், முடிவின்கண் எவ்விதத்தாயினும் வேதாகம சித்த மாகிய கொல்லாமையைச் சாதித்தலின் பெரியோர் இகழாரென்று உரைத்தது. என்போலுமெனின்; திருவள்ளுவர் *"பொய்மை யும் வாய்மையிடத்த புரைதீர்ந்த - நன்மை [1] பயக்கு மெனின்," என்ற பிரமாணம் போலுமென்றறிக. (க)

மேல் இந்தச்சாத்திரம் விளங்குதற்கு ஒரு [2] பீடிகாத்தம்பனங் கூறுகின்றார்.

எடுத்துளவெச் சமயிகளு முலகருஞ்சா ரோரவைவயி னிடையிற் றோன்று, முடுத்தனைச்சூழ் தரவிளங்கு மதியி னுயர் சைவரைவந் தொருவன் றாழ்ந்தீண், டடுத்தபல வுயிர்த்தோற்றத் துயர்வுதாழ் வருளுகென வவனைத் தேற் றித், தடுத்தபுறச் சமயிகட்குத் தாமுறுத்தி நீறுத்துகின்றார் தம்பா லூற்றம். (2)

எடுத்துள எச்சமயிகளும் உலகரும் சார் ஓரவையினிடையில் தோன்றும் உடுத்தனைச் சூழ்தர விளங்கும் மதியின் உயர்சைவரை வந்து ஒருவன் தாழ்ந்து. எ - து. வேதாகமங்களைக் கைக்கொள் ளும் சைவர் முதலாகிய உட்சமயிகளென்றும் அவைகளைக் கைக் கொள்ளாத உலோகாயதன் சமணன் பௌத்தன் முதலாகிய புறச்சமயிகளென்றும் எடுத்துச் சொல்லப்பட்ட பல சமயவாதி களும் இக்காலங்களில் விரிவாகத் தோன்றிய கற்பனைசமயிகளும் இவர்களல்லாத லௌகிகருங் கூடியிருந்த ஒரு பெரிய சபையின்

1. பயக்கும் - உண்டாக்கும். 2. பீடிகாத்தம்பனம் - முகவுரை

கண்ணே, நட்சத்திரகணங்கள் தன்னைச் சூழ நடுவே விளங்கும் பூரணசந்திரனைப்போலத் தோன்றா நிற்கும் ஒரு சைவாசாரியரை ஒரு பக்குவியானவன் வந்து நமஸ்காரம்பண்ணி எழுந்து [1] அஞ்சலி யஸ்தனாய் நின்று, - ஈண்டு அடுத்த பல உயிர்த் தோற்றத்து உயர்வுதாழ்வு அருளுகென. எ - து. இவ்வுலகின் கண்ணேயுள்ள நாலுபேதமாகிய சீவயோனிகளில் ஒன்றுக்கொன்று அதிகமுந் தாழ்வுமாயிருக்குமோ எல்லாஞ் சமமாயிருக்குமோ தேவரீர் திரு வாய்மலர்ந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, - அவனைத் தேற்றி. எ - து. அவனிருதயஞ் சம்மதிக்கும்படிக்கு வேதாகமங் களிலுள்ளபடியே கூறித் தெளிவிக்கு மளவில், - தடுத்த புறச் சமயிகட்கு உத்தரமுறுத்தித் தம்பால் ஊற்றம் நிறுத்துகின்றார். எ - து. அப்படி நீர் சொல்லுகிறது கூடாதென்று தடுத்துக் கூறிய புறச்சமயிகளுக்கு எதிருத்தரமும் உதாரணங்களும் அச் சபையினிருந்துள்ள [2] ஆபாலபண்டிதராகிய சர்வசனங்களுக்குஞ் சம்மதம் வரும்படியே [3] யுக்தியுக்தமாக எடுத்துக்காட்டித் தம்மி டத்திலுண்டாகிய நிலைமையைத் தாபிக்கின்றார். எ - று.

இ - து. சகல சமயங்களுக்குள்ளும் சைவசித்தாந்தம் அதிக மென்றும், அதில் உண்டாகிய வாக்கியம் வேதாகமசார மாகையால் அதுவே பிரமாணமென்றும், கூறியது. (உ)

இந்த உலகத்தின் கண்ணே யுண்டாகிய இருவகைத் தோற் றமும் அவற்றுளுயர்வு தாழ்வுகளுங் கூறுகின்றார்.

ஊற்றமிகுஞ் சராசரத்து ளுயர்ச்சிசரஞ் சரத்துணரர்
நரர்தம் முள்ளு, மேற்றமுந்தாழ்ச் சியுமுளபல் லுயிர்செ
குத்துண் டடலைவளர்த் திடுங்கி ழும்மேல், சாற்றுமுயிர்க்
கொலைபுரித றுயர்நெடுநா ளென்றுமுட றூன்பொய் யென்
றுங், தேற்றமிக்கேன் றுயிர்தமைவீட் டினு மவற்றி னுயிர்
புரக்குந் தீதி லோரே (3)

ஊற்றம் மிகும் சராசரத்துள் உயர்ச்சி சரம். எ - து. அறிவு டைமையை ஒன்றுக்கொன்று அதிகமாகவுடைய [4] தாபரசங்கமங்

1. அஞ்சலியஸ்தன் - கூப்பியகையன். 2. ஆபாலபண்டிதர் - சிறு பையன்முதல் வித்துவான்வரை. 3. யுக்தியுக்தமாக - ஊகம் பொருந்துமாறு. 4. தாபரசங்கமம் - அசரசரம் - நடவாதன, நடப்பன.

கவென்று சொல்லப்பட்ட இருவகைத்தோற்றத்தினுள் அறிவி னுயர்ச்சியினுலே தாபரங்களினுஞ் சங்கமமே அதிகமென்று சொல் லப்படும்.—சரத்துள் நரர். எ - து. அச்சரங்களினுள்ளும் அறிவி னுயர்ச்சியால் மனுஷரே அதிகமென்று சொல்லப்படுவர். ஆகா ரம் நித்திரை மைதுனம் பயம் எல்லாச்சரங்களுக்குஞ் சமமாயி ருக்க, மனுஷரை அதிகமென்றது எப்படியெனில், அப்படி ஆகா ராதி மிருகங்களுக்கு உண்டாயினும், அவற்றுள்ளும் மனுஷரிடத் தில் விசேடத் தன்மையுண்டு. அஃது எப்படியெனின், கார்த்தல் - புளித்தல்-உவர்த்தல்-துவர்த்தல்-கைத்தல்-தித்தித்தலாகிய அறுசு வைப் பதார்த்தங்களுந் திவ்யாமுதமுமாகிய போசனங்கள் அறிந்து புசித்தலும், சிறக்க 1 ஒப்பனைசெய்த தூங்குமஞ்சத்தின் கண்ணே நுண்ணிய பஞ்சிபெய்த மெத்தையின்மேல் தலையணை முதலாகிய கொட்டைகளும் பரப்பிச் சிறந்த பட்டு 2 விதானத்தின் கீழ் நித் திரை செய்தலும் ஆலிங்கனமாதியாகிய அறுபத்துநாலு கரணங் களுடன் ஸ்திரீகிரீடை பண்ணுதலும், மனோவிசாரத்தின் மிகு தியால் அச்சமடைந்த காலையினும் தேறி அதற்கேற்ற உபாயஞ் செய்து துயரம் நீக்கிக்கொள்ளுதலும், மிருகாதிகளுக்கு இன்மை யால்; அவற்றுள் மனுஷர் அதிகமெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம்: அருட்பிரகாசம். *"ஆறுசுவையோ டருந்துத னுண்பஞ் சணைதுயிறல்— 3கூறு கரண விதங்களின் மாதரைக் கூடிடுத—றேறி விசாரத்தி னச்ச நீங்குத—றேறின் மண்மேல்—வேறு முயிர்க ளுக்கின்மை யானரா் மேலென்பவே." என்றும், மற்றும் வருவனவற்றுற்காண்க. இதுவன்றியும், மிரு காதிகளுக்கு இன்மையாகிய நாணுடைமையும் மனுஷருக்கு உளது. ஆதலினுலும் விசேடமெனக் கொள்க. இதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். 4 *"ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல— நாணுடைமை மாந்தர் சிறப்பு." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

நரர் தம்முள்ளும் ஏற்றமும் தாழ்ச்சியும் உள. எ - து. இங் ஙனம் உயர்ச்சி யென்று கூறப்பட்ட மனுஷருள்ளும் உயர்ந் தோர்களுந் தாழ்ந்தோர்களும் உண்டு. அங்ஙனமாயின், உயர்ந் தோர் யாவர் தாழ்ந்தோர் யாவரெனின்;—பல்லுயிர் செருத்து

---

1. ஒப்பனை - அலங்காரம். 2. விதானம் - மேற்கட்டி. 3. கூறு கர ணவிதங்களின் - அறுபத்துநாலு கரணவகையாக. 4. ஊண் உடை எச்சம்-ஊணும் உடையும் அவை யொழிந்தனவும்.

உண்டு உடலை வளர்த்திடும் கீழ். எ - து. விவேகத்தையுடைய மனுஷராகத் தோன்றியும் மற்றுமுண்டாகிய பலவுயிர்களையுங் கொன்று அவைகளின் மாமிசத்தைப் புசித்து தமது மலவுடலை வளர்க்கா நிற்பர்கள் கீழோர். அம்மேல் சாற்றும் உயிர்க்கொலை புரிதல் நெடுநாள் துயர் என்றும் உடல்தான் பொய்யென்றும் தேற்றம் மிக்கு என்று உயிர் தமை வீட்டினும் அவற்றின் உயிர் புரக்கும் தீது இலோரே. எ - து. அழகிய மேலோராவார் உலகின்கண்ணே சொல்லப்பட்ட யாதொரு சீவகொலையைப் பண்ணுமிடத்து அக்கொலைமை யானது ஆன்மா நித்தியனாதலால் அநேககாலந் தொடர்ந்து துக்கத்தை விளைக்குமென்றும் இச் சரீர வாழ்க்கை அநித்தியம் இதனை நாங்காப்பதற்கு எண்ணுதல் நீர்க்குமிழிக்குப் பூண்கட்ட நினைத்தலையொக்கும் ஆதலின் இதனைக்குறித்து நம்மை நெடுநாள் வருத்துவதொரு சீவகொலையைப் பண்ண வொண்ணாதென்றும் அறிவினை மிகப்பொருந்தி ஒரு சீவனாலே தமக்குச் சரீர ஹானிவருமிடத்தும் அதினுடைய சரீரத்துக்கு ஒரு ஹானிபண்ணாமற்காக்குங் குற்றமற்ற நல்லோர்கள். எ - து.

இதற்குப் பிரமாணம் :—திருவள்ளுவர். * "தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி—தின்னுயிர் 1 நீக்கும் வினை." என்றும், காசிகாண்டம். * "பிறரிடை 2 யின்னாவி யற்றிடற் றமக்குப் பிழைப்பறவெய்து மென்பதனை—யறிகுந ரறிஞ ராதலா லுயிர்களனைத்தையுந் தம்முயிர்போல—நெறியினிற் கருத லினியவாமைந்து 3 புலனையு நெறியலா வழியிற்—4 பொறியினிற் செலுத்தா தடக்கனன் குணர்ந்தோர் 5 புலமையோ ரொழுக்கெனப் புகல்வார்." என்றும், மற்றும் ஒருவனவற்றாற் காண்க. இதன் கண் தேற்றமிக்கென்பதனால், உயர்ச்சி தாழ்ச்சி அறிவைப்பற்றி நின்றதெனக்கொள்க.

இ - து. சராசரபேதங்களின் மனுஷரே அதிகமென்றும், அவருள்ளுஞ் சீவகொலை பண்ணாதவர்களே உயர்ந்தோரென்றும் கூறியது. (௩)

மேற் சீவகொலை செய்தமையால் வருந் தாழ்வேதென்று கூறிய 6 உலோகாயதனை நோக்கி உத்தரங் கூறுகின்றார்.

1. நீக்கும்வினை - கொல்லுதல். 2. இன்னா - துயரம். 3. புலன் - இந்திரியம். 4. பொறி - விடயம். 5. புலமையோர் - விவேகிகள். 6. உலோகாயதன் - இவ்வுலக போகத்தையே மெய்யெனக் கொள்வோன்.

இங்ஙனம் வாதிகள்வினு பாட்டிலே கூறுமையின், கற்பனையேயெனின்; அப்படியன்று. இந்நூல் அவாய் நிலைப்பொருள். அஃதாவது வினுவினைக்காட்டுவதாகிய விடயம்மாத்திரம் கூறுவது. ஆதலின் விடையினுக்கு இசைந்த வினுவினை உரையின் கண் வருவித்ததெனக் கொள்க.

தீயவினைத் தலைகொலைமா துயர்தரும்பின் புன்மை
தொன் னூறெறித்த வாற்றீ. டாயவரோ வினைகளிகத்
தினுமுறலாற் பலமருந்தற் கங்கோ ரங்க, மேயுமதிற்
பாயுமிதி லறிவுருவே றிவண்புகலு முளதி யாமுங், காய
மிது கிடப்பமற்ஃறு ருடல்கனவிற், றினம்புகலோர் காதை
யன்றே (4)

கொலை தீயவினைத்தலை. எ - து. கொலையானது ஒருவன் செய்யுந் தீவினையாகிய ஒருருவிற்குத் தலையென்னப்படும். அஃது எத்தாலென்னில் உயிர்களுக்கு இதஞ்செய்தலே புண்ணியமும் அகிதஞ் செய்தலே பாவமும் என்று அறநூல்களெல்லாம் ஓதுதலின்; கொலைமைக்கு மேம்பட்டபாவம் அதிகமின்மையின், கொலைமையே பாவத்துக்கெல்லாம் முதன்மையெனப்படும். ஆதலிற் கொல்லாமையே புண்ணியத்துக்கெல்லாம் முதன்மை யென்பதும் ஆயிற்று.

இதற்குப் பிரமாணம் : திருவள்ளுவர். * "அறவினை யாதெனிற் கொல்லாமை 1 கோறல்—2 பிறவினை யெல்லாந் தரும்." என்றும், சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம். * "நல்ல நினைப்பொழிய நாள்களி லாருயிரைக்—கொல்ல நினைப்பனவுங் குற்றமு மற்றொழியச்—செல்ல வயற்கழனித் தென்றிருவாரூர்புக்—கெல்லை மிதித்தடியே னென்றுகொ லெய்துவதே." அன்றியும், * "கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே—நின்ற பாவவினைக டாம்பல நீங்கவே—சென்று சென்று தொழுமின் றேவர் பிரானிடங்—கன்றி னோடு பிடி சூழ் தண்கழுக் குன்றமே." என்றும், சிவஞானதீபம். * "கொலையாதி நெறியகன்ற ஞானந்தானே கூறரிய மேலான ஞானமாகுங்—கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே குற்றமில்லா நற்றவமென் றுரைக்கு நூலுங்—கொலையாதி யகற்றிய நல்லறங்க டாமே குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங்

1. கோறல் - கொல்லுதல். 2. பிறவினை - பாபச் செய்கைகள்.

—கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே கூறிலுயிர்க் கிதமானவாழ்வ தாமே.'' என்றும், சிதம்பர புராணம். * "வருண மெண்ணிலவுள் வேத மறையவ ருயர்ந்தோர் நீதி—யருளுமாச் சிரமந்தன்னிற் றுறந்தவ ரதிகரென்ப—பெருகிய வறத்திற் கொல் லாப் பேறறம் பெரிது நன்கு—தருபவ ரவருட் டக்க தேசிகர்தலைவ ராவார்.'' என்றும், 4 இதிகாசம். * " ஆனையடியி லடங்காவடி யில்லை — தானது போனிற்கின்ற தன்மைதா—னூனுயிரைக்— கொல்லா வறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கு—மெல்லா வறமு மிசைந்து.'' என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல்வினு. இங்ஙனம்—கொலைமையான் வரும்பாவமானது என் செய்யும்?

மேல்விடை. மாதுயர்தரும். எ - து. நெடுநாள் நீங்குதற்கு அரிதாகிய மகத்துவமுடைய துன்பத்தைத் தரும்.

மேல்வினு. இங்ஙனம் ஒருவன் கொலைசெய்தவுடனே அத னுல் வருந் துன்பத்தை அனுபவிக்கக் கண்டிலேம்.

மேல்விடை. பின்பு. எ - து. இம்மையிற் சீவகொலைகளைப் பண்ணினவன் இம்மையிலே துன்பங்களை அனுபவியாவிடினும், 1 சரீராந்தத்தில் நரகத்தையடைந்து மகாதுயரங்களை அனுபவித் துப் பின்னும் நரகசேடத்தினுற் பூமியின்கண்ணே தோன்றி அந்தச்சேடபலமாகிய துக்கங்களையும் இவ்விடத்திலே அனுபவி ப்பானென்பதே நிச்சயம். அது என்போலவெனின், ஒருவே ளாண்மை செய்தவனுக்கு அதன் பலமானது 2 காலாவதியிற் புசி ப்புமாய் மேலைக்கு வித்துமானது போலவெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம்: சிவஞானசித்தி. *" மேலைக்குவித்து மாகிவிளைந்தவை யுணவுமாகி—ஞாலத்து வருமா போல நாஞ் செயும் வினைக ளெல்லா—மேலத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்கட்கெல்லா— 3 மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை யோடே.'' என்றும், மற்றும் வருவனவற்றுற்காண்க. இம்மை யிற்செய்த கொலையானது சரீராந்தத்தில் வருத்துமென்பதற்குப்

1. சரீராந்தம்-மரணத்தின்பின். 2. காலாவதி-கால அவதி காலமு டிவு. 3. மூலத்ததாகி-காரணமாகி. 4 இதிகாசம்-பெருந்தேவனுர்பாரதம்.

பிரமாணம் : திருவள்ளுவர். *" உயிருடம்பி னீக்கிய ரென்பர் செயி ருடம்பிற்—செல்லாத்தீ வாழ்க்கையவர்." அன்றியும், *" கொல் லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்—செல்லா துயிருண்ணுங் கூற்று." என்றும், திருமந்திரம். *" கொல்லிடு குத்தென்று கூறியமாக்களை—வல்லிடி காரர் வரிகயிற்றாற் கட்டிச்—செல்லிடு நீரென்று தீவாய் நரகிடை—நில்லிடுமென்று நிறுத்துவர் தாமே." என்றும், சிவதருமோத்தரம். *"உற்றிடவெ ருரைத்தது ய ரனைத்தினையு முயிர்க்கிரக்க—மற்றவைதத் தவை தம்மையவலமெனு தவற்றானைத்—துற்றினரு மற்றுமுள கொலை புரிந்த துரிசினரும்—பற்றுமிலர் படுந்துயர்க்குக் கடுந்தூதர் வலைப் பட்டே." என்றும், சிவஞானதீபம். *" எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகு மிலங்குமுயி ருடலனைத்து மீசன்கோயி—லெவ் வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி யிரங்காது கொன்றரு ந்து மிழிவினோரை—வவ்வியம தூதருந் தண்டஞ்செய்து வல் லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து—வெவ்வியதீ யெழுநர கில் வீழ்த்தி மாறா வேதனைசெய் திடுவரென வோது நூலே." என்றும், இதிகாசம். *" இந்நோய் நமக்குண்டென் றெண்ணுதே யெவ்வுயிரு—முன்னுவக் கொன்றுண்ணு மூர்க்கர்தா - மெந் நோவும்—பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்—றெண் ணப் படுவா ரிசைந்து." என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

நரகசேடமானது மறுசென்மத்தினுந் துக்கந்தருமென்பதற்குப் பிரமாணம் : சிவதருமோத்தரம். *" கருவினுளழிவன் முற்றிக் கழிந்துட னழிவன்காளைப்—பருவமுற் றழிவ னீகை பகர்ந்து பின் னுதவாப் பாவி—பெருவலை கண்ணி யாலும் பிடித்துயிர் வதைத்த பேதை—கருதிய பொருளைத் தக்கோர்க் குதவிடான் றிளைத்தகையன்." அன்றியும், *"அவயவமனைத்துங் குன்றி யழிந் திடு மாக்கை யர்ருன்—சுவையினை விரும்பியுண்ட துட்டர்கள் சோலை தன்னைத்—திவலைய திரைநீர் தேங்குந் திண்ணிய தீரந் தன்னை—யவமதியாலே சால வழித்திடு மற்பர் தாமும்." என் றும், நாலடியார், *" இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளா ய்க்—கரும்பார் கழனியிற் சேர்வர் - சுரும்பார்க்குங்—காட்டு ளாய் வாழுஞ் 1சிவலுங் குறும்பூழுங்—கூட்டுளாய்க் கொண்டு வைப்பார்." அன்றியும், "2அக்கேபோ லங்கை யொழிய விர லழுகித்—துக்கத் தொழுநோ யெழுபவே 4யக்கா 3லலவனைக் காதலித்தூக் கான்முறித்துத் தின்ற—பழவினைவந் தடைந்தக் கால்." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

---

1. சிவலும் குறும்பூழும் - கவுதாரியையும், காடையையும்.
2. அக்கு - சங்குமணி. 3. அலவன் - நண்டு. 4. முற்பிறப்பில்.

மேல்வினா. அப்படிக் கொலைத்தீமைகளைப் பண்ணினவன் சென்மாந்தரத்தில் நரகத்தை அனுபவித்து நரகசேடத்தால் மறு சென்மத்திலுந் துன்பத்தை அனுபவிப்பனென்று துணிந்தது எதினால்?

மேல்விடை. தொன்னூல் தெரித்தவாற்று ஈடாய ஒரோ வினைகள் இகத்தினும் உறலால் உண்மை. எ - து. ஒருவன் செய்த வலிய தீவினைகளானவை மறுமைக்கண் வந்து நரகத்தில் அழுத்துமாயினும் இம்மையிலும் வருத்துவதாகிய தம்முடைய வேகத்தைக் காட்டுமென்று மறைமொழி கூறுகையால் அவ்வுரையின்படியே மிகுத்த பாவத்தின் வேகமானது செய்தவுடனே ஒருத்தனை வருத்தக் காணுதலின் மறுமைக்கண் நரகத்தில் அழுத்துமென்பதே சத்தியம். வேகமாவது யாதெனில், விஷத்தை யுண்டானொருவனை அந்த விஷமானது வருத்திக்கொல்லுதலின்முன்பே [1]நெடிவுதோன்றுதல் போலவும், நெருப்பினாற் சூடுண்டானொருவனுக்கு அது புண்ணாவதன் முன்பே எரிதல்போலவும், சிவத்துரோகாதி அதிபாதகமும் பிரமகத்தியாதி மகாபாதகமும் மறுமைக்கண் எரிவாய் நரகமாதிய நரகத்தில் அழுத்துதலின் முன்பே; இம்மையிற் செய்தவுடனே சித்தப்பிரமையாதி துக்கங்களும் பிரமகத்தியாதி துக்கங்களும் அடைதலெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம்: சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம். * "குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாஞ்—செற்றொருவரைச் செய்த தீமைக ளிம்மையே வருந் திண்ணமே—மற்றொருவரைப் பற்றிலேன் மறவாதொழி மட நெஞ்சமே—புற்றரவுடைப் பெற்றமேறி புறம்பயந் தொழப் போதுமே." என்றும், சசிவர்ணபோதம். * "மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின் பயன் வேறோரு காலமுறா—திகமே வருமென் பதனுளரோ யெல்லா மிவனைச் [2]செறவெய்தினவே." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வினா. அப்படி இம்மைக்கண் ஒரு பாவத்தைச் செய்தவன் சரீராந்தத்தில் நரகத்தை அனுபவிப்பானென்று நீர் சொல்லுகிறது கூடாது; அஃது எத்தாலென்னில், இவ்விடத்திற் பாவாதிகளைச் செய்தவன் இறந்துபோகவும் அவனைத் தகனம் பண்ணிப் போடவும் காண்கையால்?

1. நெடிவு - வெப்பம். 2. செற - துயர் செய்ய.

மேல்விடை, பலமருந்தற்கு அங்குஓரங்கம் ஏயும். எ - து. புண்ணிய பாவங்களைப் பண்ணினவன் அவற்றினது பலன்களைச் சுவர்க்க நரகத்தின் கண்ணே அனுபவித்தற்குச் சரீராந்தத்திற் பாவப்பருவமானால் [1]பூததேகமும் புண்ணியப்பருவமானால் [2]பூதசார தேகமும் யமதூதர் ஒரு கணத்திலே உண்டு பண்ணுவார்கள். அந்தச்சரீரஞ் சுகதுக்கானுபவத்தைப் பொருந்தும்.

இதற்குப் பிரமாணம் : சிவதருமோத்தரம். * "அருந்துயர்க் குழியி னாழ்வாராகமே பாவத்தாகும்—பொருந்திய பூதத்தாலே யிமைத்திடும்போது தன்னுட்—புரிந்துவிண் புகுவாராகம் புண்ணியத்தாலே யாகும்—பொருந்திய பூதசாரத் தொருகணப் பொழுது தன்னில்." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வினா. ஒருவன் இம்மையிலே செய்த பாவத்துக்கு ஏதுவாய் மறுமையிலே ஒரு சரீரத்தை உண்டுபண்ணி நரகத்தில் வாதிப்பரென்பது எத்தினுக்கொக்கு மென்னில் ; குற்றஞ்செய்தவன் தப்பிப்போகக் குறுக்கே வந்தவனை வாய்மேல் அடித்தானென்பதுபோலும்; ஒருவன் பசிக்கு மற்றொருவன் உண்டானென்பது போலும்; இப்படி அனேகமாக உலகத்தின்கண்ணே சொல்லும் பரியாச வார்த்தைகளுக்கு ஒக்கும். இந்தச் சரீரஞ் செய்த பாவத்துக்கு அந்தச்சரீரம் வாதைப்படுமென்றீர். அதற்கும் இதற்குஞ் சம்பந்தம் ஏது ?

மேல்விடை. அதிற்பாயும் இதில் அறிவு. எ-து. அந்தச் சரீரத்தின்கட் சென்று புகும் இந்தச்சரீரத்தினின்றும் புண்ணிய பாவங்களுக்கு ஏதுவாகிய இதாகிதங்களைப் பண்ணினவனுடைய அறிவு.

இதற்குப்பிரமாணம்: சிவதருமோத்தரம். *"திரணூறு [3]சௌளுகைபோற் சீவன் றீண்டியே—வருமுரு வதனைமுன் னுடலை மாற்றிடும்—தருமமே பருவமேற் சாரும் வானினைப்—பருவ மேற் றீவினை நிரயம்பற்றுமே." என்பதனாற் காண்க.

மேல்வினா. அப்படி ஒரு சரீரத்தின்கண்ணே மற்றொரு சரீரத்தின்கணுண்டாகிய அறிவுசென்று புகுமென்னுமிடத்துத் தருண

1. பூததேகம் - யாதனா சரீரம். 2. பூதசாரதேகம் - தேவசரீரம்.
3. சௌளுகை — ஒன்றைப்பற்றி ஒன்றைவிட்டு நகரும் ஒரு புழு.

பருவத்தை யிச்சித்துடைய ஒருவிருத்தன் ஒரு தருண பருவன் இறக்கக்கண்டவிடத்து அவனது சரீரத்திற் பாய்தல்வேண்டும். அஃதில்லாமையின், ஒருசரீரத்தின் அறிவு மற்றொரு சரீரத்திற் புகுமென்றல் கூடாது.

மேல்விடை. இவண் வேறு உருப்புகலும் உளது. எ-து. இவ்விடத்தும் [1] பரகாயப்பிரவேசம் பண்ணுவாருமுண்டு.

மேல்வினா. அப்படிப் பரகாயப்பிரவேசம் பண்ணுதல் இவ்விடத்து நாங்கண்டேமில்லை. அதுவும் அம்மி பறக்கக்கண்டேன் என்பதுபோலும் உலககற்பனா கதை.

மேல்விடை. யாமும் காயம் இது கிடப்ப மற்றோருடல் கனவில் தினம்புகல் ஓர் காதையன்றே. எ-து. அப்படிப் பரகாயப் பிரவேசம் பண்ணுதல் இப்பொழுது இவ்விடத்திற் காணாமையால் கற்பனாகதை யென்றாயாயினும், நாடோறும் யாமெல்லோருஞ் சொப்பனத்தின் கண்ணே இந்தத் தேகத்தைவிட்டு வேறொரு தேகத்திற் பாய்ந்து எவ்விடத்துஞ் சஞ்சரித்தலால், ஒரு சரீரத்தின்கண் இருந்துள அறிவு மற்றொரு சரீரத்தின் கட்கன்மத்தாற் சென்று புகுமென்பதே உண்மையென் றறிவாயாக. எ-று.

இதற்குப் பிரமாணம்: சிவஞானசித்தி ❋ " [2] பன்னக [3] 'மண்டசங்கள் பரகாயந் தன்னிற் பாய்வோர்—துன்னுதோன் முட்டை யாக்கை துறந்து செல்வதுவே போல—வுன்னிய வுயிர்க ளேவுடல் விட்டு வானினூடு—மன்னிடு நனவு மாறிக் கனவினை மருவுமா போல்." என்றும், திருமந்திரம். ❋" நாகமுடலுயிர் போலுநல் லண்டசம்—போகு நனவைக் கனவின் மறத்தல் போ—லாகு மரனரு ளாற்சென் றருவினைக்—கேகு மிடஞ்சென் றிருபய னுண்மையே." அன்றியும், ❋ 'காயுங் [4] கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்—சேயுமிடஞ்சென் றுலவவும் வல்லது—ஓயுந் துயிற் போல வொன்றைவிட்டங்கொன்றி—லேயுமவரென்ன வெய்திடுங் காயமே." என்றும், ❋ " சொப்பனத் தியங்குகாயஞ் சூக்குமமத னூற்றுய்க்கு—நற்பயன் றுறக்கந் துன்ப நாகுபின் னனவைச் சார்த—லுற்பவ மிவைகணீங்கி யொன்றையு முணரா யாகி—நிற்

1. பரகாயப் பிரவேசம் - வேறு தேகத்தில் புகுதல்.
2. பன்னகம் - பாம்பு. 3. அண்டசம் - முட்டையிலிருந்துண்டாவது. 4. கடும்பரி - வேகக்குதிரை.

பன சுழுத்தி மேல்வை நிகழ்வசங்காரம்போலும்." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இ-து. கொலைத்தீமையுடையார் நரகம் அனுபவிக்குமிடத்துத் தத்தம் பாவத்தளவிற்குத் தக அவ்விடத்துண்டாகிய ஒரு பூததேகத்தைப் பொருந்துவரென்று சாதித்தது. (௪)

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் உலோகாயதன் கூறுகின்றான்.

சொப்பனத்தின்கண் வேறொருசரீரம் வந்து பொருந்துமென்ற வார்த்தை பழுது. கனவிலே தோன்றுவதெல்லாம் நனவின்கட்கண்ட நினைவாகுமென்றவார்த்தைக்கு உத்தரங் கூறுகின்றார்.

காதறரு முருவிதுவான் பறத்தலின்றாங் கதற்கியல்
பாய்க் காண்ட லானும், போதுறைவோ னாதியர்கண் முக
மாதி கனவிலியாம் பொருந்தா தானு, மோதுநினை வலவு
ணர்வா ருயிர்க்குணமிவ் வுடல்பிணக்கொன் றுணரக்
காணேம், வாதமுள் நிலையுறக்கத் துணர்வுணர்வ துயிரெ
னக்கொண் மதித்தே சில்லோய். (5)

காதல் தரும் உரு இது வான்பறத்தல் இன்று ஆங்கு அதற்கு இயல்பாய்க் காண்டலானும் போதுறைவோன் ஆதியர்கள் முகமாதி கனவில் யாம் பொருந்தாதானும் ஓதும் நினைவு அல. எ-து. இவ்விடத்து நம்மால் இச்சிக்கப்பட்ட இந்தச் சரீரத்துக்கு ஒருகாலும் ஆகாயத்திற் பறக்குந்தன்மை யின்மையானும், கனவின்கண்ணே தோன்றிய சரீரத்துக்கு ஆகாயத்திற் பறக்குதல் இயல்பாய்ப் புதுமையும் அதிசயமுந் தோன்றக் காண்டலினாலும், பிரமாவாதியாகிய தேவதைகளுக்கு உண்டாகிய பலமுக முதலிய உறுப்புக்கள் நமக்குக் கனவின்கண் உண்டாகாமையானும், சொப்பன தேகத்தை இச்சரீரத்தின் கண் கண்டு கேட்டிருந்தமையால் அந்த நினைவென்குதல் கூடாது. அதெப்படியென்னில், சொப்பனதேகம் பறக்கக்காண்கையாலும், இத்தேகத்துக்கு அஃதில்லாமையாலும், கண்டநினைவல்ல. அல்லது தேவதைகள் 1 ஆகாயகமனம் பண்ணுவார்களென்று கதைகளிற் கேட்ட

1. ஆகாயகமனம் - ஆகாயத்திற் செல்லுதல்.

நினைவென்னில், புராண காவியங்களில் பிரமாவாதி தேவதைக ளுக்கு அநேக முகங்களும் அநேகங்கண்களும் அநேகங் கைகளும் உண்டென்று கேட்டிருக்கின்றோம். ஆகையால், அவ்வடிவமும் நமக்குச் சொப்பனத்தின்கட் பொருந்தல் வேண்டும். அஃது இல்லாமையால், கேட்ட நினைவு மல்ல; ஆதலிற் சொப்பனத்தின் கண் வேறொரு தேகம் வருமென்பதே சத்தியம்.

இதற்குப் பிரமாணம். * "இவ்வுடல் கனவூ டெங்கு மியங்குரு வலவன் றென்ப—ரவ்வுடல் பறத்த லாற்கண் டுளநினை வல்லவாகு —மெவ்வழி யிமையோர் கேள்வி நினைவெனி லிந்திராதி—திவ்விய வுருக்கொளோமாற் றிகழ்ந்ததவ் வுருவே றென்னே." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வினா. அப்படிச் சொப்பனத்தின்கண் இவ்விடத்திற் காணாதன கண்டேமாயினும், அதுவும் இத்தேகத்தின் குணமல் லது வேறொரு தேகமென்பது கூடாது. ஆதலின் ஒரு தேகத் தின் குணம் மற்றொரு தேகத்தின்கட் சென்று பொருந்துவதே யில்லை. உண்டென்னில், ஒரு ரத்நத்தினது காந்தி மற்றொரு ரத் நத்திற்சென்று பொருந்தவேண்டும். அஃதின்மையால், இச்சரீ ராந்தத்தில் இதனுடைய குணமாகிய அறிவு வேறொரு தேகத்திற் சென்று புகுவதுமில்லை.

மேல்விடை. உணர்வார் உயிர்க்குணம். எ - து. நீ ஒன்றின் குணம் ஒன்றிற்சென்று புகாதென்பது ஒக்கும். இங்ஙன முண் டாகிய அறிவு இத்தேகத்தின் குணமன்று. இத்தேகத்தின்கட் கன்மவசத்தாற் பொருந்தியிருந்துள ஓரான்மாவினுடைய குணம்.

மேல்வினா. நீர் இங்ஙனம் இத்தேகத்தின்கண் இதற்கு அன்னியமாய் ஒரு சீவனுண்டென்பது கூடாது. அஃதேனெனில், இங்ஙனம் காணப்பட்டுள்ள பிருதிவி - அப்பு - தேயு - வாயு என்னும் இந்த நான்கு பூதமும் நித்தியமாயுள்ளன. அவற்றுள் வாயு சலன குணத்தையுடையது ஆகையால் மற்றுள பூதங்கட்கு அதனோடு கலப்புண்டாகுதலின், இச்சரீராதிகள் தோன்றும். அப்படித் தோன்றினவென்பது எத்தாற்கண்டதென்னில்; மண் கடினமாயி ருத்தல்போல, சரீரத்தில் என்புதோலாதிகள் கடினமாய் மலர் தடித்து வீழ்தலினாலும், சலம் நெகிழ்ந்து பதஞ்செய்தலின் இரத் தாதிகள் நெகிழ்ச்சியுடையனவாய்ச் சலம் வீழ்தலினாலும், நெருப்

புச் சுட்டொன்றுவித்தலின் [1] உதராக்கினி அன்னபாளுதிகளைச் சுட்டொன்றுவித்துத் தொக்கின்கண் வெப்புத் தோற்றுதலினுலும், வாயுச் சலித்துத் திரட்டுதலின் இச்சரீரத்துக்கு ஓடுதலாதி சலனத்தைப் பண்ணி நாசியாதிகளின் இயங்கக் காணுதலினுலும் அந்தப் பூதக்கலப்பு இந்தச் சரீரமென்பது பிரத்தியட்சம். பாக்கு வெற்றிலே சுண்ணும்பு மூன்றும் கூடினவிடத்தில் ஒரு சிவப்புத் தோன்றுதல் போல, பூத சையோகத்தினுல் முன்பில்லாத மனமுந்தோன்றும். இதுவன்றி, நீர்இந்தச் சரீரத்தில் ஒரு ஆன்மா உண்டென்னில், இப்படிப் பிரத்தியட்சமாகக் காணவேண்டும். அப்படிக் காணப்படாமையின், ஆகாசத் தாமரைப் பூவும் முயற்கொம்பும் ஆமை மயிரும் மணலிற் றைலமும் உண்டென்பதை யொக்கும். ஆதலின், ஆன்மா உண்டென்பதேயில்லே. இவ்விடத்துத் தோன்றும் உணர்வெல்லாம் தேககுணமே.

மேல்விடை. இவ்வுடல் பிணத்து ஒன்று உணரக்காணேம். எ - து. நீ இந்தத் தேகத்தின் குணம் அறிவென்னுமிடத்துப் பிணமான [2] அவதரத்தில் தேகங் கிடக்கக் கண்டேம் - உணர்வு அங்ஙனங் கண்டிலேம். ஆதலின் உணர்வு தேகத்தின் குணமென்பது கூடாது.

மேல்விஞ. பிணமான சரீரத்தில் வாயு நீங்குதலால், அக்கினி அவியும் அப்பொழுது அறிவுங்கெடும். அவைகள் நீங்கியது எவ்விதத்தாற் கண்டதென்னில், பிணத்தினுசியிற் காற்றுங் கண்டிலேம். [3] தொக்கில் வெப்பமுங் கண்டிலேம். ஆதலின், அவைகள் நீங்கியது உண்மை. நீங்குதலின், சரீரத்தின்கண் அறியாமையடையும்.

மேல்விடை. வாதம் உறக்கத்துஉளது இலே உணர்வு உணர்வது உயிரெனக்கொள் மதித்தேசு இல்லோய். எ-து. நீ இங்ஙனம் பிணமான காலேயில் நீங்குமென்ற வாயு உறக்கத்தின்கண் நீங்காமேயிருக்கவும், அப்பொழுது தேகத்தின் கண்ணே பாம்பு எறிவருதலுஞ் சத்துருவருதலுஞ் சரீரம் அறியாமே கிடத்தலால், வாயு நீங்க அறிவு கெடுமென்பது கூடாது. ஆதலிற் கன்மவசத்தால் அவத்தைகடோறும் ஒடுங்கியும் உணர்ந்தும் வருவானேர் ஆன்மா உளனென்று அறிவாய் ஞானப்பிரகாசமின்றி இருளடைந்த புத்தியினையுடையோய் எ - று.

---

1. உதர அக்கினி - ஜாடர - அக்கினி - வயிற்றுத்தீ. 2. அவதரத்தில் - சமயத்தில். 3. தொக்கில் - தோலில்

இதற்குப் பிரமாணம்: சிவஞானசித்தி. * "உடலின் வேறு யிரே னிந்த வுடலன்றே வுணர்வ தென்னி—னுடல்சவ மான போது முடலினுக் குணர்வுண் டோதா—னுடலினின் வாயுப்போனு லுணர்ச்சியின் றுடலுக் கென்னி—னுடலினில் வாயுப்போகா துறக் கத்து முணர்வ தின்றே." என்றும், சிவப்பிரகாசவெண்பா. * "உடம்பு நீ யல்லை யுறக்கத்தி லெல்லா—மடங்கப் பிணமாகை யாலே - திடம்படவும்—வேறுதா னுண்டோ விடாதே யருந்து கின்ற—சோறுகாண் காயச் சுமை." என்றும், மற்றும் வருவன வற்றுற் காண்க.

இ-து. சொப்பனதேகம் இத்தேகத்துக்கு அன்னியமென்றும், இத்தேகங்களைக் கன்மவசத்தாற் பொருந்துவானோர் ஆன்மாவுள னென்றும், கூறியது.

இவ்வளவுஞ் சரீரமே ஆன்மாவென்னும் உலோகாயதனை மறுத்துச் சரீரத்துக்கு அன்னியமாய் ஒரு ஆன்மா உண்டென்றும், அவன் இம்மைக்கண் செய்த கொலைத்தோடத்தைச் சரீராந்தத் தில் வேறொரு தேகத்தைப் பொருந்தி நரகத்தில் அனுபவிப்பது உண்டென்றும், சாதித்தது. (௫)

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கி மேல் 1 ஏசுமத வாதி கூறுகின்றான்.

இங்ஙனம் உலோகாயதன் கூறிய உரைபழுது. நீர் கூறிய வற்றுள்ளும் சிறிது ஒக்கும் சிறிது ஒவ்வாது. யாதொக்கும் யாதொவ்வாதெனில், நீர் கொலையாற்பாவம் உண்டென்பது ஒக் கும். எல்லாக் கொலையாலும் பாவம் உண்டென்பது கூடாது. அஃது எங்ஙனமெனின், மனுஷரை மனுஷன் கொன்றால், கொன் றவன் நரகத்தழுந்துவான். அஃது உண்மை. மிருகாதிகளைக் கொன்றதனால் பாவம் உண்டென்பதில்லை. அஃதேனெனில், மிருகாதிகளை மனுஷருக்கு உபகாரமாகக் 2 கர்த்தர் படைத்துக் கொடுத்தாரென்று 3 எங்கள் சத்தியவேதத்தில் இருக்கின்ற தென்று கூறிய அவனுடைய உரையை மறுத்து மேலுத்தரங் கூறுகின்றார்.

---

1. ஏசுமதவாதி - கிருஸ்துவன். 2. கர்த்தர் - கடவுள். 3. சத்திய வேதம் - பைபில்.

தேசிறைமா னுடர்க்கெவையு மருளினுண்டீக் கிடமை யென் செய்வாய் மாந்தர்க், காசருள்வ தெனைவேங்கை யாதி யச்சா திகளவர்சொற் கடங்கு மாறென், காசடைந்திம் முறையுமோரோர் காற்றிரிவ தெனைமுனஞ்செய் கருமந் தன்றாற், பேசுமச ராதியுரு வுயிர்க ளூற லுண்மையுன் சொற்பிழையா மன்றே (௬)

தேசு இறை மானுடர்க்கு எவையும் அருளின் உண்டு ஈக் கிடம் ஐ என் செய்வாய். எ-து ஞானரூபியாகிய ஈசுரன் மனுஷருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்தானாகில், மலத்தின்கண் ஈயால் உண்டாகிய நுண்ணிய புழுவும் மற்றும் பரமாணுவினும் நுண்ணிய செந்துக்களும் உனக்கென்ன பிரயோசனத்துக்கு வரும். அவைகள் அப்பிரயோசனமென்னில், கருத்தா ஞானமயனென்பது கூடாது.

இதற்குப் பிரமாணம்: [1]ஏசுமத நிராகரணம். * " அறிவிலை நரர்க்காய்வேண்டி யளித்தனன் மிருகமாதி—யிறையவ னென்று யோரீ யீன்றிட மலமீ தாருஞ்—சிறுபுழு விரையுறுதென் செய் குவை யதனை நோக்க—வறிவரு நுணியதேகி யனந்தமீ யவை யென் செய்வாய். " என்பதனாற்காண்க.

வாதியுத்தரம். சீவன்களிலே சிறியவைகளெல்லாம் பெரியவைக்கு இரையாய் ஒன்றுக்கொன்று வேண்டியிருத்தலின், எவையும் [2]பாரம்பரியத்தில் மனுஷருக்கு உபகாரமாகப் படைத்ததே.

மேல்விடை. வேங்கையாதி மாந்தர்க்கு ஆசு அருள்வது எனை. எ-து. மனுஷருக்கு உபகாரமாகப் படைத்த மிருகவர்க்கத்துள் சிங்கம் புலி யானை கரடி பாம்பு தேள் முதலியவைகள் மனுஷருக்கு இதப்பிரயோசனத்துக்கு வாராமல் வருத்துதலுங் கொல்லுதலுஞ் செய்தலால் உபகாரமாகப் படைத்ததென்பது கூடாது.

---

1. ஏசுமத நிராகரணம் என்னும் நூல், சதுரகராதி யியற்றிய வீரமாமுனிவரென்னும் கிருஸ்துவரை கவிச்சக்கிரவர்த்தியாகிய ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் கண்டித் தெழுதியதாமென்பர்.

2. பாரம்பரியத்தில் - முறைமுறையில்.

மேல்வாதி யுத்தரம். கருத்தா ஆதியிலே ஒரு மனுஷனைப் படைத்து மிருகாதிகளும் அவனுக்கு அடங்குவனவாகப் பண்ணி இன்னபடி நடவென்று ஒரு புத்தியுங்கூற; அவன் அந்தப் புத்தியின் வழி நடவாமல் தவறு செய்தலால், மிருகாதிகள் உனக்கு அடங்காமற் போகவென்று சபித்தலின், அவனுக்கும் அவனது சந்ததியாகிய மனுஷருக்கும் மிருகாதிகள் அடங்காமற்போயின.

மேல்விடை. அச்சாதிகள் அவர்சொற்கு அடங்குமாறு என். எ-து. அங்ஙனம் சாபத்தால் மிருகாதிகள் அடங்காவிடின் ஆடு மாடு எருமை பன்றி நாய் கோழி முதலிய சில சீவன்கள் மனுஷருக்கு அடங்குதலால் சபித்தது பொய்யாம் ; சாபந் தவறிற்றென்னில், கருத்தா [1] அசத்தனும். ஆதலிற் சபித்ததேயில்லை.

இதற்குப்பிரமாணம்: ஏசுமத நிராகரணம். * "வாய்திறந்தலறும் வேங்கை வல்விட முமிழ்பாம்பாதி—நேயமற் றெவர் கூற்றுய நிகழ்வதெ னுலகத்தந்நாட்—டேயவ ஞதிக் கோதுஞ் சொன்னெறியடங்கா தென்னி—ஞயகோ வாதிமாந்தர்க் கடங்கிய விதமென் கொல்லோ." என்பதனுற் காண்க.

மேல்வாதி யுத்தரம். அங்ஙனஞ் சாபந் தவறிற்றென்பதில்லை. மனுஷருக்குப் புலியாதிகள் அடங்காமலும் மாடு முதலிய அடங்கவுங் கருத்தாவினது சாபமே.

மேல்விடை. இம்முறையும் காசு அடைந்து ஒரோர் கால் திரிவது எனை. எ-து. நீ இங்ஙனங் கூறிய முறைமையும் பழுதுடைத்தாக, ஒருகாலத்திற் பாம்பு முதலியன ஒருவனுக்கு அடங்குதலினலும் பசு முதலியன ஒருவனைக் கொல்லுதலினலும் அதுவுங் கூடாது. ஆதலின் மனுஷருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்ததேயில்லை.

இதற்குப் பிரமாணம். ஏசுமத நிராகரணம். * "சொல்லினனவர்க் கச்சாதி யடங்கவுந் துயரஞ் செய்தே—கொல்லமற்றையவு மீசனென் றிடிற் கொடுநா காதி—நல்லவாவோரோர் காலத் தடங்கலா னவிலச் சாதி—யல்லல்செய் திடலாற் றீயோ யறைந்த சொற் பழுதேயாகும்." என்பதனுற் காண்க.

---

1. அசத்தனும் - சாமர்த்தியமில்லாதவனும்.

மேல்வாதி யுத்தரம். அங்ஙனமாயில் கருத்தா 1 பட்சவாதியாம்; சர்வசீவன்களையும் ஒரு படித்தின்றி 2 ஊர்த்த யோனியாகவுந் 3 திரியக்கு யோனியாகவும் படைத்தமையால்.

மேல்விடை. உயிர்கள் முனஞ்செய் கருமந்தன்னால் பேசும் அசராதி உரு உறல் உண்மை உன்சொல் பிழையாம் அன்றே. எ - து. ஆன்மாக்களெல்லாம் ஒருவருக்கு ஒருவர் அநாதி 4 சென்மாந்தரங்களிற் செய்த இதாஹிதங்களினுண்டாகிய புண்ணிய பாவத்தினலே இங்ஙனஞ் சொல்லப்பட்ட சரா்சர வடிவங்களைப் பொருந்துதல் சத்தியம். ஆதலின், உன்னுடைய வேதம் சத்திய வேதமாகாது அசத்தியவேதமாயிற்று. எ - று.

இதற்குப் பிரமாணம்: திருவாசகம். * "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்—பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்—கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்—வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்—செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து—ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்." என்றும் மற்றும் வருவனவற்றூற் காண்க.

இ - து. ஈசுரன் மனுஷருக்கு உபகாரமாக மிருகாதிகளைப் படைத்தானென்பது அசத்திய மென்றும், ஆன்மாக்கள் கன்மத்தால் நாஞ்ரூபம் பெற்றது சத்தியமென்றும், கூறியது. (௬)

இப்படிக் கூறிய சைவ சித்தாந்தியை நோக்கி 5 வாமி கூறுகின்றான்.

இங்ஙனம் ஆன்மாக்களெல்லாம் கன்மவசத்தினலே சராசர வடிவம் அடைந்தார்களென்றும், கொலையினற் பாவம் உண்டென்றும், கூறியது ஒக்கும். ஏசுமதவாதி கூறிய உரைபழுது. கொலையினலே பாவம் உண்டாயினும், சிறிதிடத்து உண்டு. சிறிதிடத்து இல்லை. அதுவும் மேலே உம்முடைய வசனத்தினலே தானே அறிவிக்கின்றேன். நீர் இப்பொழுது இந்த ஒரு வினவிற்கு உத்தரம் கூறல் வேண்டும். அஃது யாதெனில் சராசரங்களெல்லாம் சிவனென்றீர். அவற்றுள் அசரமாகிய மரமுதலிய

---

1. பட்சவாதி - ஒரு பக்கத்திற் பிரியன். 2. ஊர்த்தயோனி - தேவமனுடப் பிறப்புகள். 3. திரியக்குயோனி - மிருகப்பிறப்பு 4. சென்மாந்தரம் - முற்பிறப்பு. 5. வாமி - தேவிபக்தன்.

சீவன்களை நீர் கொன்று அருந்துகின்றீர். அவற்றினால் உமக்குத் தோஷமில்லாதது என்னை. கூறும் என்ன, மேல் உத்தரங் கூறுகின்றார்.

பிழையுறுதல் சிறிதசரக் கொலையதனாற் சரக்கொலை யிற் பெருகா திங்ஙன், னிழிவுதரும் பருவமடை தலினாற்கீ ராதியைந்து பீயுந் தூய, வழகியவா னானயின்றோன் கீழெ னமே லாவர்குறைந் தடைபா வத்தான், முழுமலப்பன் றியையருந்தும் புலையர்பன்றிக் குறும்பருவ முறையி னுமால் (7)

அசரக்கொலையதனால் பிழையுறுதல் சரக்கொலையில் பெருகாது சிறிது. எ - து. சராசரமெல்லாம் சீவனாதலில் அசரக் கொலையினாலும் பாவமுண்டென்பது நிச்சயம். பாவம் உண்டாயினும்; சரக்கொலையிற் பாவம்போல மிகுதியில்லை. 1 கிஞ்சித் பாவம்.

மேல்வினா. சீவன்களெல்லாம் சமமாயிருக்க அசர சீவ கொலையிற் பாவங் குறைந்திருப்பானேன் ?

மேல்விடை. இழிவுதரும் பருவம் அடைதலினால் இங்ஙன். எ - து. அந்த அசரசீவிகள் இங்ஙனங் கூறப்பட்ட 2 எழுவகைத் தோற்றத்துள் தாழ்ந்த பருவத்தினையுடைய வாதலினால், பாவங் கொஞ்சமே.

மேல்வினா. அப்படிப் பருவத்தினது உயர்ச்சி தாழ்ச்சியாற் பாவம் ஏறிக் குறைந்திருப்பதற்குத் திட்டாந்தம் யாது?

மேல்விடை. கீர் ஆதி ஐந்தும் ஈயும் தூய அழகிய ஆன் ஊன் அயின்றோன் கீழென மேலாவர் குறைந்து அடை பாவத்தால் முழுமலப் பன்றியை அருந்தும் புலையர். எ-து. பால் தயிர் நெய் கோசலம் கோமய மென்னும் பஞ்ச 3 கவ்வியங்களையும் உலகின் கண் வழங்காநிற்கும் நிர்மலதேகியென்னுஞ் சிறப்பினையுடைய பசுவினது மாமிசத்தைப் புசித்தோன் தாழ்ந்தகுலமாக, அவனி

1. கிஞ்சித் - அற்பம். 2. எழுவகைத்தோற்றம் - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம். 3. கவ்வியம்-கோவிலிருந்துண்டாவது.

னும் உயர்ந்த குலமென்று சொல்லப்படா நிற்பர்கள் முழுமலதேகி யாகிய பன்றி மாமிசத்தைப் புசியாநிற்குஞ் சண்டாளர். பன்றிக் கொலையாற் பாவங்குறைதலின்.

மேல்வினா. பன்றியிற் பாவங்குறையவேண்டியதென்?

மேல்விடை. பன்றிக்கு உறும்பருவமுறையின் ஆமால். எ-து. பன்றி மிருகவர்க்கத்துள் தாழ்ந்த பருவத்தினை யுடைய தாகையா லெனக் கொள்க. எ-று.

பசு பஞ்சகவ்வியங்களையும் வழங்கும் நிர்மலதேகி என்பதற் குப் பிரமாணம்: திருநாவுக்கரசு நாயனார் தேவாரம். * "ஆவினி லைந்து மமர்ந்தாய் நீயே யளவில் பெருமை யுடையாய் நீயே— பூவினி னாற்றமாய் நின்றாய் நீயே போர்க்கோலங் கொண்டெயி லெய்தாய் நீயே—நாவி னடுவுரையாய் நின்றாய் நீயே நண்ணி யடியென்மேல் வைத்தாய் நீயே—தேவ ரறியாத தேவனீயே திருவையா றகலாத செம்பொற்சோதீ." என்றும், சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம். * "மாவையு ரித்ததள்கொண் டங்கமணிந்த வனை வஞ்சம னத்திறையு நெஞ்சனு காதவனை—மூவரு ருத்தனதா மூலமுதற் கருவை மூசிடுமால் விடையின் பாகனை யாகமுறப்— பாவகமின்றி மெய்யே பற்றுமவர்க்கமுதைப் பானறு நெய்தயிரைந் தாடுப ரம்பரனைக்—காவலெ னக்கிறையென் றெய்துவ தென்று கொலோ கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே." என்றும், சிவதருமோத்தரம் * "இங்கு மின்சுவையீயுமி றைஞ்சுவார்க்— கங்கு மின்ப மடைகைக்குக் காரணம்—பொங்கு தண்புன லுண்டுபுற் றின்றுநன்—மங்கலந்தருங் கோவெனும் வான்பொருள்." என்றும், சிவஞான தீபம். * "பொற்பமரும் பாற்கடலி னுற்பவமாஞ் சுரபி புகலிலதன் கோமயத்திற் [1] கூவிளந்தா னுளவா—மற்புதமாந் திருமகளவ் வில்வமதிற் பொருந்து [2] மகிலாரம் பளிதமத [3] னளைய தனி னுளவாங்—கற்பமருஞ் சுராமுத [4] நவநீதத் துதிக்குங் கதிரு டனே செந்நெலதன் பாலதனிற் றோன்றுஞ்—சொற்பயில்குங் குலியமறை யுற்பலநீ ரதனிற்றோன்றியிடும் ரோசனையு மதனுதாத் துதிக்கும்." என்றும், காசிகாண்டம். * "ஆன்குளப் படியிற் றோன்று மருந்துகடோயப் பெற்ற—வூன்பயி லியாக்கை கங்கை தோய்ந்ததா மருப்பினுச்சி—வான்புனற் கடவுட் பேரியா றிருக்

1. கூவிளம்-வில்வம். 2. அகில் ஆரம்பளிதம் - அகிற்றரு, சந்தன தரு கர்ப்பூரம். 3. அளை - தயிர். 4. நவநீதம் - வெண்ணெய்.

கும்வா னிலவு காலுங்—கூன்பிறை முடித்த செல்வி கொம்பிடை. வதியுமாதோ.'' என்றும், பெரிய புராணம். * "சீலமுடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவருடன்—காலமுழுது முலகனைத்துங் காக்குமுதற் காரணராகு—நீலகண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரு—மூல மவதாரஞ் செய்யு மூர்த்த மென்றான் முடிவென்னோ.'' என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

பன்றி முழுமலதேகி என்பதற்குப் பிரமாணம்: * எருத மேட்டுக் கிரண்டு துலையிட்டாற்போற்—பேறாயே னங்கோழிப் பேரிட்டு—மாறாத— புன்மக்கள் வாயிற் புலையர் மலமிறைக்க— நன்மக்கள் கண்டு நகும். என்றும், * "பன்றிதன் மலமுண்டா லென்பாரந்துறா துடலமெங்கு—மென்றிருந் தனையோ பேதாயிளைத் தது பருக்குமாறே—னன்றியு நோய ரூலை பத்தியமடையக் கண்டு—முன்றனு ளுணராய் நாளுமுண்டனை மலமீ துண்மை.'' என்றும், * அசுத்தமாமலத்தை யேதின் றவத்தினா லுடலந்தாங்கு —மசுத்தமாம் பன்றியாதி யருந்திமா நரகத்தாழு—மசுத்தருஞ் சுத்தர்போல வருவருப் புடையராகி—யசுத்தமா நிலத்திற் கீரை யாதிதீதென்ப தென்னோ.'' என்றும், * கூறுநாய் கழுதை பன்றி கோழியு மலத்தைத் தின்னும்—வீறுடன் கழுதை நாயை விரும்பியே தின்னா தென்கொ—றேறியே தெளிந்து பார்க்கிற் றீதான மலமாமெல்லாம்—வேறுமோர் நரகத் தெல்லை விதிக்கவு மிவர்க்கு வேண்டாம்.'' என்றும், * "தம்மினு முயர்ந்தோர் கீழோர் தமதிலத்தறலுண் டாரே—லம்மவங் கவருங் கீழென்றவர் மனைப் புனலுமுண்ணா—விம்மனி தர்கடாஞ் சீச்சீ யீனர்தம் மலத்தையுண்டு—விம்முடற் பன்றியாதி விரும்பியுண் டுவப்ப தென்னோ.'' என்றும், வருவனவற்றாற் காண்க.

பன்றியாதிகளை உண்டோரும் புலையர் என்பதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். * "கொலைவினையராகிய மாக்கள் புலைவினையர்—புன்மை தெரிவா ரகத்து.'' என்றும், சிவவாக்கியர் * "புலையரைப் புலையரென்னும் புத்தியற்ற மாந்தரே—புலையனார் மலம்புசிக்க நாடுமீது புத்தியோ—புலையருக்கு னொக்குமும்மை யென்று ரைத்த புல்லரும் —புலைய ராகிநரகி னுட்புகுவ ரையரா ணையே,'' என்றும், * "ஈவானே தெய்வ மிரப்பே யிழிவாமென்—றுய்வானே நூலின் பயனறிவான் - பேய்வாழுங்—காடே கரப்பவர் தம் மில்லங்கடும்புலையன்—வீடே [1] விடக்குண்பான் வீடு.'' என்றும், * "பறையரைப் பறைய ரென்று பறைந்திடு மனிதர்கேளீர்—

1. விடக்கு - ஊன்,

பறையர்தம் மலத்தைத் தின்ற பன்றியைப் புசிப்ப தென்னோ—கறையதே யாகு மந்தக் கறிதனைக் கலத்தினிட்டு—மறையவே வைத்துத் தின்னுமனிதரே பறையர் கண்டீர்." என்றும், புலையென்னும் புலைதீரப் புனலென்னும் புனன் மூழ்கி—யலைகின்ற முழுமூட ரறிவென்ன வறிவென்ன—புலையன்றன் மலமுண்ணு மெமையுண்ணும் புலையர்க்குக்—குலமென்ன நலமென்ன கூகூ வென் றனகோழி." என்றும், மற்றும் வருவன வற்றுற் காண்க. பன்றி மிருகவர்க்கத்துள் தாழ்ந்த பருவத்தினையுடையது என்பதற்குப் பிரமாணம்: திருவிளையாடல். * "அன்றியும் பெருமை மிக்க வலகில்யோ னிகளிற் றேயா—தென்றுமே லாக வோங்குந் தலைவநீ யிருந்த பொல்லாப்—பன்றியு னாற்கா லுள்ள பல்பெருஞ் சாதிக்கெல்லா—மொன்றிய கடைய தன்றே வுளத்திடை யோருங் காலே." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

இ-து. சராசரபேதம் உணர்த்துவான் பருவத்தாற் பசு உயர்ந்ததென்றும், பன்றி தாழ்ந்ததென்றும், கூறியது. (எ)

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமி கூறுகின்றான்.

பசுவும் பன்றியும் மிருகசாதிய பேதமாயிருக்கப் பருவ பேதம் வருவானேனென்றவளவில் அவனை நோக்கி மேலுத்தரங் கூறுகின்றார்.

முறைமைதெரி யந்தணரும் புலையருமா னுடரென
வின் மொழிந்த வானுஞ், செறிமலப்பன் றியுமிருக மெனப்
படுமாங் கவர்கொலையிற் றிகழா நிற்கு, நிறைவினொடு
குறைவெனவான் பன்றியிவற் றருங்கொலைக்க ணிகழும்
பாவ. மறிஞரிவை யெனக்கொலைமை யசாமநற் குறைதரு
மென் றறைவ ரன்றே. 8

முறைமைதெரி அந்தணரும் புலையரும் மானுடர் எனவின், மொழிந்த ஆனும் செறிமலப்பன்றியும் மிருகம் எனப்படும். எ-து. வேதாகமவிதிகளை அறிந்த பிராமணரும் அவைகளை அறியாத புலையரும் மனுஷசாதியென்று சொல்லப்படுதல்போல முற்கூறிய நிருமலதேகியாகியபசுவும் 1 சமலதேகியாகிய பன்றியும் மிருகசாதி

1. சமலம் - மலத்தோடு கூடியது.

யென்று சொல்லப்படும்.—பாவம் ஆங்கு அவர் கொலையில் திகழா நிற்கும் நிறைவினொடு குறைவு என ஆன் பன்றி இவற்று அருங் கொலைக்கண் நிகழும். எ-து. இங்ஙனம் பாவமானது மனுஷக்கொலைகளுள் பிரமக்கொலையிலே ஏறியும் நீசக் கொலையிலே குறைந்தும் இருத்தல்போல, மிருகங்களுள் பசுக்கொலையிலேறியும் பன்றிக்கொலையிலே குறைந்தும் இருக்குமெனக்கொள்க. இவையென அசரமதில் கொலைமை குறைதரும் என்று அறிஞர் அறைவர் எ-து. இத்தன்மைபோலச் சரக்கொலையிலே பாவம் ஏறியும் அசரக்கொலையிலே குறைந்தும் இருக்குமென்று சொல்லுவர் அறிவுடையோர். எ-று.

பிராமணரும் பசுவும் உயர்ந்த பருவத்தினையுடைய என்பதற்குப் பிரமாணம்: சிவதருமோத்தரம். * "அரனாதி யொருமூவர ரமரேசர் மருமானு—மொருவாம லுறைவார்க ளுமையாதி மடவாரு—மரிதாய மறையோர்க ளுடலாவி னுடலார்வ—மொருவாது வழிபாடு புரிவார்க ளுயர்வாரே." என்றும், காசிகண்டம். * "உறுபுல னடக்கி வேத நெறிவழி யொழுகிநின்ற— 1 வறுதொழிலோரு மானுங் குலமொன்று மவருளாய்ந்து—மறுவறு மறையோர் தம்பான் மந்திர மனைத்தும் வைத்தேன்—ஒறுவிடையவிக ளியாவுந் தோமறத் தொகுத்து வைத்தேன்." என்றும், வருவனவற்றாற் காண்க.

இ - து. 2 பிரமகத்தியிற் கோகத்தியிற் பாவம் ஏறியும் நீசக் கொலையிற் பன்றிக்கொலையிற் பாவங்குறைந்தும் இருத்தல் போலப் பருவபேதத்தாற் சரக்கொலையிற் பாவம் ஏறியும் அசரக்கொலையிற் பாவங்குறைந்தும் இருக்குமென்று சாதித்தது. (அ)

பின்னும் வாமியை நோக்கி அசரக்கொலையிற் பாவங் குறையுமென்பதற்கு மேலும் ஒருத்தரம் வலியுறுத்திக் கூறுகின்றார்.

அன்றியுந்தா வரவுருவஞ் சரமதுபோற் குறைப்பினுயிரகலா பாவங், குன்றியுற லுண்மையவை முருவாதிக் களித் துணவக் கொலைமை தன்னோ, டொன்றியுழ வாதியிற்சார் பாவமுந்தேய்ந் திழியுமன் னோர்க்கூட் டொணாது, னன்ற

1. அறுதொழில் - ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல். 2. பிரமஹத்தி கோஹத்தி-பிராஹ்மணக் கொலை கோவின் கொலை.

றிகண் ணப்பரினம் பனைச்செருப்பா லுதைப்படுதேவ னல
மில் லோயே. (9)

அன்றியும் தாவர உருவம் சரமதுபோல் குறைப்பின் உயிர் அகலா பாவம் குன்றி உறல் உண்மை. எ - து. தாழ்ந்த பருவத்தினுலே அசரக்கொலையிற் பாவங் குறைந்திருக்கு மென்ப தன்றியும், பின்னும் ஒரு விதத்தாலும் அக்கொலையிற் பாவங்குறையு மென்று கூறப்படும். அதுஎதினு லென்னில், அசரவடிவங்களானவை சரவடிவங்களைப்போலக் குறைக்கருவிகொண்டு குறைக்குமிடத்து நாசத்தையடையாது பின்னுங் கிளைத்தெழுதலானும், தறித்த கோட்டினை மற்றோரிடத்தில் வைக்க அதுவுந் தளிர்த்தலானும், அக்கொலையால் வரும் பாவஞ் சரக்கொலையிற் போலாது குறையுமென்பதே சத்தியம்.

இதற்குப் பிரமாணம்: புலான்மறுத்தல், *"மரக்கோட்டைக் [1]காதிவந்து வைத்தான் மரமு—மரக்கோடுந் தானிரண்டாய் வாழுஞ் - சரிக்கின்ற—வோருயிரின் கால்வாங்கி யோரிடத்தே வைத்தான்மற்—றீருயிர்தா னுமோ வியம்பு." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல்வினு. அப்படி அசரக்கொலையாற் பாவம் அற்பமாய் வரினும் நாடோறும் வந்து கூடுதலாற் சரீராந்தத்தில் அநேகமாகச் சுமக்கும். அஃதன்றியும், அசரமுயற்சியா லுண்டாகுஞ் சரக்கொலைகளும் அனந்தமாதலின், அவற்றினது பலத்தினை நீர் அனுபவியாது நீங்குமாறெங்ஙனம்?

மேல்விடை. அவை குருவாதிக்கு அளித்து உண அக்கொலைமை தன்னோடு ஒன்றி உழவு ஆதியில் சார் பாவமும் தேய்ந்து அழியும். எ-து ஒரு விவேகியானவன் அசரபதார்த்தங்களை வேதாகமங்களில் இல்லறத்திற் கோதிய தருமம் வழுவாமல் தேவர் அதிதி அனல் தேசிகர் என்னும் நால்வகையோர்க்கும் முன்னூட்டிப் பின்னுண்பானுகில், அன்னங் காய் தழை முதலிய அசரக்கொலையால் வருந்தோஷமுமற்று, உழுதல் கூலிவேலை செய்தல் வாணிகஞ் செய்தல் சினமிகுத்தல் அசத்தியங்கூறல் வீடுதூர்த்தல் மெழுகுதல் நெருப்புமூட்டல் தண்ணீர் கவர்தல் நெற்குத்துதல்

---

1. காதி - வெட்டி.

என்பன கூடப் பத்துவிதத்தான் வரும் பாவமும் அவ்வக்காலத்தில் நட்டமாதலின், அவனுக்கு சரீராந்தத்திற் சுமக்கும் பாவமேயில்லை.

இதற்குப் பிரமாணம் : சைவசமயநெறி. * "1 தேவராதியன றேசிகர்க்கென் 2 றட்டவனந்—தேவருல கத்திலமிர்தென்." என்றும், சிவதருமோத்தரம். 7 * "தலத்துழல் கூலிவேலை சந்தையிற் கொண்டு விற்கை—குலைத்தசொற் கூட்டுங் கோப மசத்தியங்கூற லுள்ளு 3 மலக்கிடன் மெழுகலங்கி யாக்கனீ ரரிசி யென்றே—யிலக்கியத்தியம்பும் பத்துந் தமக்கெனிற் பாவ மீட்டும்." அன்றியும், * 'தேசுறு சிவாதிபூசைக் கெனவிவை தம்மைச்செய்யி—னைசமாம் பாவபேதந் தம்மையே நாடிச்செய்யிற்—பாசமாய் நரகபேதப் படுகுழிப் படுத்தி யென்று—ழூசல்போலுழல்வித்தாக்குந் துயரினுக் களவுமுண்டோ." அன்றியும், * "அட்டவை தம்மைச் சொன்ன நால்வரு மருந்த வன்பா—லிட்டுமிக் கதனை யுண்கை யமுதமீயாதே யுண்கை—கட்டமுங் கடுவுமாவி கழிந்தவூன் காயந்தானு—மொட்டியே யுடலிற்றோன்றும் புழுவுமென்றொழிக வோர்ந்தே." அன்றியும், * "இறவாதிருக்கச் செய்யு மருந்தியாதே யெனினு மில்லகத்துத்—துறவா திருந்தாரனைவரொடுந் துய்த்தல் கடனே துயக்குற்றுப்—பிறர்சொல் பழியும் பேணுதே பெரியோர் தமக்கு நாணுதே—சிறிது மிரக்கஞ் செய்யாதே தானே யருந்துஞ் சிதடனுமே." என்றும், காசிகாண்டம். * "தேவர் 4 தென் புலத்தோர் துறந்தவர்க் களித்த சேடநல் லமிர்தினு மினிதா—மியாவரே யெனினு மதிதியரிறந்தோ ரிமையவ ரிங்கிவர்க் கின்றிக் 5 கூவல்போ லாழ்ந்த பாழ்வயி றதனிற் கொட்டுதற் கமைத்த வெண்சோறு—நாவுறை புழுவா மெனமறை யனைத்து நவின்றிடு மென்பர்நன் குணர்ந்தோர்." அன்றியும், * "உம்பர்வேதியர் விருந்தினரை யூட்டி நுகரார்—தம் பசிக்கன றணிப்ப 6 நனிதுய்த்த விவரை—வெம்பு கண்டக ருளத் தின்மிக வெம்மை புரியுங்—கும்பிபாகநர கத்திடை குளிப்ப வெறிவாய்." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல்வினு. இம்முறைமை மாமிசத்தை நிவேதித்தால், குருவாதிக்கு அர்ப்பிதமாகாதோ?

மேல்விடை. அன்னோர்க்கு ஊன் ஊட்டொணுது. எ-து குருவாதி நால்வர்க்கும் மாமிசத்தை நிவேதிக்க வொண்ணுமையின்

1. அதிதி - முன்பின்அறியாது அகாலத்தில்வந்தவன். 2. அட்ட- சமைத்த. 3. அலக்கிடல் - பெருக்கல். 4. தென்புலத்தோர் - பிதுர்க்கள். 5. கூவல் - கிணறு- 6. நனிதுய்த்த - நன்ருக அருந்திய. 7. உழல் - உழுதல்.

அது செய்தலிற் சரக்கொலைமை நீங்குதல் கூடாது. அஃதென் போலவெனில், ஒருவன் ஒரு குற்றஞ்செய்து அக்குற்றத்தை நீக் கும்பொருட்டு இராசாவைப் பிரார்த்திக்கச் செல்லுமளவில் அந்த அரசனுக்குப் பிரீதியில்லாத காரியத்தைச் செய்துகொண்டு போனனேயாகில்; முன்பு அவன் செய்த குற்றமும் தீராது பின் புந் தண்டிக்கப்படுவான். அது போலப் பிரீதியில்லாத மாமிசத்தை ஈசுராதி தேவதைகளுக்கு நிவேதித்தால், சரக்கொலைமையுந் தீரா மல் 1 அநர்ப்பிதமாதலின் அதிபாதகமும் வரும்.

மேல்வினா. மாமிசம் ஈசுவரப்பிரீதியன்றெனபது கூடாது. முன்பு கண்ணப்பர்நிவேதித்திருத்தலின்.

மேல்விடை. நன்று அறி கண்ணப்பரின் நம்பினைச் செருப் பால் உதைப்பது எவன் நலம் இல்லோயே. எ - து. கண்ணப்பர் மாமிசமிட்டு முத்தி பெற்றாரென்பது சத்தியம். அதுபோலப் பிறரும் மாமிசத்தை நிவேதித்தல் கூடாது. அதேதெனனில், கண்ணப்பர் பூர்வசன்மத்திற் செய்த தபோபலத்தினலே ஒரு காலத்திற் காளத்தியீசுரரைக் கண்ட மாத்திரத்திலே பேயின்கட் பிடியுண்டானொருவனுக்கு அவனது சரித்திரம் பேயின் சரித்திர மாகி நின்றதுபோலக் கண்ணப்பருடைய சரித்திரமெல்லாங் காளத்தியீசுரருடைய சரித்திரமாக நிற்றலால்; அவர்க்கு மோக்ஷங் கைகூடிற்று. அவர் உன்னைப்போல ஒரு ஆசாரியனை அடைந்து இது பாவம் இது புண்ணியம் இது செய்யலாம் இது செய்யலா காது, என்று ஒருகாலுங் கேட்டறிந்தவரு மல்லர். அவர் முன்பு பழகியிருந்த பழக்கத்தைப் பின்னும் பத்திமிகுதியினற் செய்தனர். அவர்போல ஒருவன் ஈசுரனுக்கு மாமிசம் நிவேதிப்பானாகில், வாய் நீரால் அபிஷேகம் பண்ணிச் செருப்புக்காலால் உதைப்பதுஞ் செய்யவேண்டும். அப்படியுஞ் செய்யலாமென்று ஒருவன் நினைத் தானாகில், அவன் போய் விழும் நரகத்திலே பின் வீழ்வார் ஒருவரு மில்லை. ஆதலின் கண்ணப்பருடைய பத்தியை நீ விதியென்று பிரமாணித்தல் கூடாது. மிகுதியும் நல்லறிவடையாத தீயோனே. எ-று.

இ - து, எவ்விதத்தானும் அசரக்கொலையிற் பாவங்குறையு மென்றும், அக்கொலைமையும் ஈசுராதி பூசையாலே கெடுமென் றும், மாமிசம் நிவேதித்தல் அவர்களுக்கு ஆகாதென்றும், கண் ணப்பர் செயல் பத்தியென்றும், கூறியது. (க)

---

1. அநர்ப்பிதம் - நிவேதிக்கத்தகாதது.

பின்னும் வாமியை நோக்கிப் பத்திமார்க்கத்தை விதிபோலப் பிரமாணித்தல் கூடாதென்று மேலும் வலியுறுத்திக் கூறுகின்றார்.

நலந்தருதா தையைவதைத்து முத்திபெற்றோ ருளரெனிலிஞ் ஞாலத்தூடே, கலந்துமுத்தி யடையு நர்க்கெல்லாமதுவோ, கதியுலகங் கடந்த பத்தி, வலந்தனைநீ விதியெனக் கூறுதல் பழுதூன் றனையிமய வரைமா தூக்கிந், நிலந்தனிற்பத் திரைமுதலாஞ் சத்திகட்கும் வரைவேனினீ நிகழ்த்த நீதே. (10)

நலந்தரு தாதையை வதைத்து முத்திபெற்றோர் உளரெனில் இஞ்ஞாலத்தூடே கலந்துமுத்தி அடையுநர்க்கு எல்லாம் அதுவோ கதி உலகங்கடந்த பத்திவலந்தனை நீ விதி எனக்கூறுதல் பழுது. எ - து. உலகத்தின்கண் ஓரொருவர் பத்திமிகுதியாற் செய்த சரித்திரங்களை நீ விதியென்று ஒருகாலும் பிரமாணித்தல் கூடாது. அதேதெனென்னில், சண்டேசுரநாயனார் பிதாவைக்கொன்று முத்தியடைந்தாரென்றும், சிறுத்தொண்டநாயனார் பிள்ளையை அறுத்து முத்தியடைந்தாரென்றும், அதுவே வழியாகப் பிறரும் பிதாவைக்கொன்றும் பிள்ளையைக்கொன்றும் முத்தியடைவாரில்லை. அப்படிப்போல இப்பொழுதும் ஒருவனுக்கு மிகுந்த பத்திவந்ததாயினும், விசேடித்து ஒரு கருமத்தைச் செய்வதொழிந்து முன் ஒருவர் பத்திமையாற் செய்தபடி தானுஞ் செய்யவேண்டுமென்பதில்லை. பின்னொருவன் முன்னோர் சரித்திரத்தைப் 1 பிரமாணித்தல் கூடாது. மேலும், விதிமார்க்கத்தையொழிந்து பத்திமார்க்கத்தை ஒருகாலும் பிரமாணிக்கவொண்ணாது. அதெப்படியென்னில், ஓரேரியின்கண்ணே மிகுந்த வெள்ளமானது ஒரு காலையில் நடுவே முறித்துக்கொண்டு சென்றதாயின், அதுவே ஏரிக்குக் 2 கலிங்கென்று விடுவாரில்லை. ஏரியின் கடையிற் கலிங்கு விடுவதே உண்மை. அதுபோலக் கண்ணப்பநாயனார் முதலாயினோர் செய்த உலகாதீதமாய சிவானுக்கிரக வலியினையுடைய மிகுந்த பத்தியை நாளும் விதியென்று கொண்டு ஈசுரனுக்கு நீ மாமிசம் நிவேதிப்பலென்பது மிகுந்த குற்றமென்று அறிவாயாக.

இதற்குப் பிரமாணம்: *"வெள்ளமிகுத் தேரிநடு வுடைத்தோடி னதுகலிங்காய்விடுகி லாரப்—பள்ளமடைத் திருபுறத்

1. பிரமாணித்தல் - பிரமாணமெனக்காட்டுதல்.
2. கலிங்கு - மதகு - நீர்மடை.

துங் கடைவிடுவ ருலகோரப் பரிசு போல—வுள்ளமிகுத் தறி வெழலாற் பத்திமிகுத் தமையானொன் றொருவர்செய்யிற்—[1]றென்னுணர்வோ ரதனைவிதி யென்றுபினும் புரிகுவரோ தெளிவிலோயே.'' என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல்வினு. ஈசுரனுக்கு மாமிசம் நிவேதித்தற்கு விதியில்லை யென்பது கூடாது. [2]ஈசுராபின்னமாகிய உமாபரமேசுவரிக்குப் பிரீதியாகையால்.

மேல்விடை. இந்நிலந்தனில் பத்திரை முதலாம் சத்திகட்கும் வரைவெனின் இமயவரை மாதுக்கு நீ ஊன்றனை நிகழ்த்தல் நீதே. எ - து. [3]தம்பனம் மோகனம் உச்சாடனம் வசியம் ஆகருஷம் வித்துவேஷணம் பந்தனம் மாரணம் என்று சொல்லப்பட்ட அட்ட கன்மங்களையும் குறித்து இந்நிலத்தின்கண் [4]பத்திரையாதிய அனந்தசத்திகளில் ஒவ்வொரு சத்திகளை அர்ச்சிப்போரும் அச்சத்திகட்கு மாமிசம் நிவேதித்தல் அயோக்கியமாதலின் அவர்கட்குச் செய்யும் முறைமையே சுத்தோபசாரஞ்செய்து அச்சத்திகளது [5]பரிசாரக பேதமாகிய பைசாசங்கட்கு மதுமாமிசத்தை நிவேதிப்பார்களாதலின், எல்லாச் சத்திகட்கும் காரணமாய் உலகத்தின்கண் உயிர்களை யெல்லாம் வளர்ப்பனவாகிய [6]முப்பத்திரண்டறங்களையும் வளர்க்கும் பேரருளினையுடைய உமாபரமேசுவரிக்கு நீ மாமிசம் நிவேதிக்கலாமென்று சொன்ன வார்த்தையே அதிபாதகம். எ - று.

இதற்குப் பிரமாணம் : * ''மண்டலத்துங் காளிமுதற் சத்திகடேவர்களெவர்க்கும் வழங்குறூஉ—னண்டியிருந் துள பூதபிசாசங்

---

1. தெளிவாகிய அறிவுடையோர். 2. ஈசுர அபின்னமாகிய - பரமேசுரனுடன் ஐக்கியமாயிருக்கும். 3. தம்பனம் - அசையாதிருத்துதல், மோகனம் - மயக்குதல், உச்சாடனம் - ஏவுதல், வசியம் வயப்படுத்தல், ஆகருஷம் -வரவழைத்தல், வித்துவேஷணம் - விரோதித்தல், பந்தனம் - கட்டுதல், மாரணம் - கொல்லுதல். இவை துஷ்ட கருமங்களாம். 4. பத்திரையாதியர் - பரமேசுவரியின் பணிப்பெண்கள். 5. பரிசாரகபேதம் - தொழிலாளர் வேற்றுமை. 6. முப்பத்திரண்டறங்கள் - ஆதுலர்சாலை சோலையாவின் வாயுறை கண்ணாடி, யோதுவார்க்குணவு தண்ணீருறுபந்தர் மடந்தடாகங், கோதிலாவுரிஞ்சி சுண்ணங்கொலையுயிர் விடுத்தலேறு, மாதலைக்கெண்ணெய் கன்றேய் மருந்து நன்மகப் பால்சோறு. அறுசமயத்தோர்க் குண்டியழிந்தோரை நிறுத்தலட்டேண், பிறரறங்காத்தலையம் பெண்போகமகப் பேறுய்த்த, னநிய தீன் விலங்கூண் வண்ணானிதன் சிறைச்சோறுதி, மறுதலத்தறமென்னுன்குமனை யறத்திவ்வூர் நல்கும். (திருக்குற்றாலப் புராணம்.)

கட் களித்திடுவாதனை நீயுங்—கண்டிருந்து முமைக்குரைத் தாயதி பாவ மெண்கருமங் கருதினேருன்—கொண்டவண்சூழ் பூதாதிக் கிடுவான்றிச் சத்திகள்பாற் குறுகா ரன்றே.'' என்றும், மற்றும் வருவனவற்ருற் காண்க.

இ - து பத்திமார்க்கத்தை விதிமார்க்கம்போல நெறியாகக் கொள்ளொணுதென்றும், சத்திபூசைக்கு மாமிச நிவேதனம் அயோக்கியமென்றும், கூறியது. (௧0)

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமி கூறுகின்முன்.

மாமிச நிவேதனம் சத்திகட்கு [1] அர்ப்பிதமாகாவிடினும்; அச்சத்திகளது [2] பரிசாரக பைசாசங்கட்கு இடுதலினுலும், சரக் கொலைமை நீங்கும். எந்தக்குயவன் சுடுகினும் பானைவேகல் பிர மாணம்போலு மென்ருயாகில்; அது கூடாதென்று மேலுத்தரங் கூறுகின்முர்.

தீதிலசத் திகட்சூழ்ந்தோ ரிடுமூனுண் டமரான்றிச் செறிபூ தாதிக், காதலின்மற் றவையுணலா னகலினுமக் கொலைமைமுழு தகன்றி டாவான், மீதலத்து மசுராரிராக் கதருமுண்ப ருனதனை விரும்பா ரென்றுஞ், சோதிமணி முடியமுதா சனர்சுரத்தன் மையினுற்பூ சுரரைப் போலும். (11)

தீதிலசத்திகட் சூழ்ந்தோர் இடும் ஊன் ஆண்டு அமரான்றிச் செறிபூதாதிக்கு ஆதலின் மற்றவை உணலான் அகலினும் அக் கொலைமை முழுது அகன்றிடாவால். எ - து. குற்றமற்ற பத் தினியாதி சத்திகளிடத்து அட்டகன்மங்களைப் பெறுவோர்கள் அவரது சமூகத்துள்ள தேவகணங்கட்கன்றிப் பூதபைசாசங்கட்கு மாமிசம் நிவேதிப்ப துண்டாயிருத்தலினன்றே, நீ அவற்றினுல் பாவம் நீங்குமென்பது கூறினை. அதுகூடாது. அவ்விடத்துண் டாகிய பூதாதிகளுக்கு மாமிசம் நிவேதித்தலால் அக்கொலைமை நீங்கினுஞ் சிறிதல்லது முழுதும் நீங்காது. அதெப்படியென்னில்

1. அர்ப்பிதமாகாவிடினும் - ஏற்றுக்கொள்ளத்தகாததாயினும்.
2. பரிசாரக - வேலையாட்களாகிய.

ஒருவன் தான்செய்த குற்றம் அற்பமாயிருக்கவும் அக்குற்றத்தை இராசாவை வழிபட்டு அவனது கருணையாற் றீர்த்துக்கொண்டானுகில்; இராசாவுக்கு மிகவுந் துவேஷம் வருவதாகிய மிகுந்த குற்றத்தைச் செய்தவன் இராசாவின் வாயில் காப்போன் அனுசரணையாற் றீர்த்துக்கொள்ளுதல் கூடாது. அவர்களாற் றீருமிடத்தும், [1] கிஞ்சித் மிதஞ் செய்வதொழிந்து குற்றமுழுதும் [2] பரிகரித்தல் கூடாது. குற்றமுழுதும் பரிகரிக்க நினைக்குமிடத்து அவர்களுக்குங்கூடவே தண்டனை வரும். அப்படிப் போல நாம் அசரத்தினுல் வரும் அற்பபாவத்தை ஈசுரப் பிரீதிபண்ணித் தீர்த்துக்கொண்டோமாயின், ஈசுரப்பிரீதியல்லாத சரக் கொலைத்தோஷத்தைச் சத்திபரிசனபைசாசங்களால் நீக்கிக் கொள்ளுவேனென்பது கூடாது. அந்தப் பிசாசகணங்களும், அந்தப் பிசாசகணங்களுக்கு அதிபதியாகிய சத்தியாதி தேவதைகளுக்குந் தங்களுக்கு ஈசுரன் அமைத்த முறைமை யொழிந்து ஏறக்குறைய நடந்தார்களாயின், அவர்களுஞ் சனனமரணப்பட்டு வருந்துவாரென்பது நிச்சயம்.

இதற்குப் பிரமாணம் : சிவஞானசித்தி. யாதொரு தெய்வங் கொண்டீரத்தெய்வ மாகியாங்கே—மாதொரு பாகனூர்தாம் வருவர் மற் றத்தெய்வங்கள் — வேதனைப்படுமிறக்கும் பிறக்கு மேல் வினையுஞ் செய்யு—மாதலானிவையிலாதா னறிந்தருள் செய்வ னன்றே.'' என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல்வினு. துர்க்காதிசத்திகளுக்கு மாமிசம் நிவேதிப்பது அயோக்கியமாயினும், வானுலகத்தின் கணிருந்துள [3] முப்பத்துமுக் கோடிதேவர்களுக்கும் அவற்றினை நிவேதிப்பது யோக்கியம்.

மேல்விடை. மீதலத்தும் அசுரர் இராக்கதரும் ஊன் உண்பர் என்றும் சோதி மணிமுடி [4] அமுதாசனர் அதனை விரும்பார் சுரத்தன்மையினுல் பூசுரரைப்போலும். எ-து. வானுலகத்தும் அசுரராக்கத பூத பிசாசாதிகளே மாமிசப்பக்ஷண யோக்கியர். பிரகாசம் பொருந்திய மணிமுடிகளைத்தரித்துள தேவர்களாவார் அமுதபக்ஷண யோக்கியர். அத்தேவர்கட்கு மாமிசம் நிவேதிக்க

---

1. கிஞ்சித்மிதஞ்செய்வது - ஒரு சிறிது குறைத்தல். 2. பரிகரித்தல் - அகற்றுதல். 3. முப்பத்து முக்கோடி - இருவர் மருத்துவர் எண்மர் வசுக்களொடீராருதித்தர் இனியவுருத்திரரேகாதசரிவர். 4. அசனம்- உணவு.

வொண்ணுதென்பதற்குப் பிரமாணம்: அநுமானம். அஃதெங்ஙனமெனின், வானுலகத்துத் தேவர்கள் ஊனுண்பதில்லை. தேவத்தன்மையுடையவர்களாதலின். எங்கே தேவத்தன்மையுண்டோ அங்கே ஊனுண்பதில்லை. இங்ஙனம் 1 பூசுரர்போலும் ஆதலிற் றேவர்கட்கு மாமிச நிவேதனம் அநர்ப்பிதமென்றறிவாயாக. எ - று.

இ - து. சத்திகள் பரிசனபைசாசங்கட்கு மாமிசம்நிவேதித்தலாற் சரக்கொலைமை முழுதும் நீங்காதென்றும், எவ்விடத்தும் அசுராதிகளுக்கே மாமிசம் அர்ப்பிதமென்றும், தேவப்பிராமணருக்கு மாமிசம் அநர்ப்பிதமென்றும், கூறியது. (கக)

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னும் வாமி கூறுகின்றான்.

நீர் இங்ஙனம் கூறிய அனுமானத்திலே தோஷமுண்டு 2 வியாத்தியின்மையின். அஃதெங்ஙனமெனின் 3 சபக்கமாகிய பிராமணரிடத்துத் தேவத்தன்மை யுண்டாயினும் புலாலுண்ணுமை நியமமில்லை. யாகத்தின்கட் புசித்தல் காணப்படுதலின், என்றவளவில் உத்தரங் கூறுகின்றார்.

பூசுரருக் கிழிவிலையா கத்துயிர்கொன் றருந்தலின்
விண் புகுதா நிற்பர். கோசமெடுத் துரைநவிற்று சிரியர்
சிறார்க் கிதமதுபின் கொடுப்பான் முன்ன, ராசுமிகு துயர்
விளைத்து மிதம்துவரப் பொருள் பெறவி னரிய வேத,
வோசைமிகு மமருலகை யவர்வதைத்த சீவனும்பெற் றுய்
தலாலே. (12)

யாகத்து உயிர் கொன்று அருந்தலின் பூசுரருக்கு இழிவு இலை விண்புகுதாநிற்பர். எ-து. பூசுரர் 4 யாகத்தின்கண் சீவகொலை பண்ணிப் புலாலுண்டார்களாயினும், புலாலுண்டோர்கள் அடையும் பாவத்தினையடையாமல் அதனால் மிகுந்த புண்ணியராகித் துறக்கலோகமடையாநிற்பர்கள். ஆதலின், அன்னோர் ஒருகாலும் புலாலுண்டதேயில்லை.

---

1. பூசுரர் - பூலோகதேவர் - பிராம்மணர். 2. வியாத்தி - மாறுபடாத சம்பந்தம். 3. சபக்கம் - துணியப்பெற்ற துணிபொருளையுடையது. 4. யாகம் - தேவதைகளைக்குறித்து அக்கினியின்கண் மந்திரவாயிலாய் நெய்முதலியவற்றைப் பெய்யும் தொழில்.

மேல்வினா. பூசுரர் யாகத்தின்கட் சீவகொலை செய்தும் புலாலுண்டும் தாழ்வடையாது சொர்க்கமடைய வேண்டியதென்?

மேல்விடை. கோசம் எடுத்து உரை நவிற்று ஆசிரியர் சிறார்க்கு இதமதுபின் கொடுப்பான் முன்னர் ஆசு மிகு துயர் விளைத்தும் அதுஇதமா பொருள்பெறலின் அவர் வதைத்தசீவனும் அரிய வேத ஓசை மிகும் அமருலகைப் பெற்று உய்தலாலே. எ-து. புத்தகத்தின்கணுண்டாகிய சத்தங்களைப் பள்ளியின்கட் சிறுவர்கட்கு ஓதுவிக்கும் உபாத்தியாயரானவர் அன்னோர்க்குப் பின்பு சுகத்தை விளைக்கும் பொருட்டு முன்னர் அனேகங் குற்றமாகத் தோன்றும் துக்கங்களை விளைவித்தும் அவரது மாதாபிதாக்கள் அவற்றினை மிகவும் இதமாகக்கொள்ளுதலின் உபாத்தியாயரும் பொருள் பெற்றுச் சுகமடைதல் போலப் பூசுரர் யாகத்தின்கட் கொன்றசீவன் அப்பொழுது துக்கத்தை யடைந்ததாயினும் பின்பு மிகவும் வேதவோசை முழங்குதலையுடைய தெய்வலோகத்தை யெய்திச் சுகமடைதலால் யாகம்புரிந்த பூசுரரும் பரமேசுரன்து அருளினாலே வானுலகம் புகுந்து உய்யா நிற்பர்கள். எ — று.

இ-து. யாகத்தின்கட் பூசுரர்விதி புரிதலாற் பாவமில்லையென்று கூறியது. (கஉ)

இப்படிச்சொன்ன சைவசித்தாந்தியைப் பின்னும் வாமி நோக்கி யாக நிமித்தம் இறந்த சீவன் சொர்க்கமடைவது எவ்விதத்தானென்று வினவ, மேலுத்தரங் கூறுகின்றார்.

உய்ந்திடுமம் மகத்தவிமுன் பரன்கொளலா னவ்வூன்
றாய் துறலாற் சுத்தி, தந்தமறை மந்திரத்தாற் றழல்விடங்
கெட் டுருவிருக்குந் தன்மைத் தவ்வூ, னிந்தடைவு புரிய
வுனக் கிருமறைகூ றுதியற்றற் கியம்பா நிற்கு, மந்தவுரை
யிறைமொழியன் றூரணத்துக் கதுவிருத்த மாகை யாலே. (13)

உய்ந்திடும் அம்மகத்து அவிமுன் பரன்கொளலான். எ-து. யாகத்தின்க ணிறந்துள சீவன் சொர்க்கமடையும் அவ்விடத்து ருத்திராவிப்பாகம் முதற்கொடுத்து மற்றுள்ள தேவர்கட்கு முறை தவிராது பின்பு [1] அவிப்பாகங் கொடுத்தலின்.

---

1. அவிப்பாகம் - வேதமந்திரத்தால் அனல்வழி தேவதைகட்கு கொடுக்கும் உணவு.

உருத்திராவிப்பாகமுதலென்பதற்குப் பிரமாணம்: சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம். * "கட்டக் காட்டினடமாடுவ ரியாவர்க்குங் காட்சியொண்ணார்—சுட்டவெண்ணீறணிந் தாடுவர்பாடுவர் தூயநெய்யால்—வட்டக்குண் டத்தி லெரிவளர்த்தோம்பி மறைபயில்வா—ரட்டக்கொண் டுண்பதறிந்தோ மேனுமிவர்க் காட்படோமே." என்றும், பெரியபுராணம். * "வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பா—லையுமனத் தினிமையினி லேயமிக மென்றிடலாற்—செய்யுமறை வேள்வியோர் முன்புதருந் திருந்தவியி—னெய்யும்வரி சிலையவன்றா னிட்டவூ னெனக்கினிய." என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

மேல்வினா. நன்றாயிற்று. முன்னந்தேவார்ப்பிதமல்ல புலாலுணவென்று சாதித்தல்வேண்டிப் பிராமணரைத் திட்டாந்தங் கூறினீர் அவர்கள் யாகத்தின்கட் புசிக்கின்றாரென்பது கொண்டு இங்ஙனந் தேவர்களுக்குந் தேவாதிபராகிய உருத்திரற்கு மாகுமென்றீர். முதல் ஆகாதென்றதெது? இவ்விடத்து ஆகுமென்ற விசேடம் யாது?

மேல்விடை அவ்வூன் தூய்து உறலால் எ-து. யாகத்தின் கணிருந்த மாமிசமும் யாகமல்லாதவிடத்திருந்த மாமிசம் போல அசுத்தமாகாமல் சுத்தியடைதலால்.

மேல்வினா. யாகத்தின்கணிருந்த மாமிசம் யாதினாற் சுத்தியடைந்தது?

மேல்விடை. சுத்தி தந்தமறை. எ-து. அது வேதமந்திரத்தாற் சுத்தியடையும்.

மேல்வினா. அப்படி மந்திரத்தாற் சுத்தியடையிற் புலாலுருமாறி மரக்கறி ரூபமடையவேண்டும். அஃதின்மை யாற்சுத்தியடைந்ததற்கு அடையாளம் யாது?

மேல்விடை. மந்திரரால் தழல்விடங்கெட்டு உரு இருக்குந் தன்மைத்து அவ்வூன். எ-து. மந்திரவாதிகளினாலே அக்கினி உருவமிருக்கத் தக்கதாகச்[1] சத்திதம்பனை யடைந்தது போலவும் மந்திரத்தாற் றடைபட்ட எட்டி அலரி முதலிய விடங்களெல்லாம்

1. சத்திதம்பனை — தாகசத்தி கட்டுப்பாட்டை,

ஒருவரை மிகக் கொல்லுந் தன்மை கெட்டது போலவும் வேள்விக்க ணிருந்த புல்லாலும் மாமிசத்தன்மை கெட்டு நிருமலத்தன்மையடையும். அப்படியாதலின், அது உருத்திராதி தேவார்ப்பிதமாம். அதனாலே அந்தவுடலத்தின்கணிருந்த சீவனுந் திவ்வியபோகத்தை அடையும். அப்படிப்[1] பரசிவகிதஞ் சாதித்தலின், வேள்விமுடிந்த பூசாருந் திவ்விய பதவிக் கனுகூலமாகிய சிறப்பினை அடையாநிற்பர்கள்.

ஆகம விதியென்பதற்குப் பிரமாணம்: திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம். * "பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டெரி யோம்புஞ்—சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய—பிறப்பில் பெருமானைப் பின்றாழ் சடையானை—மறப்பி லார்கண்டீர் மையறீர்வாரே." என்றும், திருநாவுக்கரசு நாயனார் தேவாரம், * "சிந்தையைத் திகைப்பியாதே செறிவுடையடிமை செய்ய—வெந்தைநீ யருளிச்செய்யா யாது நான் செய்வ தென்னே—செந்தீயார் வேள்வியோவாத் தில்லைச் சிற்றம்பலத்தே—யந்தியும் பகலுமாட வடியிணை யலசுங் கொல்லோ." என்றும், சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம். * "ஒருமேக முகிலாகி யொத்துலகந் தானா யூர்வனவு நிற்பனவு மூழிகளுந் தானாய்ப்—பொருமேவு கடலாகிப் பூதங்களைந்தாய்ப் புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையினானைத்—திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த திருத்தக்க வந்தணர்க ளோதுநக ரெங்குங்—கருமேதி செந்தாமரைமேயுங் கழனிக் கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வாதியுத்தரம். இப்படி நீர் சொன்னது சத்தியம். யாவனொருவனாகினுஞ் சாக்கொலை பண்ணும்பொழுது அவற்றினை மந்திரோபதேசத்தினாலே சுத்திபண்ணி அவற்றினூனைத் தேவார்ப்பிதம் பண்ணுமற் றன்னைக் குறித்துக்கொன்று தின்றானாயின் அவன் நரகத்தழுந்துவனென்பது[2] உபயமதசித்தமே. ஆதலால், நாமும் மந்திரோபதேசத்தினாற் பசுவைச் சுத்திபண்ணி அதனூன் புனிதமாதலின் மாதாவுக்கும் அவளது சமுகத்துள்ள ஈசுராதி தேவதைகளுக்கும் நிவேதனம்பண்ணி அவ்விடத்து இறந்த பசுவை முத்தியடைவித்து நாமுந் தேவியுடைய பிரசாதங் கொள்ளுதலால்அவளுடைய பாதத்தை அடைதலுண்மையாதலின், உம்முடைய வேள்விபோலும் நம்முடைய வாமபூசா சரித்திரம்.

1. பரசிவகிதம்—அன்னியவுயிர்க்கு நலம். 2. உபயமதசித்தம்—இருவர் கருத்துக்கு மொத்தது.

மேல்விடை. இந்த அடைவுபுரிய உனக்கு இருமறை கூறுது. எ - து. நம்முடைய வேள்விபோலப்[1] பசுப்படுத்து வாம பூசை பண்ணலாமென்று உனக்கு வேதவிதியின்மையின், அப்படிச் செய்தல் கூடாது.

மேல்வாதி யுத்தரம். வேதவிதியில்லாததுகொண்டு நமக்கு ஒரு குறையில்லை. பசுப்படுத்து மாதாவுக்கு அர்ப்பிதம் பண்ணலாமென்று[2] வாமதந்திர விதிதமுண்டு.

மேல்விடை. இயற்றற்கு இயம்பாநிற்கும் அந்த உரை இறை மொழி அன்று. எ - து. அப்படி உனக்குச் சத்திபூசை பண்ணலாமென்று கூறிய வாமதந்திரம் ஈசுரவாக்கியமன்று.

மேல்வினா. வாமதந்திரம்[3] அநீசுரவாக்கியமென்பது எதினால்?

மேல்விடை. ஆரணத்துக்கு அதுவிருத்தம் ஆகையாலே. எ - து. நம்மால் அங்கீகரிக்கப்பட்ட வேதங்களுக்கு உன்னுடைய வாமதந்திரம் விரோதமாயிருத்தலி னெனக்கொள்க. எ - று.

இ - து. வேள்விக்கணிறந்த சீவன் சொர்க்கமடையுமென்றும், அங்ஙனம் வாமதந்திரம் வேதவிதி அன்றென்றும், ஆதலின் அந்நூல் ஈசுவர வாக்கியமன்றென்றும் கூறியது. (௧௩)

இப்படிச் சொன்ன சைவசித்தாந்தியை நோக்கி மேல் வாமி கூறுகின்றான்.

உம்முடைய வேதத்துக்கு நம்முடைய வாமதந்திரம் விரோதமாதலின் வாமதந்திரம் அநீசுவர வாக்கியமாவதில்லை. வாமதந்திரத்துக்கு வேதம் விரோதமாதலின் வேதம் அநீசுவர வாக்கியமென்று கூறுதலும்; அவனை நோக்கி உத்தரங் கூறுகின்றார்.

ஆகியவெக் கலைத்துணிவு மவற்றுளவற் றுளதெவற்று மடங்கா தாத, லேகனுரை மறையாதி யியம்புமவற் றுளதி மூக்கென் றெவர்க்குஞ் சித்தி, வாகுறவுண் டதைமதியே லருளாறு கமவேத வழிவந் தோர்க்குண் டோகைதரும் பிரமசித்தி யொழிந்தவையு மவர்க்கெளிதென் றுளத்துட் டேரே. (14)

---

1. பசுப்படுத்து-பசுவைக்கொன்று. 2. வாமதந்திரம்-வாமஆகமம். 3. அநீசுரவாக்கியம் - ஜீவவாக்கியம்.

ஆகிய எக்கலைத் துணிவும் அவற்றுள் அவற்றுளது எவற்றும் அடங்காது ஆதல் மறையாதி ஏகனுரை. எ - து. உலகின் கணுள்ள [1] பலசமய நூல்களும் மிருதி புராண கலைஞானாதிகளும் [2] வேதாகமத்தின் [3] வழிநூல் சார்புநூல்களாதலானும் அவைகளில் முடிந்த பொருள்களை வேதாகமங்கள் ஓரோவிடத்து எடுத்துக் காட்டுதலானும், வேதாகமத்துட் டுணிபொருள்கள் அவைகளின் அளப்பரிதாய அருத்தமாகையினானும், வேதாகமங்களிரண்டுமே ஈசுவரவாக்கியம். அதெப்படியென்னில் இராசாவின் வாயிற்கணக்கிற்கிராம வழிக்கணக்குகள் அளவிடப்பட்டு அக்கிராம வழிக் கணக்குகளின் இராஜாவின் வாயிற்கணக்குகள் அளவிடப்படாமைபோலுமெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: சிவஞானசித்தி. ❋ "அருமறையாகம முதனூ லனைத்து முரைக்கையினா னளப்பரிதா மப்பொருளை யானருளா லனுக்க—டருவர்கள்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற் றர்க்கமொடுத் தாங்களினாற் சமயஞ் சாதித்து—மிருதி புராணங்கலைகண் மற்று மெல்லா மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம் வேதாங்கஞ்—சுருதி சிவாகம மொழியச் சொல்லுவதொன் றில்லை சொல்லுவார் தமக்கறையோ சொல்லொணாதே." என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

மேல்வினா. எல்லாச் சமயங்களின் முடிபொருளும் வேதாகமத்தடங்குமாயின், எம்முடைய வாமதந்திரத்தை வேதாகமங்கள் சொல்லாவென்றது எப்படி?

மேல்விடை. இயம்பும் அவற்றுளது இழுக்கென்று. எ - து. உன்னுடைய வாமதந்திரத்தை வேதாகமங்கள் சொல்லும். சொல்

---

1. பலசமய-நூல்கள் புகலுலகாயதம் பவுத்தஞ்சயினம் புதுவைணவமார்க்கம், பூரணத்துவிதம் நகுலீசம - தஞ்சை வஞ்சோகநெறி ; அகவிரசேசுர மவுலோக்கியமேயக்கக் கான்மார்க்கம், அயமனுசயிமினிபாணினி சாங்கியமரவப் பெருயோகம் ; இகலுறுமிவைகள் எணியவாயினுமினியதி வெலையெய்தவின நிலவணியு மிறையவனணியே யிணையறுமெனவோதிச்; சகலமுமெனது வடிவென வருடிருத்தாயேதாலேலோ, சதுர்மறைபரவும் பொருள்வையில் விரவுந்தாயேதாலேலோ. மிருதி - மனு அத்திரியாதி 18-ம். புராணம் - கந்தபாகவதாதி 18-ம். கலைஞானம் - அக்கரவிலக்கணம் இலகிதம் கணிதாதி 64ம் ஆம். 2. வேதம் - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், எனநான்காம். ஆகமம் - காமிகம் முதலாக வாதுளமீறாகக்கூறும் 28-ஆம். 3. வழிநூல் -முதனூல் வழியே விகற்பித்துரைத்தநூல். சார்புநூல் - முதனூல் வழிநூல்களது பொருட்கூட்டித் திரிபுவேறுடையநூல்.

லுமிடத்துச் செந்நெறியென்று துதியாது கொடுநெறியென்று நிந்திக்கும். அஃதேனெனில், கொலைமைசூழ்தலின். இதற்குப் பிரமாணம் : திருவள்ளுவர், * "நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்—கொல்லாமை சூழுநெறி." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

மேல்வாதியுத்தரம். அப்படி வாமதந்திரங் கொடுநெறியாகில், அந்நெறி நின்றோர்க்குத் [1] தெய்வீகசித்திகள் உண்டாகாமற் போகவேண்டும். [2] நாதாந்திகளாயினோர் சத்தியை அர்ச்சித்து அவளது கருணையால் அனந்த சித்திகளையடைந்து உலகின்கண்ணே வந்து விளையாடுதலின், வாமதந்திரம் செந்நெறியே.

மேல்விடை. எவர்க்கும் சித்திவாகு உற உண்டு அதை மதியேல். எ-து. உன்னிலு முயர்ந்தோராகி வேதஞ் சொன்ன தருமத்திலே நடக்கும் உட்சமயிகளுக்கும் உன்னோடு சமான [3] பாஷண்டராகிய வேதத்துக்கு அன்னியராகிய புறச்சமயிகளுக்கும் உன்னிலுந் தாழ்ந்தோராய் உலகத்தின்கண்ணே துர்த்தேவதை பூதபைசாசாதிகளை அனுசரிப்போர்க்கும் அவரவர் முற்செய்த கன்மபலத்தினாலே அத்தேவதையை உண்டென்று கருதி வைராக்கியங்களைச் செய்தலினால் அந்தத் தேவதைகள் தங்கள் தங்களுக்குண்டான சக்திக்கிசைய ஒவ்வொரு சித்திகளைக் கொடுக்குமாதலின்; உன் சமயத்துக்கு மாத்திரமுண்டாய் மற்றோரிடத்தும் இல்லாவிடினன்றோ, சித்தி [4] பிரதானமாக நாட்டவேண்டும். சர்வரிடத்திலும் உண்டாயிருத்தலின், அவற்றினைக் காரணமாக மதித்து வாதித்தலை விட்டுவிடு.

மேல்வினா. சர்வரிடத்திலுஞ் சித்திகளுண்டாகில், எல்லாச் சமயங்களுக்குஞ் சமமேயென்னாது உம்முடைய வேதாகமஞ் சொன்ன தருமத்திலே நடப்பது அதிகமென்று சொல்லுவானேன்? மேல்விடை. அருளால் ஆகமவேதவழி வந்தோர்க்கு ஒகைதரும் பிரமசித்தி உண்டு. எ-து. திருவருள் துணையாக வேதாகமவழியை உள்ளபடி யறிந்து அடைந்தோர்க்கு யாவராலுங் கிட்டுதற்கரிதாய நித்தியானந்தத்தைக் கொடுப்பதாகிய [5] பரமசிவசித்தி கிடைக்கும்.

---

1- தெய்வீக -தெய்வசம்பந்தமான. 2 நாதாந்திகள்-நாதந்தின்முடிவையுணர்ந்தவர்கள். 3. பாஷண்டர் - கீழ்மக்கள். 4. பிரதானம் - முக்கியம். 5. பரமசிவசித்தி - பரமசிவசாக்ஷாத்கார வடிவமான பிரஹ்மஞானம்.

இதற்குப் பிரமாணம் : சிவஞானசித்தி. * " அருளினு லாகமத்தே யறியலா [1]மளவி னுலுந்—தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே—மருளெலா நீங்கக்கண்டு வாழலாம் பிறவிமாயா—விருளெலா மிரிக்கலாகு மடியரோ டிருக்கலாமே." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

[2] சுத்தமுத்தியடைந்தாரொழிந்து யாவனொருவன் அடையும் பதமுத்திகளுந் துன்பமே யல்லா தின்பமில்லை என்பன குறித்து ஓகைதரும் பிரமசித்தியென்று கூறினுரெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம் : திருவள்ளுவர். * "தனக்குவமை யில்லாதான் ருள்சேர்ந்தார்க் கல்லான்—மனக்கவலை மாற்றலரிது." என்றும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் தேவாரம். * "செல்வ நெடுமாடஞ் சென்றுசே ணோங்கிச்—செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற—செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலமேய—செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே." என்றும், திருமந்திரம் * "ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்—கழிந்தேன் கடவுளு நானுமொன்ருனே—னழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்—செழுஞ்சால் புடைய சிவனைக்கண்டேனே." என்றும், சுந்தரமூர்த்திநாயனுர் தேவாரம். * " விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை—யடையிலன்புடையானை யாவர்க்கு மறியொண்ணு—மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்—சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே." என்றும், திருவாசகம். * "நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்—சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணங்—குறியொன்று மில்லாத கூத்தன்றன் கூத்தையெனக்—கறியும் வண்ண மருளியவா ருர்பெறுவாரச் சோவே." என்றும் சிவதருமோத்தரம். * "இம்முறையமாருமிடுக்கணெய் துவர்—தம்மினு முயர்ந்தவர் பதத்தைத் தாமுனி—யெம்முறையானுமெய் யிடுக்க ணேதுவே—செம்மைய செல்வமே சிவானு பூதியே." என்றும். தத்துவாமிர்தம். * " மூவரோ முதன் மொழிந்திடு மிமையவர் பதமுஞ்—சாவதோடுறு சனனமென் சாகரத் தழுந்தி—மேவ்பாதியிற் பட்டுநாண் மிகுதியுற்றழியும்—தேவர்தம்பதந் தீதென மிகவெறுத்தனனுல்," என்றும், சொரூபானந்தசித்தி. * " ஆதலா னறியு மறிவெலாங்!! கைவிட்டறிவினுக் கறிவதாய் நின்ற—பேதமில் பிரம மொன்றுமே காண்

1. அளவிலானும் என்றும் பாடம். 2. சுத்தமுத்தி - விதேகமுத்தி.

பான் பேறுபேரின்பமாம் பிறத்தல்—சாதலற் றிருக்கு மதனை யோர் வருத்த மின்றியே சாரலா யிருக்க—வா தரித்தறியா ரற்பமே விரும்பி யனந்ததுக் கத்திலே யமைவார்.'' என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க. இத்தன்மையுடையன வேதாகம நெறி களாதலின், அவைகளே அதிகமென்ற தெனக்கொள்க.

மேல்வின. ஆனல் உமக்குப் பிரமஞ் சித்திக்குமாயின் அச் சித்தி 1 அப்பிரத்தியக்ஷமே. எமக்கு உண்டாகிய பிரத்தியக்ஷ சித்திகள் உமக்குண்டாகா,

மேல்விடை. ஒழிந்தவையும் அவர்க்கு எளிதென்று உளத்துள் தேரே, எ - து. வேதஞ்சொன்ன தருமத்திலே நடந்து பூரண வஸ்து சித்தியடைந்தோர்க்குக் கைவசமாகாத சித்திகள் உலகத் தின் கண்ணே இல்லை, அஃதெங்ஙனமெனின், 2 பூச்சக்கரவர்த்தி யாகிய ஒருவனுக்கு ஒரு கிராமமணிய விசாரணை இன்மையால், அந்தக்கிராமாதிகாரம் அவனுக்கு உண்டென்றும் இல்லையென் றுஞ் சொல்லவேண்டுவதில்லை, அதுபோலுமெனக் கொள்க. எ - று.

இதற்குப் பிரமாணம்: திருவாசகம். *''மண்ணினின் மாயை மதித்து வருத்த மயக்கறு மாகாதே—வானவ ரும்மறியாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே—கண்ணிலி கால மனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே—காதல்செ யும்மடி யார்மன மின்று களித் திடு மாகாதே—பெண்ணலி யாணென நாமென வந்த பிணக்கறு மாகாதே—பேரறியாதவனேக பவங்கள் பிழைத்தன வாகாதே— யெண்ணிலியாகிய சித்திகள் வந்தெனை யெய்துவ தாகாதே— யென்னை யுடைப்பெரு மானரு 3 ளீச னெழுந்தருளப்பெறிலே.'' என்றும், பட்டணத்துப் பிள்ளைபாடல். * ''பொருளுங் குலனும் புகழுந் திறனு—மருளு மறிவு மனைத்து - மொருவர்—கருதா 4 வென்பார்க்குங் கறைமிடற்றாய் தொல்லை—மருதாவென் பார்க்கு வரும்.'' என்றும், அனுபவசாரம். * அறமு நல்கிடும் பொருளுடனி ன்பமுமருந்தவங் களுநல்குந் —துறவுங் கல்வியுந் துணிவொடு நிலை மையுந் தூய்மையு மிகநல்கு—நிறமு நீர்மையு நினைந்தவை முழுவது நிகரில்வீ டதுநல்கு—மறிவனன்கழ லெர்ழியவங் கவைநினைந் தழிபவ ரறிவென்னே.'' என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

---

1. அப்பிரத்தியக்ஷம் - காணுததது. 2. பூச்சக்கிரவர்த்தி - சருவ தேச மன்னர் மன்னன். 3. ஈசன் எழுந்தருளப் பெறில் யாவுமாமென் பதாம். 4. என்பு ஆர்க்கும் - எலும்பணியும்.

இ - து. வேதாகமம் ஈசுரவாக்கிய மென்றும், அவற்றின் வழி நடப்பதே செந்நெறியென்றும், பூரணவஸ்து சித்தியே சித்தி யென்றும், கூறியது. (கச)

இப்படிச்சொன்ன சித்தாந்தியை நோக்கி மேலும் வாமி கூறு கின்றான்.

உம்முடைய வேதாகம வழிப்படி நடந்துளோர்க்குப் பூரண வஸ்து சித்திக்குமென்று நீர் சொல்லுவதே யொழிந்து நம்முடைய வாமதந்தி[1] ரானுசாரணைபோல உமக்கு அந்தவஸ்து உடனே பிர சன்னமாவதில்லை. ஒருவன் கூழேனுங் காடியேனும் பசிக்கு உதவினதே[2] தேவாமுதமென்பது போல உம்முடைய வேதாகம வழி நின்று வஸ்து சித்திக்குமோ சித்தியாதோ வென்று பிரயாசப் படுவதிலும் வாமதந்திரத்திற் சொன்னபடி நின்று சத்தியை ஆரா தித்து எளிதிற் சித்தியடைவதே விவேக மென்று கூறுதலும், அவனுக்கு உத்தரங் கூறுகின்றார்.

தேர்ந்திலைகொல் கீழ்நெடு சேர்வதெளி துயர்மனை யுஞ் சேரக் கிட்டா, சார்ந்திடின் வேண்டியதருமாற் றனைத் தருமெம் மிறையுமிவண் டனிற்சார் வாய்ப்பின், பேர்ந்திடு மெண் கருமிகள்சார் வுன்னதுலோ கிதன்மகிழும் பெரி யோய் ஞானங், கூர்ந்தவர்வான் சிறப்பெனினுங் கொலையின் வரு மெனிற்கடையாக் கொள்வ ரன்றே. (15)

தேர்ந்திலைகொல் கீழ்நெடு சேர்வது எளிது உயர்மனையுஞ் சேரக்கிட்டா சார்ந்திடின் வேண்டிய தருமால் எம்மிறையும் தனைத் தரும் இவண்டனிற் சார்வாய்ப் பின் பேர்ந்திடும் எண்கருமிகள் சார்வு உள்ளது: எ - து. இங்ஙனம் கூறியவற்றுள்ளும் இதனை நீ மிகவும் விசாரியாது கூறினை. அஃதெங்ஙன மெனின் இப்பூமி யின்கண் ஒருபுலையனைக்காண்டலும் அவனது நட்புக்கொள்ளுத லும் அரிதல்ல. எளிதிலாகும். அவனாற் பெறும் பயனும் புல் விறகு முதலிய கருமமாம். தேசாதிபதியைச் சினேகித்தல் ஒரு வர்க்கும் எளிதிற்கூடாது. அவனது வாயில் மந்திரியாதியோர் களை ஒருவன் அனுசரித்துச்செய்கிற உபசாரத்தளவில் ஏககாலத்தா

1. அனுசாரணை - தொடர்ந்து நடத்தல்.
2. தேவ அமுதம் - தேவர் உணவு.

யினும் அநேககாலத்தாயினும் இராச சமுகங் கிட்டுதல் செய்வன். அப்படி அந்த ராஜாவை அடைந்து அவனது சித்தம்வர நடந்தானாகில், அவனைத் தன்போலத் தேசாதிபதியாக்குவன், அப்படி எம்முடைய கர்த்தாவை யாவனொருவன் கருதிச் சுருதி குருசுவானுபவ சித்தமாக அடைந்தானாகில், அவனைத் தன்மயமாக்குவன். அதுவன்றி, இவ்வுலகின்கண் ஒரு 1 மகத்துவம் போலக்காட்டி அவற்றினால் தமது சரீரத்துக்கு 2 அருந்தல் பொருந்தலையும் கீர்த்தியையும் பிறராலடைந்தும் அச்சரீராந்தத்து அழிவனவாகிய தம் பனாதி அட்டகன் மங்களை ஒரு பொருளாகக்குறித்த புல்லறிவானர் அனுசரிக்கும் நெறிகாண் உன்னுடைய வாமதந்திராதி கொடுநெறிகள்,

இதற்குப்பிரமாணம்: * ' வலிதொருபுலையன்றன்மனைக் குயர்ந்தோர் வரினெதிர் தொழுதுபுன் கருமஞ்—சொலுமுன முடிப்பனமைச்சரா திகளாற் றுரைதனைப் பலபக லடைந்தோர்க்—கலகில் வாழ் வருள்வ னெனத்தமை நினைந்தோர்க் கருள்வர்புன்றேவரெண்கருமங்—குலவு மீசனுந்தன் னடியாராற் றனையே குறுகினர்க் கருளுவன் றனையே. " என்றும், மற்றும் வருவன வற்றாற் காண்க.

மேல்வினா. ஆனால் வாமதந்திரத்தை அட்டகன்மங்களை இச்சித்தோரன்றி மோக்ஷத்தை வேண்டிய ஞானிகள் 3 அனுசரியார்களோ?

மேல்விடை. உலோகிதன் மகிழும் பெரியோய் ஞானங் கூர்ந்தவர் வான் சிறப்பெனினும் கொலையின் வருமெனில் கடையாக் கொள்வர் அன்றே. எ-து. கொலையாதிகட்கு அஞ்சாமை செய்தலினாலும், சத்தி பூசையின்கண் அனேக ஸ்திரீ கணங்கள் சூழ நடுநாயகமாய்த் தோன்றிக் களித்து விளையாடுதலினாலும் உனக்கொருவர் நிகரிலையென்றும் நீயே என்னுடைய பிராண சினேகனென்றும் இதற்குச் சந்தேகமில்லை வலக்கைதாவென்றும் உலகின்கண் மூடருளெல்லாம் முழுமூடனாகிய உலோகாயதனாலே மகிழப்பட்டுள்ள பெரியோனே! கூறுதும் கேட்பாயாக. ஆருடஞானத்தையுடைய 4 நாதாக்கள் மோக்ஷமெளிதிற் கிடைப்பதாயினும் ஒரு கொலை முன்னிலையாகக் கிடைக்குமாயின் அதனைக்கடையான மோக்ஷமாகக் கைவிடுவாராதலின், இங்ஙனம் கொலை முன்னிலையாக மறுமைக்கண் நரகத்தை விளைக்கும் அட்டகன்மங்களைத் தருவதாகிய உன்னுடைய கொடுநெறியை ஒருகாலும் விரும்பார்கள். எ-று.

---

1. மகத்துவம் - பெருமை. 2. அருந்தல் பொருந்தல் - உண்வாதி. 3. அனுசரியார்களோ-பின்பற்றார்களோ. 4. நாதாக்கள்-பெரியோர்கள்.

உலோகாயதன் மகிழும் பெரியோய் என்பதற்குப் பிரமாணம்: சிவஞானசித்தி. "வாழவே வல்லை வாமி வலக்கைதாவென்னு யிர்க்குத் — தோழனீ யுன்னை யொப்பார் சொல்லிடி னில்லை கண் டாய் — கோழைமா னுடர்தீ தென்னுங் கொலைகள வாதிகொண் டே — சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடரெனத் தோன்றி னையே." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

கொலையான் வரும்பேற்றைக் கடையாகக் கொள்வரென்ப தற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். "நன்றாகு மாக்கம் பெரி தெனினுஞ் சான்றோர்க்குக் — கொன்றாகு [1] மாக்கங் கடை." அன் றியும், "அவிசொரிந் தாயிரம் [2] வேட்டலி னொன்ற— [3] னுயிர் செ குத் துண்ணாமை நன்று." என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

ஞானிகள் அட்டகன்ம நெறியை வேண்டார்களென்பதற்குப் பிரமாணம்: திருமந்திரம். "வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர் — வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர் — வேண்டார்கள் கன்ம மிகுசிவயோகிகள் — வேண்டார்கள் கன்மம் விழுமியோ ரார்ந்தன்பே." என்றும், புலான்மறுத்தல். "இம் மைப் பயனு மிருநாலு கன்மங்க—டம்மூட் குறித்தான் கொடுபூசித் - தம்மார்க்கஞ் — செய்வ தலது சிவஞான வாரிதிசேர்ந் — துய்யு மவர்க் காகாவுணர்." என்றும், மற்றும் வருவன வற்றாற்காண்க.

இ-து. [4] தூர்த்தேவதா பிரசன்ன மெளிதென்றும், அதனான் வரும்பயன் மிகவுஞ் சிறுமையினையுடைய அட்டகன்மங்களென்றும், அதனை அனுசரிப்போர் மிகவும் புல்லறிவுடையோரென்றும், சிவம் பிரசன்னம் மிகவும் அருமையுடையதென்றும், அதனான் வரும் பயன் மோக்ஷமென்றும், அதனை அனுசரிப்போர் மிகவுமுயர்ந்த தத்துவஞானிகளென்றும் கூறியது. (கரு)

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கி மேலும் வாமி கூறுகின்றான்.

நீர் இங்ஙனம் தத்துவஞானிகள் கொலை செய்தலும் புலா லுண்டலுஞ் செய்யாரென்பது கூடாது. அதேனெனில், உலகத்

1. ஆக்கம் கடை - செல்வம் இழிவு. 2. வேட்டலின் - வேள்வி செய்தலினும். 3. உயிர் செகுத்து-உயிரைப்போக்கி. 4. தூர்த்தேவதா- சிறுதேவதை. பிரசன்னம் - வெளியாதல்.

தின்கணுண்டாகிய ஞானநூல்களெல்லாம் ஞானிசரித்திரம் அக்கினிக்கொப்பென்று கூறுதலான். அக்கினியின்கண் யாதொரு மலாதிகள் சார்ந்ததாயினுஞ் சுட்டு நீறுக்குதல்போல, ஞானியானவனும் யாதொரு புசிப்பு வந்தடைந்த காலையினும் நன்று தீதென்று பாராமற்கொண்டு ஞானக்கினியாற் றகனம் பண்ணிப் போடுவன். ஆதலின், ஞானமில்லாதவரே புலாலுணவு விட வேண்டும் ஞானிக்கு அஃதில்லையென்றாயாகில்; அவ்வுரை பழு தென்று மேலுத்தரங் கூறுகின்றார்.

அன்றழற்கொப் பறிஞரெதி ரருவினையைச் சுடுதலினு லன்றியாதுந், தின்றன்மரு ளருளினர்வீட் டமுதுளநீ ராடியுண்போர் திகழ்தீத் தானுய்க், கன்றியெரிக் குதல் விலக்க விலவூனிற் சிலவிலக்கிக் கசிந்து நீயே, ரொன் றருந்த லெனையொருவன் றாவுணினுன் கொலைதடுத்தாண் டுரைத்திடாயால். (16)

அன்று அழற்கு ஒப்பு அறிஞர் எதிர் அருவினையைச் சுடுதலினுல். எ - து அக்கினிக்குச் சமானம் ஞானியென்பதொக்கும். அது கொண்டு நீ கூறியது அருத்தமன்று. மற்றெங்ஙனமெனின், ஞானியானவன் 1 சஞ்சிதகர்மத்தைக் குருகடாக்ஷத்தாற் போக்கிப் பிராரத்தகன்மத்தை எடுத்த உடலின் கண்ணே அனுபவித்துத் தொலைத்து மேலுமொரு சனனத்துக்கு ஏதுவாகவரும் ஆகாமியகர்மத்தைத் 4 தத்போதமிறந்த விடத்து உண்டாகிய ஞானக்கினியாற் சுடுதலின்; அக்கினிக்கொப்பென்பர்.

இதற்குப் பிரமாணம்: சிவப்பிரகாசம். *" எல்லையிற் பிறவி நல்கு மிருவினை யெரிசேர் வித்தி—னெல்லையி னகலு மேன்ற வுடற்பழ வினைக ளூட்டுந்—தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைகளுண்டே—லல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

அன்றியாதும் தின்றல் மருள். எ - து. அல்லது யாதொரு பதார்த்தமுந் தள்ளாது புசிப்பான் ஞானியென்னுமிடத்து, ஒரு

1. சஞ்சித கருமம் - வெகுபிறப்புகளிற் சம்பாதித்த வினை. பிராரத்தகன்மம் - இப்பிறப்பில் அநுபவிக்குமாறு பரமேசனுல் ஏற்படுத்தப் பெற்ற வினை. ஆகாமிய கருமம் - பிராரத்த வினைப்போகமுண்ணும் போது செய்யும் வினை. 4. தத்போதம் இறந்த இடம் - யான் சிவமாக இருக்கின்றேன் என்னும் துரியமுங் கடந்த துரியாதீதம்.

வர் மலாதிகளையிடினும் தள்ளாது புசித்தல் வேண்டும். அப்படிப் புசித்ததனுற் குற்றம் யாதெனின், அங்ஙனஞ் செய்தல் மிகுதியு மறியாமையினைத் தருவதாகிய பைத்தியமென்னப் படுமாதலின் அறிவுடையோர்க்கு அறியாமை கூறுதல் மிகவும் பழுது. ஞானி யானவன் யாரெனின்,—அருளினர் உள நீர் ஆடி வீட்டு அமுது உண்போர். எ - து. ஞானிகளெனப்படுவோர் அந்தக் கரணம் புறக்கரணமடக்குதல் ஒருவழிப்படுதல் பொறை திடம் ஞானமடை தல் சத்தியங் கூறுதல் இன்சொற் கூறுதல் தானஞ் செய்தல் உயிர்கட் கிதஞ்செய்தல் ஆதியான மானத தீர்த்தமாடி முத்தி யாகிய அமுதினை உண்டிருப்போரெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம். காசிகாண்டம். * "சத்தியந் தானஞ் 1 சமதம மின்சொற் சாற்றுத லொருவழிப் படுதல்—புத்தியே முதல கரணமோர் நான்கு மடக்குதல் புலன்கள் போம்வழியி— னுய்த்திடா தமைத்தல் பொறைதிட ஞான முயிர்க்கெலாந் தண் 2 ணளி புரித—லித்திற மனைத்து மானத தீர்த்த மெனவெடுத் தியம்பினர் மேலோர்." அன்றியும், * "உரைப்பரு மானத தீர்த்த மோதிடிற்—சுருக்கமின் ஞானநீர் தோய்தன் மற்றது— விருப்பொடு வெறுப்பென விளம்பப் பட்டதோர்—கருப்புகுத் திடுமலங் கழுவு மென்பவே." என்றும், மெய்மொழிச் சரிதை. * "சத்திய முரைக்க நாளுஞ் சகலபல் லுயிர்கட்கெல்லா—நித்தலு மிதமே செய்ய நினைப்பது சிவத்தை யென்று—மத்தன்வேதாக மத்தி னருளிய பொருளிம் மூன்று—மெத்திறச் சமயத்தோர்க்கு மெம்மதங் களுக்கு மிட்டம்." என்றும், *"உடுப்பது 3 சீலமுணவு 4 வீட்டமுத முவப்பது 5 ஞானமா மடந்தை—கொடுப்பது 6 மருளைக் கொள்வது 7 மறத்தை யிருப்பது 8 மருந்தவக் குகையாம்— விடுப்பது 9 குற்றந் தொடுப்பது 10 சாந்தம் வெல்வதுந் 11 தம்மை மெய்க் குரவ—12 னடித்தல மலரே முடிப்பது, பிறப்பை யறுப் பவர்க் கருந்தொழி லிவையே," என்றும், மற்றும் வருவன வற்றுற் காண்க,

---

1. சமம் தமம் - அகக்கரண தண்டம், புறக்கரண தண்டம். 2, அளிபுரிதல் - தயைசெய்தல். 3. சீலம் - ஒழுக்கம். 4. வீட்டமுதம் - பிரஹ்மானந்தம். 5. ஞானமாமடந்தை - மாகதிமையுற்ற ஞானப்பெண் 6, அருள் - தயை, 7, அறம் - புண்ணியம், 8, அருந்தவக்குகை - அரிய தவத்தினுக்கு இடையூறுருதமலை முழைஞ்சு, 9, குற்றம் - தீய செய்கை, 10, சாந்தம் - மமதையகந்தை யற்றிருக்கல், 11, தம்மை: அகங்காராதி துர்க்குணங்களை, 12, குரவனடித்தலமலர் - ஆசிரியரது சீர்பாத தாமரை.

இத்தன்மையுடையோர் ஞானிகளென்றமையான் இதற்கு விரோதமாகிய கொலை புலாலுணவு முதலாகிய துர்க்கருமங்களை ஆசைமிகுதியாற்கொண்டு அந்நெறியே செந்நெறியென்று நாட்டுவோர் அஞ்ஞானிகளென்பது மாயிற்று, இதற்குப் பிரமாணம்: சிவதருமோத்தரம், * "பண்ணுன் பரமசிவஞானி பாவ விதமும் பயிற்றிடினு—முண்ணுன் பலமு மெனப் பனுவலுரைக்கு மதனு லொருதலையே — நண்ணேந் துயரமெனப் பெரியோர் நவையு மியற்றி னசையாலே—மண்ணே ரவல மாசுரையை மாற்றி யிடவே வல்லாரார்," என்றும், சிவஞானதீபம், * "நிலையுறுதி யாசார மொழுக்கஞ் சீலநிறையறிவு கருணைதவ நெறிநில்லாமல்—கொலை களவு கட்காம முதலாவுள்ள கொடும்பவமே தவமாகக் கொள்ளுந் தீயோ — ருலகிலருஞ் சிவனருணு லோதலாகா தோதினுமங் கவருரைகொள் ளொணுது நீலம்—புலையர் மரு விடுந்தெருவிற் பொல்லாக் கும்பி பொருந்தியிடுங் குழியத னுட் பூத்ததாமே." என்றும், * "ஞானவாரமுதச் சுவையினைச் செவியா னலம்பெறக் கேட்டவப் பொழுதே—யானகாரியமு மாகு காரியமு மாயலாக் கடவகா ரியமுங்—கானனீராயே கழிதரு மென்ருற் களிதர வமுதமே யுண்ட—ஞானிதானழியும் விடயமே விடுமோ நண்ணிடின் ஞானியன் றவனே." என்றும், அருட் பிரகாசம். * "வேதத்தி லாகமத் திற்புக றூய விதிதவருர்—கோதுற் றிடினுந் தமதற் றிருப்பர்கள் கொள்கையன்றித்—தீதைத் தினமுனைப் போலும் புரிந்தது செந்நெறியா—வாதிப்பரோ கெடுவாய் சிவஞானங்கை வந்தவரே." என்றும், * "நிலையாம் புலைமைகொள் 1 வள்ளுவர் மூலர் நிகழ்த்து சைவத்—தலையாய மூவர் திருவாதவூரர் தருதமிழு—ளிலையாக மாதியுங் கூரு வுனக்கிவ் விருநிலமேற்—கொலையாதி ஞானி பணலாமென் ருரெவர் கூறு கவே." என்றும், மற்றும் வருவன வற்ருற் காண்க.

இதுவன்றி நீ அக்கினிக்கொப்பென்ற சொற்கு இன்னமொரு தோஷமுண்டு, கூறுதும்—திகழ் தீத்தானுய்க்கன்றி எரிக்குதல் விலக்கல் இல ஊனிற் சிலவிலக்கிக் கசிந்து நீ ஓரொன்று அருந்தல் எனை. எ-து. பிரகாசமயமாகிய அக்கினியானது ஓரொரு முன்னிலையாக ஒன்றினைச் சுடுவதன்றித் தனது சுதந்தரத்தாற் பற்றி ஒன்றினையுஞ் சுடாது. 2 பரேச்சையாற் சுடும்பொழுதும் ஓரொரு பதார்த்தங்களை இச்சித்துச் சுட்டும் வெறுத்துத் தள்ளியும் விடாது. அந்நெருப்பினை நீ புலாலுண்டலினுல் உனக்கொப்புக்

1. வள்ளுவர் மூலர்-திருவள்ளுவர் திருமூலர். 2. பரஇச்சை-அயல் விறகாதிகளின் பற்று.

கூறினையாயில், பன்றி மாமிசம்போல நாய் கழுதை முதலியவற்றின் மாமிசத்தையும், உடும்பு மாமிசம்போல ஓணான் மாமிசத்தையும், சமமாகக்கண்டு புசித்தல்வேண்டும். அதுவன்றி, அன்னபானாதிகளில் ஈ எறும்பு பாச்சை கரப்பான் முதலியவற்றின் ஒன்று வீழ்ந்திருப்பக்காணினும், மிகவும் [1] அரோசக முடையனாய் உண்ட சோற்றையுங் [2] கான்றிடக்கண்டேம். அதனாலும், ஓரொரு மாமிசத்தை இச்சித்துப் புசித்தலினாலும், அக்கினிக் கொப்பென்றல் கூடாது.

சில பதார்த்தத்தில் அரோசகமடைவனென்பதற்குப் பிரமாணம். * "உண்டிடுஞ் சோற்றி னூடே யோர்மயி ரெறும்பீயாதுங்—கண்டுமுன் பருந்தி லாய்முன் [3] பயின்றதுங் கான்றிட்டாயான்—மண்டனிற் பன்றியாதி மலத்தைமுன் பழக்கத்தாலுட்—கொண்டிட விரும்புமாறென் கூறுதி யறிவிலாதோய்." அன்றியும், * "ஊறுகா யாதி தன்னி னுதித்ததோர் புழுக்கண்டாயேல்—வேறவே வீசிச் சிந்தை மெய்மிகக் குலைந்தற் றுயா—னாறுமூன் புழுத்த தேனு நனிமிக விரும்பி யுள்ளந்—தேறிநீ யுண்ட வாறென் செப்புதி தெளிவி லாதோய்." அன்றியும், * [4] "தகருனதெதிரே சிந்தத் தான்றெறித் திட்டகோழை—புகலுமுன் மீதிற்றாக்கப் பொறாதுளங் குலைந்தற்றுயாற்—பகர்தருமவற்றினூனைப் பற்றிய மூளையோடு—மகமகிழ்ந் தயின்ற வாறென்னறைகுதி யறிவி லாதோய்" என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

[8] பிழையுறுதல் சிறிது என்பதுதொட்டு நீயோரொன்றருந்தலென்னையென்பது [5] காறும் சத்திபூசைக்கு மாமிசம் நிவேதிக்கலாமென்ற வாமியைமறுத்து; சத்தியாதி தேவதைகளுக்கு மாமிச நிவேதனம் யோக்கியமன்றென்றும், வேள்விசெய்தல் வேதவிதியென்றும், வேதாகமம் ஈசுரவாக்கியமென்றும், பரம முத்தியால் இன்பமுண்டென்றும். அட்டகன்மத்தாற் றுன்பமுண்டென்றும், தன்னுயிர்போல மன்னுயிர்க்கு இரங்கு மருளுடையோரே ஞானிகளென்றும், சாதித்தது.

இப்படி வாமியை மறுத்த [6] வேலையில், [7] அவணிருந்த பௌத்தன் சைவசித்தாந்தியை நோக்கிக் கூறுகின்றான்.

---

1. அரோசகம்-அருவருப்பு. 2. கான்றிட -வாந்தியெடுக்க. 3 அயின்றதும்—புசித்ததும். 4. தகர்-ஆடு. 5. காறும் - வரை. 6. வேலையில்-வேளையில். 7. அவண் - அவ்விடத்தில். 8. 7-வது செய்யுள் தொட்டு.

இங்ஙனம் வாமியை நீர் மறுத்தது உபயமத சித்தாந்தமே. அஃதெங்ஙனமெனின், வாமியானவன் புலாலிச்சையினால் ஒன்றைக்கொன்றருந்துதலின், அவனது சரித்திரத்தாற் புண்ணியமேயில்லை. ஒரு ஞானியானவன் தானாக ஒன்றையுங் கொன்றருந்தவொண்ணாது. வேறொருவன் ஒன்றினைக்கொன்று அதினூனையூட்டினானாகில், வாங்கிப்புசிக்கலாம். அஃதெப்படியெனில், ஒருவன் தண்ணீர்ப்பந்தல் வைத்தால் அந்தப்புண்ணியம் தண்ணீர்ப்பந்தல் வைத்தவனை யடைதலுந் தண்ணீர் குடித்தவனுக்குத் தாகம் நீங்குதலுமன்றிப் புண்ணியம் இவனுக்கில்லாதது போல; ஒரு சீவனைக்கொன்றவனுக்குத் தோஷமன்றித் தின்றவனுக்குத் தோஷமில்லையென்று கூறுதலும், அவனை மறுத்து மேலுத்தரங் கூறுகின்றார்.

மேல்விடை. ஒருவன் ஊன் தர உணின் கொலை தடுத்து ஆண்டு உரைத்திடாயால். எ - து. ஒருவனொரு சீவனைக்கொன்று அந்த மாமிசத்தை உனக்குப் புசிப்பிக்க நீ புசித்தாயாகில், உன்னையும் அந்தப்பாவம் விடாது. அதேனெனின், நீ மாமிச [1] பக்ஷணியாதலின், உன்னுடைய மனசு சீவகொலையே இச்சித்திருக்கும். அதனால் ஒருவன் கொன்றிடுமிடத்து இது தோஷமென்று விதித்து விலக்கினால் உனக்கு அந்த மாமிசத்தை ஊட்டானென்பது குறித்துத் தோஷமென்று விலக்காயாதலானும், கொலையையிச்சித்த தோஷம் மாமிசபக்ஷண தோஷம் கொலை தடுத்துப் பகர்கிலாததோஷம் இம்மூன்றுதோஷமும் உனக்கு உண்டாமாதலின் எனக்கொள்க. எ - று.

இதற்குப் பிரமாணம்: சிவதருமோத்தரம். * "உண்ணவூனை விரும்பி யுயிர்க்கொலை—யெண்ணு வான்கொலை கண்டிரங் கான் கொலை—பண்ணு வாரைத் தடுத்தும் பகர்கிலா—னண்ணுவானிவரோடெனு நால்வரும்." என்றும், இதிகாசம். * "கொன்றான் கொலச்சொன்னான் கூசவறுத் தானட்டான்—தின்றான் விலக்கிடான் சென்றொன்று—கொன்றவனக்— [2] குட்டவங்க ளிட்டெரிக்க வெந்துகொடு வெந்நரகிற்—பட்டழன்று வீழ்வார் பதைத்து." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இ - து. ஆகாமியத்தைச் சுடுதலினால் ஞானி அக்கினிக்கொப்பென்றும், மாமிச பக்ஷணி இராகத்துவேஷமுடையவனாகையால்

1. பக்ஷணி - தின்பவன். 2. குட்டவன்கண் என்றும் பாடம்.

அக்கினிக்கொப்பல்லவென்றும், ஒருவன் கொன்றிடத் தின்றனெ னினும் பாவமுண்டென்றும், கூறியது. (கக)

இப்படிக்கூறிய சைவசித்தாந்தியை நோக்கி மேலும் பௌத்தரில் ஏகதேசி கூறுகின்றான்.

இங்ஙனம் அந்தப்பௌத்தன் கூறிய உரைபழுது. அஃதே னெனில், ஒருவன் கொன்றிடத்தின்று கொலை தடுத்துப் பகராமையால், யாவனொருவன் சீவகொலை கண்டவிடத்து இதுதோஷமென்று தடுக்கவும், அவன் அது கேளாமல், வந்ததோஷம் எனக்கு வரட்டும் நீருண்ணுமென்று ஊட்டினுற் புசிக்கலாம். நமக்கு அப்பொழுது தோஷமில்லையென்று கூறுதலும்; அதற்கு உத்தரங் கூறுகின்றார்.

உரைத்துமுறு பயங்கொலைசெ யொருவனைச்சார்ந் தவற்குநர குளமண் ணுள்வோ, னிருத்தறையிற் பொருடிருடே லெனக்கவர்வோ னொடுந்தமர்வீ யந் திடலிற் றனுய், மரிந்திடினு மகத்தலதுான் றினலருளன் மையிற்றுயர்பின் மறலி தூத, ரருத்தன்மெயிக் கலியின்மருந் தயிருயுங்கண் டிதியிவற்றா னருந்த றீதே. (17)

உரைத்தும் பயம் உறு கொலை செய் ஒருவனைச் சார்ந்தவற்கு நரகு உள மண்ணுள்வோன் இருத்து அறையில் பொருள் திருடேல் எனக் கவர்வோனொடும் தமர் வீய்ந்திடலில். எ - து. கொலைதீதென்று சொல்லியும் அச்சமடையாது அதனைச் செய்யும் ஒருவனை வேறொருவன் கூடியிருந்து அவனுடைய அன்னபானுதிகளை உட்கொண்டானுகில் உட்கொண்டவனும் அவனடையும் நரகமடைவ்ன். அஃதெங்ஙனமெனின், ஒருவன் இராசாவினது[1] களஞ்சியத்திற் றிருடும்போது அவனது சினேகராயிருந்துள்ளவர்கள் அவனை நோக்கி இராசாவினது களஞ்சியத்திற் றிருடுதல் மகா கெடுதி அது செய்யவொண்ணுதென்ற விடத்து, கேடுவந்தால் நான் அனுபவிக்கிறேன் உங்களுக்கென்ன நீங்கள் என் வீட்டிலிருந்து சுகமாக உண்டு கொண்டிருங்களென்றால், அவன் வார்த்தையை நம்பியிருந்தவர்களும் அவனோடு மரணமடைதல்போலுமெனக் கொள்க.

1. களஞ்சியம் - பொக்கிஷம்.

இப்படிச் சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பௌத்தரிற் பின்னு மொருவன் கூறுகின்றான்.

இங்ஙனம் இவர்கள் கொன்று தின்னலாமென்னுமதுவும் பாவம். ஒருவன் கொன்றிடத் தின்னலாமென்னுமதுவும் பாவம். கொன்றிடுமளவிற் கொலை தடுத்துக்கூறிப் பின்பு தின்னலா மென்னு மதுவும் பாவம். யாவனாயினும் பிறன் கொலையினாலிறந்த சீவனது ஊனைத்தின்பானாகில், "கொன்றவர் பாவந் தின்பார்க்குமுண்டு." என்று கூறிய உலகவழக்கவுண்மையால் இவனுக்குத் தோஷமுண்டென்பது நிச்சயம். இவையன்றி, தன்னியல்பாய் மாய்ந்த சீவன் தான் மண்ணினை மரத்தினை யொக்கும். அவற்றினைப் புசித்தானாகிற் பாவமில்லை.

மேல்விடை. தானாய் மரித்திடினும் மகத்து அலது ஊன் தினல் அருளன்மையில் பின்மறலி தூதர் துயர் அருத்தல் மெய். எ - து. தன்னியல்பாய் மாய்ந்த சீவனதானாயினும் யாகமல்லாவிடத்து ஊனருந்துதலெல்லாம் உயிர்களிடத்து அருளல்லாத படியினாலே, ஊனினையுண்டுவந்தோன் அவற்றினதிச்சையால் மற்றொரு சீவனுக்கு மரணம் வந்த விடத்தும் இரங்காது சந்தோஷத்தையடைவனாதலின், அதுவுங் கொலையே. ஆதலின் எவ்விதத்தாயினும் புலாலுண்போர் நரகத்தின்கண் யமதண்ட மடைதலே சத்தியம்.

இதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். *' படைகொண்டார் நெஞ்சம்போ[1] னன்றூக்கா தொன்ற— னுடல்சுவை யுண்டார் மனம்." அன்றியும், *[2] " பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி—யாங்கில்லை யூன்றின் பவர்க்கு." அன்றியும் *"[3] செயிரிற்றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா—ருயிரிற்றலைப் பிரிந்தவூன்." அன்றியும், * "உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண—[4] வண்ணாத்தல் செய்யா தளறு." என்றும், திருமந்திரம். *" பொல்லாப் புலாலை நுகரும் புலையரை—யெல்லாருங் காண வியமன்றன் றூதுவர்—செல்லாகப் பற்றித் தீவாய் நரகிடை—மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே " என்றும், இதிகாசம். *"இட்டவிரை யர்சையா லெய்தியமீன் றூண்டில்வாய்ப்—பட்டதென நாவிரசம் பார்த்

1. நன்றூக்காது - அருளை நோக்காது. 2. பொருளினாலே பயன் கொள்ளுதல். 3. குற்றத்தின் நீங்கிய அறிவினையுடையார். 4. அவ்வுயிரை விழுங்கிய நரகம் பின் உமிழ்தற்கு வாய்திறவாது.

துலகர்-கெட்ட—விருளா ருலகத்தி லெய்துவர்க ளென்று—ராருளாரு நெஞ்சத் தவர்.'' என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

எவ்விதத்தும் ஊன்றின்றால் நரகமென்பதனுல், பிராண ஆனிவரினும் விஷம் போலக் கண்டு நீங்கவேண்டுமென்ப தாயிற்று. மற்றொருவர் தண்டனையான் வந்து கூடினும், விஷமுண்டவன் மாற்றுவிழ்தந் தேடுதல்போல உடனே பரிகாரஞ் செய்ய வேண்டுமென்பதாயிற்று. இத்தன்மையாதலின், ஊனுண்ணூர்க்கு ஊட்டுதலும் மகாபாவமென்பதாயிற்று. இதற்குப் பிரமாணம்: * '' கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினர்—தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்—பன்றி யாய்ப்படி யிற்பிறந் தேழ்நர—கொன்று வாரா ஞணையி துண்மையே.'' அன்றியும், * ''கொலையஞ் சாதொரு வற்கஞ்சிக் கொன்றுளோர்—சிலர்சொல் லஞ்சிப் புலாலினைத் தின்றுளோர்—நிலைய தாய்நர கத்திடை நிற்பரென்—றலகி னூன்மறை யாகம மோதுமே.'' என்றும், மற்றும் வருவன வற்றாற், காண்க.

இப்படிச் சமயிகளுக்கு உத்தரங்கூறி மறுத்த காலையில், கற்றறி மூடனுகிய ஒரு லௌகிகன் சித்தாந்தியை நோக்கி நீரிங்ஙனங் கூறியவற்றுள் வேள்விமாத்திரம் விதிதமாய்க்காட்டி மற்றெவ் விடத்தும் புலாலுண்டல் பாவமென்று, கூறினீர். அது கூடாது, அவ்வேள்விபோலத் திதிசெய்யுமிடம் மருந்துண்ணுமிடம் பிராண னுய்யுமிடம் இவைகளினும் புலாலுண்ண விதியுண்டென்றுவேதாகமநூலி னிருத்தலின்.

மேல்விடை. இக்கலியின் மருந்து உயிர் உயுங்கண் திதி இவற்று ஊன் அருந்தல் தீதே. எ - து. வேள்விபோலத் திதியாதிகள் சாத்திர விதிதமாயினும்; இக்கலியுகத்தில் மருந்தில் உயிருய்யுமிடத்தில் திதியில் புலாலுண்ணவொண்ணுதென்று புராதன விதிதமாய் நடந்துவருதலின், அவற்றினைச் செய்தலுங் குற்றமென்றறிவாயாக. எ - று.

இதற்குப் பிரமாணம்: அருட்பிரகாசம். * '' மருந்திற் றிதியி னுயிருய்யும் வாயின் மகமதனி—னருந்தற் கியல்ப தெனினுங் 1 கிருதுவி னன்றியுளம்—பொருந்திப் 2 புலாலுண் பரேகலி யூடறம்

1. கிருது - யாகம். 2. உண்பரே - உண்ணுவரோ.

பூண்டிமையோர்—விருந்திற் சிறந்தமு தூட்டப்பொன் னூட்டுற வேண்டினரே.'' என்றும், காசிகாண்டம். * ''அருமகத் தன்றி யூன்சுவைத் துடலம் வீக்குவோ னதற்குடன் படுவோன்—கருவியிற் குறைத்தோன் பகர்ந்துளோன் கொணர்ந்தோன் வியந்துளோன் கடிகென வேவுந்—திருவிலி யதனை யட்டவனிவர்க ளெண்மருந் தீநர கடைவர்—பரிவினூன் விடுத்தோர் நாடொறும் [1] புரவி மகம் புரி பலன்பெறு குவரால்.'' அன்றியும், * ''குழைமுகந் தூங்குஞ் செம்மணிப் பசும்பொற் குண்டல வேதியர் நாளு—மழன்முகத் தாற்று மருமகத் தன்றிச் செந்தசை யருந்துந ரில்லை—விழைவொடும் பயந்தோர்ப் பழிச்சிடா ரில்லை வெங்கவ ருடுந ரில்லை—கழிபெருங் குணத்துக் குரவனைப் பிழைப்போ ரரும்பொருள் கவருந ரில்லை.'' என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இ – து. கொலைஞரைச் சினேகித்தலும் பாவமென்றும், எந்த விதத்தினாலும் மாமிச பக்ஷணம் நரகமே விளைக்கு மென்றும், விதி யுண்டாயினும் கலியுகத்தின்கண் யாகத்தன்றி மற்றோரிடத்தினும் புலாலுண்ணவொண்ணாதென்றும், கூறியது. (௧௭)

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னுங் கற்றறிமூடன் கூறுகின்றான்.

யாகாதி நான்கிடத்தினும் புலாலுண்ணலாமென்று விதியிருக்க, யாகத்துண்ணலாமென்றும் மற்றிடத்தாகாதென்றுங் கலியுகத்தைக்குறித்துப் புராதன விதிதமென்றும் தள்ளுதல் பழுதென்றவனவில்; அவனைநோக்கி மேலுத்தரங் கூறுகின்றார்.

அருந்தனயன் றனைமனைதோள் பிறர்க்கீந்தும் பெறு
வதழ கக்கா லிக்காற். பொருந்துமதோ விக்கலியீ டுணர்ந்
தன்றோ தமதாசாற் பூசித் தன்னோன், றிருந்துமனை
பதங்கையாற் றீண்டாதார்ச் சனைநாளுஞ் செய்தார்மைதீ.
ரிருந்தவரு ணீமலத்தை மலத்துளமென் றுணினூனுக்
கிடுதி யூனே (18)

அக்கால் மனை தோள் பிறர்க்கு ஈந்தும் அருந் தனயன்றனைப் பெறுவது அழகு இக்கால் பொருந்துமதோ. எ - து. கலியுகத்தைக்

---

1 புரவிமகம் - அசுவமேதயாகம்.

குறிக்க வொண்ணாது எந்தக்காலத் தாயினும் விதியிருந்தபடி செய்யலாமென்று நீ சொல்லுவையாகில்; யாவனாயினும் 1 பிதிர் கருமஞ் செய்யும்பொருட்டுப் புத்திரரைப் பெறானாயில் நற்கதியில்லை யாதலில் புத்திரரில்லாத செல்வஞ் செல்வமே யல்லவென்று நூல் களெல்லாங் கூறுதலில், தனக்குப் புத்திரோற்பத்தி யில்லாத விடத்துத் தன்னுடைய ஸ்திரீயைப் பிறருடன் கூட்டியும் புத்திரரைப் பெறலாமென்றும் பொருள்கொடுத்தலினாலும் தத்தங்கவர்தலினாலும் ஒருவர் மகவெனப் புகுதலினாலும் தனயர்சேயிருத்தலினாலும் தன்னால் ஒருவனாவி யுய்தலினாலும் கிடைத்த புத்திரரும் தனக்குப் புத்திரரேயென்றுங் கூறிய எழுவகைப் புத்திரரில் தன்னுடைய ஸ்திரீவயிற்றிற் பிறந்த புத்திரரே விசேஷமாதலில் தன்னுடைய ஸ்திரீயைப் பிறரோடு கூட்டியும் புத்திரரைப் பெற்று வாழுதல் கலியுகமல்லாத யுகங்களுக்கெல்லாம் மிகச் சிறப்பாக வழங்கும். அந்தவிதி உனக்கு இந்தக் கலியுகத்திற் செய்யக்கூடுமோ கூடாது. ஆதலிற் காலத்துக்கேற்ற விதி நடக்கவேண்டுமெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம்: காசிகாண்டம். * "எத்திரு வுடையரேனு மின்கனி மழலைச் செவ்வாய்ப்—புத்திர னிலாதோ ரென்றும் 2 பொறியில ராய வாற்றான்—மெய்த்தவம் புரிந்து மைந்தர்ப் பெறுவதே விழைவர் யாரு—முத்தனன் மகவுமோரேழ் பான்மையா வுரைப்பர் மேலோர்," அன்றியும் * 'மனைவிதன் கொழுநற் கீன்றோன் மற்றவ னருளினாலே—யனையவ ளயலார்க் கீன்றோ னரும்பொருள் கொடுத்துக் கொண்டோ—னினிதுற தத்தமைந்தன் மகவெனப் புகுந்த மைந்தன்— றனயர்சேய் தன்னாலாவி யுய்ந்தவன் றனயராவார்." என்றும், பிரமோத்தர காண்டம். * "காவலன் றனக்குப் பின்னோர் 3 கான்முளை யில்லையென்று—பூவல யத்தி னுள்ளோர் புகல்வதும் பொருந்தார் வீறும்—யாவையு முணர்ந்த நீதி வசிட்டனங் கியல்பி னுய்ந்து—பாவருந் துயரந் தீர்க்கும் படிநினைந் தினைய செய்தான்." அன்றியும், * "அருந்ததி யனைய கற்பின் 4 மதயந்தி யணங்க னுடோன்—பொருந்தியின் கலவி துய்த்தோர் புதல்வனைத் தந்து தீரா—

1. பிதிர்கருமம்-சிராத்தம். 2. பொறி-செல்வம். 3. கான்முளை-மைந்தன். 4. கன்மாடபாதனென்னும் அரசன், தன் மனைவியைத்தொடில் மரணமாகக்கடவன், என்னும் சாபவசத்தால் தவஞ்செய்ய வனம் செல்லவும், குருவாகிய வசிட்டர் இரங்கி இவ்வரசன் மனைவியாகிய மதயந்தி யிடத்து மைந்தனைப் பெற்றருளினர், என்னும் சரித்திரவிரிவை, பிரமோத்தர காண்டம் சிவதான மகிமையில் காண்க.

விருந்துய ருலகந்தீர வியற்றினன் முனிவ னிப்பாற்—பெருந் தகை தவஞ்செய் வானைப் பேய்மக ளொருத்தி பற்றி.'' என்றும் மற்றும் வருவனவற்றாற் காண்க.

பின்னும் கற்றறிமூடனை நோக்கிக் காலகர்மம் நடக்கவேண்டு மென்பதற்கு வலியுறுத்திக் கூறுகின்றார்.

மேல்விடை. இக்கலி ஈடு உணர்ந் தன்றோ தமது ஆசான் பூசித்து அன்னோன் திருந்து மனை பதம் கையால் தீண்டாது அர்ச் சனை நாளுஞ் செய்தார் மைதீர் இரும் தவரும். எ - து. இக் கலியுகத்தினது வலியினை உணர்ந்தன்றோ தம்முடைய ஆசாரியரை விதிமுறையே முன்பு அர்ச்சித்துப் பின் அவரது தேவியை அர்ச் சிக்குமிடத்து அவளது பாத கமலங்களைக் கையினாற் றீண்டாது அணுகிநின்று மலர்தூவி நாடோறும் அர்ச்சிக்கவுஞ் செய்தனர் மயக்கந்தீர்ந்த பெரியோர்களுமெனக் கொள்க. இதற்குப் பிர மாணம்: சைவசமயநெறி. *'' ஆசான் மனையை யடிதீண்டா தர்ச்சிக்க—வாசார் மலரான் மதித்து.'' அன்றியும், *''அந்தயுகந் தோறுமடி தீண்டியருச் சிக்கைதகு—மிந்தக் கலியுகத்தே [1] யாது.'' என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கிக் கல்லாத மூட னாகிய லௌகிக னொருவன் எழுந்துநின்று அங்ஙனமிருந்த சபையையெல்லாம் கையமர்த்தி ஒன்று சொல்லுகின்றான். உன் னுடைய வீண் சாத்திரங்களெல்லாவற்றையும் புறத்திலே போ ட்டுவிடு. நான் ஒரு பேச்சுச் சொல்லுகிறேன் கேள் அதேதெ ன்றால், உடம்பிலேயிருக்கிற மாமிசத்தையெல்லாம் உதிர்த்துப் போட்டு எலும்புமாத்திரமா யிருந்தாலல்லோ மாமிசம் விட்டத ற்கு அடையாளம். நீ ஆயிரந்தான் சொன்னாலும் மாமிசதேகத் திலே இருக்கும் வரையும் மாமிசம் விட்டேனென்கிறதே பொய், மனுஷராய்ப் பிறந்தவர்களெல்லாரும் விழு சுவருக்கு மண்போ டுதல் போல மாமிசதேகத்துக்கு மாமிசமே தின்னவேண்டும் உன் பேச்சை மெய்யென்று கேட்டு மாமிசத்தை விட்டவன் கெட்டுப்போவான் பிழைக்கிறவன் ஒருகாலும் கேட்கவேயொண் ணாது என்றவளவில், அவனை நோக்கிக் கைகொட்டிச் சிரித்து மேலுத்தரங் கூறுகின்றார்.

மேல்விடை. நீ மலத்து உளம் என்று மலத்தை உணின் ஊனுக்கு ஊன் இடுகி. எ-து. நீ சொன்னது நல்லதுதான். மாமிச

---

1. ஏயாது - தகாது.

தேகத்துக்கு மாமிசமே போடவேண்டுமென்ற நீ இது மாத்திரஞ் செய்யாமலிருந்தது குற்றம். அஃதேதென்று கேட்பாயாகில், சொல்லுகிறோம். மலத்தை வயிற்றில் வைத்துக்கொண்டிருக்கிறாயல்லாமல் அத்தைவிட்டு நீங்கியிருந்தவிடந் தானில்லையே, அப்படியிருக்கப் பசிவந்த நேரத்தில் மலத்துக்கு மலமேயிடவேண்டுமென்று பிறருடைய மலத்தைப் பக்ஷணம் பண்ணுமலிருப்பதேன்? அதுவன்றி, மலம் விட்ட நேரங்களிலும் அருவருத்துக் கால்கை சுத்திபண்ணுவதேன்? இப்படிச் செய்யாமலிருக்கிற நீ மாமிசத்துக்கு மாமிசமிடவேண்டுமென்பது கூடாது. எ-து

இதற்குப் பிரமாணம் :- திருவள்ளுவர். * "தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா—னெங்ஙன மாளு மருள்." என்றும், காசிகாண்டம். * "புழுவுந் தசையும் வெண்ணிணமும் பொதிந்த குரம்பை வீக்குதற்குக்—கழியூ னுகர்ந்தோர் கொடுநரகிற் கற்பகாலங் கிடந்தழுந்தி—விழைவின் முன்னர்த் தாநுகர்ந்த விலங்குமவர்தம் மெய்த்தசையை—யழிவெம் பசியாற் பறித்தருந்து மென்னும் பான்மை யறிந்தேயோ." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இங்ஙனம் லௌகிகருக் கெல்லாம் தூலவுத்தியாகச் சொல்லி மறுக்கவேண்டியது அவரது அடங்காமையைக் குறித்தென்க. சித்தாந்தியார் கைகொட்டிச் சிரித்தாரென்று உரையில் வருவித்தது அங்ஙனங் கூறும் லௌகிகரது தூலவுத்தியைக் குறித்து எடுத்துக் கூறியதெனக் கொள்க. இங்ஙனம் உரைமிகவுந் தூலவார்த்தைகளாக விரிக்கவேண்டியது அவரதிருதய நுட்பங் காட்டற்கென்க

இ — து. முற்காலவிதி இக்காலத்திற் செல்லாமையால் காலத்திற்பொருந்திய விதிநடக்கவேண்டுமென்றும், மலத்துக்கு மலமிடலாமாகில் மாமிசத்துக்கு மாமிசமிடலாமென்றும், கூறியது. (கஅ)

இப்படிச் சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னுமொரு லௌகிகன் கூறுகின்றான்.

இங்ஙனம் இவன் மனுஷராய்ப் பிறந்தவர்களெல்லாரும் மாமிசத்துக்கு மாமிசமே யிடவேண்டுமென்று அறியாமற் சொன்னான். அப்படிச்சொல்லிற் பாவமல்லவோ? ஒரு நல்லவன் பொல்லாதவன் ஒரு பார்ப்பான் பட்டன் முதலான நாலு சாதிகட்கும் ஒன்றாகச் சொல்லலாமோ? மாமிசந் தின்னுகிற சாதி தின்னவே வேண்டும்

தின்னாத சாதி ஒருகாலுந் தின்னவே யொண்ணாது. தின்னுகிற சாதி விட்டாலும் பாவம். தின்னாதசாதி தின்றாலும்பாவம் என்று சொல்ல; அவனை நோக்கிச் சைவசித்தாந்தியார் சிரித்து மேலுத் தரங் கூறுகின்றார்.

ஊனுணுஞ்சா திகண்மிருகா திகளறம்பூண் டவையுளு
முன் பொழுகிற் றனீ, தாளெனவூன் றினல்பழுதோ
ரிழிவுபிதாப் புரியின்மைந்தர் தாமுஞ் செய்யார், மானி
லத்திற் பாலர்பித்தர் தெளிந்துமிழுக் கியற்றினுண்டோர்
மறுக்கொ ணாதா, னுன்மவிச்சை கருதிமுறை யல்லாரைத்
தோய்ந்துறினா னருந்தல் செய்யே. (19)

ஊன் உணும் சாதிகள் மிருகாதிகள் அவை உளும் முன்பு அறம் பூண்டு ஒழுகிற்றால் நீதான் என ஊன் தினல் பழுது. எ - து. நீ சொன்னது சத்தியம். தின்னுஞ்சாதி தின்னாவிடினும், தின்னாதசாதி ஒருகாலுந் தின்னவே யொண்ணாது. தின்னுஞ்சாதி எது தின்னாச்சாதி எது என்று கேட்பாயாகில், பூதம் பிசாசு நாய் நரி கோட்டான் கழுகு பருந்து காகம் ஈ எறும்பு முதலியவைகள் யாதொரு பிணங்கிடக்கக் கண்டவிடத்தில் அதினுடைய அசுத்தத்தையும் துர்க்கந்தத்தையும் பார்த்தும் சற்றும் அருவருப்பின்றிச் சூழ்ந்துகொண்டு பிடுங்கித் தின்னுதலினாலும், இது நல்லது இது தீயதென்றும் இது புண்ணியம் இது பாவமென்றும் பகுத்துங் கேட்டும் அறிதற்கு ஒரு விவேகமில்லாதபடியினாலேயும், அவைகளே தின்னுஞ்சாதி. வேதாகமங்களைக் கேட்டுப் பாவமிது புண்ணியமிது வென்றறிந்து புண்ணியத்துக்கு உள்ளும் பாவத்துக்குப் புறம்புமாக நடந்து போக மோக்ஷங்களை அடைய வேண்டினவனாதலால், மனுஷனே தின்னாதசாதி. தின்னுஞ்சாதியாகிய மிருகாதிகளுள்ளும் பசுவினது உபதேசத்தால் முன்பு ஒரு [1] புலி கொல்லாவிரதியாய்ப் பூர்வசனனமும் உணர்ந்து யோகத்தால் நற்கதி யடைந்ததென்றும், முன்பு ஒருநாரை கொல்லா விரதியாய் ஞானமுமுடைத்தாய் மதுரையை யடைந்து சிவசாரூபம் பெற்றதென்றும், மற்றுமொரு [2] கபோதம் தனது [3] பேட்டினைக் கவர்ந்த வேடனது பசி

---

1. வாயெதிர்போய்ச் சேதா வலியப் புசியென்னத், தீயபுலி யூனுண்ட தீதென்னத், தூய, விரதத்தைக் கண்டு விடையோன்வந் தானவ் விரதத்தைச் செய்ய விரும்பு, 2. கபோதம் - புறா. 3. பேடு - பெண் புட்சி.

நீக்கி உயிர் புரப்பான் பொருட்டு நெருப்பில் வீழ்ந்திறந்து பரலோக மடைந்த தென்றும், அகஸ்தியாராதி ரிஷிகளாசிரமங்கடோறும் இருந்த மிருகபக்ஷிகளெல்லாம் ஞானநெறிபூண்டு அருளொடு விளங்கினவென்றும், வேதாகம புராணாதிகளிற் கூறுதல் கேட்டிருந்தும்; தின்னுதசாதியாகிய நீ தின்னுஞ்சாதி யென்று கொண்டு பாவங்களுக்கெல்லாந் தலைமையாகிய கொலையை மேற்கொண்டு ஒழுகிப் புலாலினையருந்தி நரகிடைவீழ்தற்கு எண்ணுதல் மிகவுங் குற்றமென்றறிவாயாக.

மிருகாதிகள் தின்னுஞ் சாதியென்பதற்குப் பிரமாணம்: சிவதருமோத்தரம். * "நாயினுக்கும் பேயினுக்கு நரியினுக்குங் கழுகினுக்கு—மீயினுக்கு மினிதுபிண மெனிலதுதா னினியதுவோ—வாயினுக்கு மனத்தினுக்கு மதிப்பரிய மாதேவன்—1 றேயினுக்கே சிவமதனைத் தினைப்பாரே சிறந்தாரே" என்றும், புலான்மறுத்தல். * "நாய்கழுகு கூகை நரிகாக மீயெறும்பு—பேயிவைகளாவி பிரிந்தவூ—னேயமொடு—தானருந்த வல்லாது சற்காரியமனிதர்—தானருந்த லாவதோ தான்." என்றும், * "தவகதியை வேண்டுபவ ருயிரில்சடந் தினறவிர்க தவமழித்தாங்—கவகதியை வேண்டுபவர் கழுகுநரி செயுந்தொழிலை யயரா நாட—சிவகதியுந் திருமாறன் றிகழ்கதியு மயன்கதியுந் தெய்வலோகத்—துவகதியு மிகத்தெரியுந் துர்க்கதியின் வீழ்வர்பரஞ் சோதி யாணை." என்றும், புலான்மறுத்தல். * "பிணங்கிடக்க நானுகரே னென்றுநீ பேசுங்—குணங்கிடக்க வேண்டியதென் கூறாய் – பிணத்தைக்—கலத்திலே யிட்டுக் கலந்துநா வாரப்—புலத்திறைற் றின்றாய் புகல்." என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

மிருகாதிகளினும் ஓரொன்று கொல்லாவிரதத்தால் நற்கதியையடைந்தது என்பதற்குப் பிரமாணம்: திருவிளையாடல். 2* "பிரிவறக் கொன்று தின்னுங் கடைப்படும் பிறப்பு நாரை—வானுறு தேவராகி வான்றொழ விருப்பக் கண்டீர்—கருதுதி றென்றும் பொல்லாக் கடையரா யினுங்கொல் லாம—லரனைவந் திப்ப ரேல்வானுள் வதற் கைய மின்றே." என்றும், காசிகாண்டம். * "கொன்று விலங்கின் றசைநுகருங் கொடுமை யோரவ் விலங்கினுட—றுன்று மயிரெத் துணையாமத் துணைய காலம் வெந்நரகி—னுன்றி நுகர் வாய் புழுவொழுக 3 வுழப்ப ரென்கை யுணர்ந்தேயோ—கன்று சினவெங் கொடுவிலங்கும் புலவூன் றின்னக் கருதாவால்." அன்றியும்,

---

1. தே - அருள். 2. பழைய திருவிளையாடல். 3. உழப்பர் — துயருறுவர்.

* "ஒருமீன் புலவு வாய்மடுப்பி னொழியுந் தசைக ளனைத்தினையும் —பரிவா னுகர்ந்தோர் வீழ்கின்ற பாழ்வெந் நரகிற் படிவரொனு— மருமாமறையின் பொருடேர்ந்தோ வந்தா மரைநாண் மலர் 1பொ துளும்—விரிநீர் வாவி பயின்மீன்கள் விழுங்கா துலவும் புள்ளி னமே." என்றும், இதிகாசம். * "புள்ளுக் குளகுணமு மில்லாத புல்லறி வாங்—கள்ளக் கருமனத்தே காலன்கைக் - கொள்ளப்போ யப்—புக்காழ் நரகத் துழையாது போனன்மற்—றெக்காலத் தெந்நா ளினி." என்றும், அருட்பிரகாசம். * "புலிநாரை யெண்புற வாதி கண் முன்னம் புலாலருந்துங்—குலனு யிருந்து மருளோம்பி முத்தி குறுகியதென்—றுலகூ டுரைப்பச்சொற் கேட்டு மருளற் றுழன்றி றக்குஞ்—சிலர்மா னுடத்தென்ன செய்வான் புவியிற் செனித்த துவே." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

இப்படிக்கூறிய சித்தாந்தியை நோக்கிப் பின்னு மொரு லௌகிகன் கூறுகின்றான்.

இங்ஙனம் இவன் தின்னுதசாதியென்றும் தின்னுஞ்சாதி யென்றும் அறியாமற்சொன்னன். யாவனொருவனுக்குஞ் சாதி யைக்கொண்டு காரியமென்ன? இந்தப்புத்தி முன்னிருந்தவர்கள் அறியாமல் நடந்தார்களோ? அவர்களைப் பார்க்கிலும் நாம் என்ன ஆகாசத்திலே பறக்கிறோமோ? பிதாவும் மாதாவும் எந்தப் பிரகா ரம் நடந்தார்களோ அந்தப்பிரகாரம் நடக்கிறதே காரியம் என்ற வளவில்; அவனைநோக்கிச் சிறிது உத்தரம் மேற் கூறுகின்றார்,

மேல்விடை. பிதா ஓர் இழிவு புரியில் மைந்தர் தாமும் செய்யார். எ-து. பிதா நடந்தமுறையே நடக்கவேண்டுமென் பது கூடாது. அதேதெனெனில், தம்முடைய பிதாவாயினும் பிற ராயினும் வேதாகமங்களை ஓதியுணர்ந்து தருமத்துக்கு உள்ளும் பாவத்துக்குப் புறம்புமாகத் தானும் நடந்து பிறரையும் நடப்பிப் பான் யாவன் அவனையே அறிவுடையோர் பிதாவென்று அங் கீகரித்து அவன் நடந்தமுறையே நடவா நிற்பர்கள். அதுவன்றி, தன்னுடைய பிதா மாதா பாவியாலும் அவர் நடந்த முறையே நடப்பது உசிதமன்று. நீ உசிதமேயென்னில் அவனுடைய பிதாவானவன் முன்னே கன்மவசத்தாற் பிறர் கேட்கில் மிகவும் நகைத்து நாணத்தருவதாகிய இழிவினைச் செய்திருப்பானாகில், அதுவே ஒழுங்கென்று அவனுடைய பிள்ளைகளும் அப்படியே செய்யக்காணேம். ஆதலின் வேதாகமங்களை ஆராய்ந்த நாதாக்க ளது புத்தியின் வழியே நடப்பதே விவேகம்.

1. பொதுளும் - நெருக்கும்.

இதற்குப்பிரமாணம்: * "தந்தைநடந் தாளமுறையே நடப்ப தொழுங் கெனிறொருவன் றரணி மீதே—நிந்தைதரு புருடசும்ப ஞதிசெய்தா னெனிலதுவே நெறியென் றன்றோன்—மைந்தர் பினும் புரிவதிலை யெவரேனுந் தருமநெறி வழுவி லோரே—யந் தமிகு தாதைகண்மற் றவர்நடந்த நெறிநடப்ப தறிவா மன்றே" என்றும், மற்றும், வருவனவற்றாற்காண்க.

இப்படிச்சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னு மொரு லௌகிகன் கூறுகின்றான்.

இங்ஙனம் இவன் பிதா நடந்தபடியே நடக்கவேண்டுமென் றறியாமற் சொன்னான். பிதா பிச்சையெடுத்தானென்று மக னும் பிச்சையெடுக்கவேண்டுமோ? அது வேண்டியதில்லை. எவ னானும் [1] பிறவியன்பாய் மாமிசம் விட்டவனே விட்டவன். சில காலந் தின்றுகொண்டு திரிந்து நடுவிலே எனக்கு ஞானம் வந்த தென்று விட்டுவிட்டானாகில், ஒரு பலனுமில்லை. அப்படி விடு கிற பொழுது முன்னந்தின்ற வாயையும் கையையுங் கூடவிட்டு விடவல்லவோ வேண்டும் அல்லாத பொழுது விட்டதிற் கூட்டே யல்ல. ஆனபடியினாலே, தின்றவன் தின்றே வரவேண்டும். நடு விலே விடவொண்ணாதென்றவளவில், அவனைநோக்கிச் சிரித்து மேலுத்தரங் கூறுகின்றார்.

மாநிலத்தில் பாலர் பித்தர் தெளிந்தும் இழுக்கு இயற்றின் ஊன் உண்டோர் மறுக்கொணாது. எ-து. நீ சொன்னது நல்லது தான், இப்பூமியினிடத்து ஒருவனை நீ குழந்தையா யிருக்கிற காலத்தில் மலத்தைத் தின்றாயென்று அவன். பெரியவனாயிருக் கிறகாலத்தில் முன் கண்டிருந்தவர்கள் சொல்லக் கேட்டானா கில் அறியாதகாலத்திற் செய்ததை இப்பொழுது நீ சொல்லலா வதேதென்று கோபிப்பானன்றி முன்பு தின்ற வாயுங் கையுமி ருக்க இனி விட்டதனாற் பிரயோசனமில்லையென்று பின்புந் தின்னக்கண்டிலேம். அதுவன்றியும், ஒருவனைப் பைத்தியந் தொடுத்திருந்த காலத்தில் மலாதிகளையுந் தின்று தின்னாத வீடு களினும் வாங்கித் தின்றுகொண்டு திரிந்தானேயானாலும், பைத் தியந் தெளிந்தகாலையில் தின்னாத வீட்டினும் வாங்கித் தின்று மலாதிகளையுந் தின்னக்காணேம். அதுவன்றியும், உலகத்தின் கண் உண்டாகிய பெண்ணும் ஆணும் சிறுபிள்ளையாயிருக்கிற

1. பிறவியன்பாய்-(இது உலகச்சொல்) பிறந்ததிருந்தே.

காலத்தில் 1சீரை உடுக்காமல் அபிமானம் பலருங்காணத் திரிந் தார்களாயினும் பெரியவர்களான காலத்தினும் சிறுபோதிற் பல ருங்கண்ட அபிமானத்தை இனி ஏன் மறைக்கிறோமென்று பின் பும் சீரை உடுக்காமலிருக்கக் காணோம் இது பித்தனுக்கு மொக் குமாதலின், மாமிசந் தின்றவன் தின்றேவரவேண்டு மென்கிறது யோக்கியமன்று. விவேகம் வந்தபோது விடுகிறதே யோக்கியம்.

இதற்குப்பிரமாணம்: திருவிளையாடல். * "முன்னவே தனை யை விட்டு முற்றிய வறிஞர் நெஞ்சிற்—பின்னொரு விகாரமின்றி யிருப்பரிப் பிணைப்புலாலை—நன்னெறி யறிந்த நாமு நாவழி யொழு கிக் கெட்டேந்—தின்னவே நயந்தோ நம்போற்றீங்குளா ருண்டோ வின்றே." என்றும், புலான்மறுத்தல். * " அருந்திச்சின் னொரு னதன்மேல் விடுக்கின்—வரும்பயனே தென்னின் மழலை - திருந் தறிவிற்—பித்தறிவு பிறங்கியபோ தும்மலத்தைத்—துய்த்திடுவ துண்டாயிற் சொல்." என்றும், * மைந்தர்கண்மா தர்கள்கோச பகமாதி 2மழவுருவின் மறைத்தி லேமென் — றிந்தவுடை கொடு மறைப்ப தெத்தினுக்கென் றுளிர்பருவத் தெரிக லார்தஞ்—சிந் தையினுண் மிகுத்தணிவ ராதலினு னுணவைமுனந் தின்று யேனு— நிந்தைசெய்திப் பொழுதகற்றத் தகுமிலையேற் கெடுவா யுன் னினைவென்னுமே." என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க.

இப்படிச்சொன்ன சைவசித்தாந்தியை நோக்கிப் பின்னு மொரு வெளதிகன் கூறுகின்றான்.

இங்ஙனம் பிறவியன்பாய் மாமிசம் விட்டவனே விட்டவ னென்றும் நடுவிலே விடுகிறது பாவமென்றும் இவனறியாமற் சொன்னான். மாமிசத்தை எப்போது விட்டாலும் விடலாம். விடுகிறபொழுது ஒருவனுக்கு மாமிசத்தை விட்டுப்பார்க்க, அது ஒத்துக்கொண்டால் மாமிசத்தைத் தின்னுமல் விட்டுவிடவேண் டும். ஒத்துக்கொள்ளாதிருந்தால் விட்டுவிடுகிறது தோஷம். அதெப்படியென்றால், ஆன்மாவிற்கு இச்சையில்லாமற்போனால் ஒத்துக்கொள்ளும் இச்சையுண்டானதேயானால் ஒத்துக்கொள் ளாது. ஒத்துக்கொள்ளாதிருக்க விடுகிறபொழுது ஆன்மவிச் சையை யடக்கவேண்டும். ஆதலால் ஆன்மவிச்சையை அடக்கு தலே மிகுந்தபாவம். ஆன்மவிச்சையை அடக்கவேயொண்ணாது என்றவளவில், அவனைநோக்கிச் சிரித்து மேலுத்தரங் கூறுகின்றார்.

---

1. சீரை-சீலை. 2. மழவுரு - குழந்தைப்பருவம்.

ஆன்மவிச்சை கருதி முறையல்லாரைத் தோய்ந்து உறின் ஊன் அருந்தல் செய்யே. எ - து. நீ சொன்னது சுபாவந்தானே. ஆன்மவிச்சையை யடக்கவொண்ணாதென்கிறபொழுது உலகத்தின்கண்ணே ஆணுக்காயினும் பெண்ணுக்காயினும் காமவிகாரத்தினாலே மாதா பிதா தம்பி தமையன் தங்கை தமக்கை முதலானவர்களில் ஒருவருக்கொருவர்மேல் விச்சையுண்டானதேயானால் ஆன்மவிச்சையை அடக்கவொண்ணாது அடக்கிறதோஷமென்று கூறினால், விஷயானந்தமில்லாதே போகின்றதோ? உண்டாயிருக்கவும் அப்படி வந்த காலத்தில் மிகவும் நடு நடுங்கி நரகத்தில் விழப்போகிறோமென்று பயப்படுகிற படியினாலேயும், பிறர் கேட்டால் நிந்தை வருமென்று அஞ்சுகிறபடியினாலேயும், ஊனுண்டலும் மிகுந்த பாவமாதலின், யாதொன்றும் செய்யுங் காரியமுந் தவிருங்காரியமும் அறிந்து நடக்கவேண்டுமென்றறிவாயாக. எ — று.

இதற்குப்பிரமாணம்: திருவள்ளுவர். * "செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க—செய்யாமை யானுங் கெடும்." என்றும், ஔவையார். * "பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர்." என்றும், * "ஆசுறு மான்ம விச்சை யடக்குத லாகா தென்று—மாசுறு மூனைத் துய்த்து மாதுயர் நரகத் தாழ்வீர்—பேசிய தந்தை தாய்மேற் பெருகிய வாசை கூறிற்—கூசிடா தவர்க டம்மைக் கூடுதல் குணமோ கூறீர்." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இ — து. மாமிசந் தின்னுஞ்சாதி மனுஷரல்லரென்றும், யாவராயினும் நல்லறிவாளர் நடந்தபிரகாரமே நடக்கவேண்டுமென்றும், விவேகம் வந்தபோதே மாமிசபக்ஷணம் விட்டுவிட வேண்டுமென்றும், பிராண ஆனிவரினும் மாமிசபக்ஷணம் பாவமாதலால் அதனைச் செய்யவொண்ணாதென்றும், கூறியது. (கக)

இப்படிச் சைவசித்தாந்தியார் யாதொன்று மாராய்ந்தறிந்து நடக்கவேண்டுமென்ற மாத்திரத்தில், அந்தச்சபையின் கண்ணே இருந்த சகல சமயவாதிகளும் எழுதின சித்திரங்கள் போலவும் காற்றில்லாதவிடத்திலிருக்கிற விளக்குப்போலவும் அசைவறவிருந்தார்கள். அப்போது அந்தச்சபை எப்படியிருந்ததென்னில், அலையொழிந்த சமுத்திரம்போல ஓசையடங்கியிருந்தது. அப்படி ஓசையடங்கி யிருந்ததென்று விரித்தது வாதிகள் வினாவொழிந்து மேல்மாணாக்கன் வினா வருதலினெனக் கொள்க. முன்பு சைவாசாரியரைத் தொழுது அஞ்சலியஸ்தனாய் நின்ற பக்குவியானவன் பின்புந் தண்டம்பண்ணி ஒரு விண்ணப்பஞ்

செய்யா நின்றான். தேவரீர் இங்ஙனந் திருவாய்மலர்ந்தருளிய உபதேசப்படியே அடியேன் இன்றுமுதற் கொலைசெய்தலையும் புலாலுண்ணுதலையும் விட்டுவிடுகிறேன். அடியேன் மனசில் இன்னும் ஒரு சங்கையுண்டு. அஃதென்னெனில், அடியேன் அறிந்த கொலைகளைச் செய்யாவிடினும், ஓடும்போதும் நடக்கும் போதும் என்னையறியாமல் ஒரு சீவகொலை நேரிட்டால், அந்த தோஷத்தை நீக்கிக் கொள்ளுதற்கு உபாயம் யாது என்று கேட்ட வளவில், அவனை நோக்கி மேற் கூறுகின்றார்.

செய்துயிர்கட் கினிமைகொல்லா நோன்பியற்றும்
வேலைகுரு சேவை தன்னுன், வையகத்து டறுமறியாக்
கொலைமையதுான் மக்களொடுன் மனையுண்டாலு, முய்வ
திலை நீயெவணம் வேறிதற்குன் மனைபிறர்த்தோய்ந் துறினக்
காலைக், கையகல விடுவதன்றிக் கொலவுமுளந் துணியுமதி
காரத் தாலே (20)

உயிர்கட்கு இனிமைசெய்து கொல்லா நோன்பு இயற்றும் வேலை குரு சேவை தன்னுன் வையகத்தாடு அறியாக் கொலை மையது அறும். எ - து. 1 தறுகட்டன்மை நீங்கிச் சர்வ சீவன்களி டத்தாங் 2 கனைகண்ணுண்டாகிய கொல்லாவிரதியாய் நடந்து வருங் காலத்து உன்னையறியாமல் வந்த கொலைத்தோஷமானது வேறொருவிதத்தால் நாசத்தையடையும். அஃதெத்தாலென்னில், சற்குருவினது திருப்பாதத்தை நியமமாக வழிபட்டுச் செய்யும் அவனது ஏவலின் வலியாலெனக்கொள்க.

தறுகட்டன்மை நீங்கி யென்பதற்குப் பிரமாணம்: சிவதரு மோத்தரம். * "வருந்து மேபதம் வைப்பின் மரிக்குமே—பொரு ந்து மண்ணிற் புழுக்களு மென்றுளம்—வருந்தி யேபத மெல்லென வைத்திடா—தருந்த வத்தைப் பிரிந்த வரக்கனும்." என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க. கொல்லாவிரதமென்பதற்குப் பிர மாணம்: ஔவையார். * "நோன்பென் பதுவே கொன்றுதின் னுமை." என்றும், மற்றும் வருவனவற்றாற்காண்க.

சற்சீடன் அறியாமற் செய்ததோஷத்தையும் ஆசாரியன் நீக்குவனென்பதற்குப் பிரமாணம்: சிவதருமோத்தரம். * 'விண்

1. தறுகட்டன்மை - குரூரத்தன்மை. 2. கனைகண் - ஆதரவு.

ணு ளார்நரர் மற்றை விலங்குமே—பண்ணும் பாவ பலத்தைக் 1 கொடுப்பவன்—றிண்ண மேயமன் றேசிகன் றீர்த்திடும்—பண்ணிற் பாவ விதஞ்சிவ பத்தரும்." என்றும், மற்றும் வருவனவற்ருற் காண்க.

இப்படித் தேவரீர் கற்பித்த திருவாக்கின்படியே என்னுடைய ஸ்திரீயும் புத்திரரும் இதற்கு ஒவ்வாவிடினும், நான் மாத்திரம் சரீரபரியந்தம் தவருமல் நடந்துவருகிறேனென்று விண்ணப்பஞ் செய்ய, மேலுத்தரங் கூறுகின்ருர்.

ஊன் உன் மனைமக்களொடு உண்டாலும் நீ உய்வது இலை. எ - து. மாமிசத்தை உன்னுடைய ஸ்திரீ புத்திரர் உண்டாலும் அந்தப்பாவத்தால் நீயும் நரகத்தழுந்துதல் சத்தியம்.

மேல்வினு. எனக்கும் என்னுடைய ஸ்திரீ புத்திரருக்கும் ஏக சரீரமாய் ஊணுறக்கம் ஒன்ருயிருக்கின்றனவோ? அவர்கள் வேறு நான்வேறு. அவர்கள் செய்த பாவத்தை நான் அநுபவிக்க வேண்டியதென்?

மேல்விடை. நீ எவணம் இதற்கு வேறு உன்மனை பிறர்த் தோய்ந்து உறின் அக்காலைக் கையகல விடுவதன்றிக் கொலவும் உளம் துணியும் அதிகாரத்தாலே. எ - து. நீ எந்தப் பிரகாரம் 2 இதுகாலத்தளவில் ஸ்திரீ புத்திரர்க்கும் எனக்கும் பேதமென்று சொல்லினை ? அது பழுது. அதேதனென்னில், உலகத்தின்கண்ணே ஒருவன் தன்னுடைய ஸ்திரீ பரபுருஷ சங்கமம் பண்ணக்கண்ட காலையில், அவளைவிட்டுத் துறக்கவேண்டுமென்கிற விதியையும் பாராமல், நான் பிராணனுடனிருக்க இப்படி அழிவு செய்யலாவ தென்ன ? இவளைக் கொன்றுபோடுகிறேனென்று நெஞ்சிற்று ணிதலினுலும், இங்ஙனம் ஸ்திரீ புத்திரர் பிறரிடத்திற் செய்த குற்றகுற்றங்களுக்கும் யானென முன்னிற்கும் அதிகாரத்தன்மை யுடையோனுதலினுலும், உன்னுடைய ஸ்திரீ புத்திரர் செய்த பாவாதிகளுக்கு உண்டான பலம் நீயும் அனுபவிப்பது சித்தமென் றறிவாய்.

---

1. யமன் கொடுப்பவன் திண்ணம் என்றும், சிவபத்தர் பாவ விதம் பண்ணில் தேசிகன் தீர்த்திடும் திண்ணம், என்றும் கூட்டுக
2. இது காலத்தளவில் - இந்த வியவகாரத்திற்கு மட்டும்.

ஸ்திரீ விதி தவறில் அவளை விட்டுத் துறக்கவேண்டுமென்பதற்குப்பிரமாணம் : சிவதருமோத்தரம். * "அறிந்து மனையா[6]ளவலத்தையவளைத் துறவா தணைவானுஞ்—சிறந்த குரவன் மனைவியொடு செறிந்தார்க் [7]கிணையே செப்பியவித்—திறந்தான் மகபாதகமதனிற் சிறுமைத் ததனாற் பாதகமென்—றறைந்தாமிதனுக் கணித்தான வுபபா தகமு மினியறைவாம்." என்றும், காசிகாண்டம். * "பொருவில் கற்பின் [1] வழீஇயபுன் மங்கைய—ருரிய மூன்று மரபினுள் ளோரையும்—வெருவந் தேங்க விழுங்கியுமிழ்கிலா—வெரியுந் தீநர கிற்குடி யேற்றுவார்." அன்றியும், * "நெறியிகழ்ந்துதன் மரபினி [2]னீரல செய்யு—மறுவின் மைந்தரைப் பெறுதலின் மகப்பெறா, [3] தஞருற்—றுறைத னன்றுமற் றொருவனா லுயர்குல முழுதுஞ்—சிறுமை யெய்திலாங் [4]கவற்றுறந் துறுபழி தீர்ப்பார். அன்றியும், *" என்ன நூற்கடல் கடந்துளோ ருரைப்பதையெண்ணி—முன்னர் நின்று பொய் மொழிந்திடு முகிழ்முலைத்துவர்வாய்ப்—பன்னி தன்னொடு [5]மகத்துறந்தந்தணன் பரிந்தோர்—பொன்ன வார்முலைப் பூவையைக் கடிமணம் புரிந்தான்." என்றும், * "தேசிகர்மன் னவர்கொழுநர் சீடரைத்தங் குடிகளைத்தோய் தேவி மாரை—யாசில்விதிப் படிநடக்கிற் காக்கபிழைத்திடில்வெறுத்திட் டகல நீக்க—மாசுடையோ ரெனவறிந்து மவரைவெறுத் திலாதிணங்கி வாழ்விப்பாரேற்—பேசியதீ தொருசிறிதுந் தமக்கிலவா யினுநரகிற் பிழையா தாழ்வார்." என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

ஸ்திரீகள் பிழைசெய்யிற் றுறப்பதல்லது கொல்லவொண்ணாதென்பதற்குப் பிரமாணம் : அருட்பிரகாசம், *" இல்லத் திருக்கு மனைதீ வினைக ளியற்றினறஞ்—சொல்லித் தடுக்க வடங்கா விடிற்பின் றுறந்துதன்னெஞ்—செல்லைக் குரிய நிலைசார்ந் தொழுக விதன்றியன்னார்க்—கொல்லத் துணிபுல்ல ரன்றோ சென்றாழிற் குளிப்பவரே." என்றும், *" விண்டுள தன்மலனயதில் லோர்ந்து விரைந்ததனை—யுண்டிடு வாருள ரோசொலுந் தீமை யுனித்துறந்த—பெண்டிர்மற் றொருடன் கூடியென்பெண்கொலை பின்னரகிற்—கொண்டு சுழற்றுமென் றெண்ணாது

1. வழீஇய - நழுவிய. 2. நீரல - ஏற்காதவை. 3. அஞர் - துயரம். 4. அவன்துறந்து - அவனைவிட்டு. 5. மகத்துறந்து - சூதாடிய தன் மகனைவிட்டு. (இதன் விரிவை, காசிகாண்டம், சிவசன்மாகுபேரனுலகங்கண்ட அத்தியாயத்திற் காண்க.) 6. அவலத்தை - குற்றத்தை 7. மேற்கூறிய பாவியர் யாவரும் குருமனைவியைச் சேர்ந்தார் போன்றவரே யாவர்.

கொல்லுங் கொடியவரே.', என்றும் மற்றும் வருவனவற்றுற் கண்டு கொள்க.

இ-து. அபுத்தி பூருவத்தால் வந்ததோஷங் குருசேவையால் நீங்குமென்றும், யாவனொருவனும் தன்னுடைய ஸ்திரீ புத்திரருக்குத் தான் அதிகாரியாகையால் அவர்களையுந் தருமத்தின் வழியே ஆக்கினைசெய்து நடப்பிக்கவேண்டு மென்றும், கூறியது. (உ௰)

இப்படிக் கூறிய சைவசித்தாந்தியை நோக்கி மேலும் அந்தப்பக்குவியானவன் விண்ணப்பஞ் செய்யா நின்முன்.

இங்ஙனம் தேவரீர் திருவாய் மலர்ந்தருளியபடியே என்னுடைய பாசக்[1] குழாங்களாகிய பலருள் யாரொருவர் என்னினைவின்படி வராவிடினும் எனதாக்கினைக்கு உட்பட்டிருந்துள்ள ஸ்திரீ புத்திரரைத் தண்டித்து மாமிசபக்ஷணத்தை நிறுத்துவிக்கின்றேன். அவர்கள் நில்லாவிடின் அவர்களை விட்டுத் துறந்தாயினும் தருமத்தின் வழியே தவருமல் நிற்கின்றேன் என்றவளவில், சித்தாந்தியார் அவனைநோக்கிப் பின்னுமோருத்தரங் கூறுகின்முர்.

தாலமிசை யுனதுசுற்றத் தவர்கொலைமை செயினுனக்குஞ் சாரு நீவே, பேறுனது குலநெறியை விடிலவரோடுரைபகரா திகழ்ந்தன் னோர்தம், பாலுணவா திகடவிர்வதெனையதுபோன் மறம்புரிவோர் பற்றை நீத்துண், மாலதனற் கொலைமையற வறம்புரிவோர் தொடர்புறினல் வழிசார் வாயால். (21)

தாலமிசை உனது சுற்றத்தவர் கொலைமை செயின் உனக்கும் சாரும். எ - து. பூமியின்கண்ணே நீயும் உன்னுடைய ஸ்திரீ புத்திரரும் கொலைமை சாராவிடினும், உன்னுடைய மாதா பிதா தம்பி தமையன் தங்கை தமக்கை மாமன் மைத்துனன் மற்று முண்டாகிய சுற்றத்தார் கொலைமைசெய்தார்களாயினும், அந்தப் பாவத்தால் நீயும் நரகத்தை அனுபவிக்கவேண்டும்.

---

1. குழாங்கள் - கூட்டங்கள்.

மேல்வினா. ஸ்திரீ புத்திரர்கள் என்னுடைய ஆக்கினைக்கு உட்பட்டவராதலின் அவர்களைத் தண்டித்துத் தருமத்தின் வழி நடப்பியாவிடில் எனக்குத் தோஷமென்பது நிச்சயம். மற்றுமுள்ள வர்கள் என்னுடைய சொற்கு அடங்கினவர்களல்லாமலிருக்க, அவர்கள்செய்த பாவத்தால் எனக்கு நரகம்வரவேண்டியது எப்படி என்ற பக்குவியை நோக்கி மேலருளிச்செய்கின்றார்.

மேல்விடை. நீவேறேல் உனது குலநெறியை விடில் அவ ரோடு உரைபகராது இகழ்ந்து அன்னோர்தம் பால் உணவாதிகள் தவிர்வது எனை? அதுபோல் மறம்புரிவோர் பற்றை நீத்து உன் மாலதனால் கொலைமை அற அறம்புரிவோர்தொடர்பு உறின் நல் வழி சார்வாயால். எ - து. உன்னுடைய சுற்றத்தார் உன்னுடைய சொற்கு அடங்கார்களென்றும் அவர்கள் வேறு நான் வேறென்றுஞ் சொல்லுவையாகில், உன்னுடைய குலாசாரத்தினின்றும் உன்னு டைய சுற்றத்தாரிற் சிலர் தவறி நடந்த காலத்தில் அவர்களுடைய சிநேகத்தையும் பற்றறவிட்டு அவர்களை [1] நீத்து எவ்விடத்தும் பேசுதலொழிந்து அவர்கள் வீட்டில் அன்னபானாதிகளை விஷமெ னக்கண்டு உன்னுடைய ஸ்திரீ புத்திரர்களும் அவர்கள் மனைவழி வாயில்வழி சொப்பனத்தாயினும் போகாதபடி நிறுத்தி மற்றுள்ள சுற்றத்தாரிற் சிலர் அவர்களோடு பேசுகினும் எனக்கு வேண்டாத வர்களோடு பேசலாவதென்னென்று அவர்களுடைய சிநேகத்தை யும் நீ விடுவதென்? இப்படிப் பிரயோசனமற்ற அற்பகாரியத்தள வில் மனம் வைத்து வெறுத்த நீ மேலைக்கு நரகத்தில் வீழ்த்தி மாறாத துயரத்தைத் தருவதாகிய சீவகொலையாதி பாவங்களைப் பண்ணுமவரிடத்திற் சிநேகிப்பதென்? ஆதலின் யாரொருவரா யினுங் கொலையாதிக்கு அஞ்சாத பாவியாயில் தன்னவனென்றும் பிறரென்றும் பாராமல் உடனே விட்டுநீங்கி முத்தியை அடைய வேண்டுமென்னு மனோவிச்சையினாலே கொல்லாமையாகிய பேர றம் புரிவோர்யாவராயினும் அவரோடு மிகுத்த சிநேகம் புரிவாயா கில், நல்ல அறத்தின் வழியை எளிதின் அடைவாய். எ — று.

இதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். * "மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து—மொருவுக வொப்பிலார் நட்பு." என் றும், ஔவையார். * "நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க— நல்லார்சொற் கேட்ப துவுநன்றே – நல்லார்—குணங்க ளுரைப் பதுவு நன்றே யவரோ—டிணங்கி யிருப்பதுவு நன்று." அன்றி

1. நீத்து - விட்டு.

யும், *" தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற—தீயார்சொற் கேட்ப துவுந்தீதே - தீயார்—குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ—டிணங்கி யிருப்பதுவுந் தீது." என்றும், மற்றும் வரு வனவற்றுற் காண்க.

இ-து. கொல்லாவிரதியாயினேன் யாவராயினுங் கொலை யாதிகளுக்கு அஞ்சாத பாவிகளைக் கண்ட விடத்தும் அவரது சினேகத்தை உடனே விடவேண்டுமென்று கூறியது. (உக)

இப்படித் தேவரீர் கற்பித்த திருவாக்கின்படி அடியேனும் என்னுடைய ஸ்திரீ புத்திராதிகளுங் கொல்லாமை கொண்டு புலா லுணவு நீங்கி நல்லோரைச் சினேகித்துப் பாவிகளது சினேகத்தை விட்டு அசரபதார்த்தத்தைக் குருவாதி நால்வர்க்கும் முன்னூட் டிப் பின்பு உண்டுவருகிறேன் என்றவளவில், அவனை நோக்கி மேற் சித்தாந்தியார் அருளிச் செய்வார்.

சார்வொழிகொம் மடியாதி தாவரத்து னுறழ்தரு
நாய்த் தன்மை யோரை, நேரலைநீ கேண்முடிவிவ் வரும்
புரம்பொய் வீணளா நீக்கேல் வாணுள், பார்மிசைநீ புரி
யலைமெய்த் தவர்குழுவுற் றறமவர்சொற் படிசெய் நாளுஞ்,
சேருமனே சுத்திபர ஞானமத்தா னடைவைமுத்தித் திருநா
டன்றே. (22)

தாவரத்தும் கொம்மடியாதி சார்வு ஒழி. எ - து. அப்படிச் செய்யுமுறைமைசெய்து அசரபதார்த்தத்தை உண்பாயாயினும் அவற்றின்கண்ணும் நீக்கவேண்டியன உண்டு. அவையாவையெ னில், கொம்மட்டிக்காய் கடைச்சரக்குகளான உள்ளி வெள்ளுள்ளி முதலியவைகள்.

இதற்குப்பிரமாணம்: சைவசமயநெறி. * "உள்ளிவெள் ளுள்ளி [1] யுதும்பராஞ் செம்முருங்கை—வள்ளிபச ளைம்மதுக்கோ வை." * "வெண்கத் தரிக்காய்தேற் றங்காய்வில் வக்காயு— முண்பதல கொம்மடிக்கா யும்." "எண்ணெய்ப்பிண் ணாக்குப் பெ ரும்பீர்க் கெனுமிவையு—முண்ணே லுருண்டசுரை யும்." என் றும், மற்றும் வருவனவற்றுற்காண்க.

---

1. உதும்பரம் - அத்தி.

மேல்வினா. அசரபதார்த்தத்தினும் தோஷம் உளதோ? மேல்விடை. ஊன் உறழ்தரும். எ - து. கொம்மட்டியாதி நிஷேத பதார்த்தமாதலின் புலாலினை யொக்குமெனக் கொள்க. நீ முடிவு கேள் நாய்த்தன்மையோரை நேரலை. எ - து. முடிவாகிய பொரு ளிதுவென்று சொல்வோம் நீகேள் - ஒருவேட்டைக்காரன் நாயைப் பிடித்துவந்து பொற்சங்கிலியினால் கட்டிவைத்துக்கொண்டு பாற் சோற்றையிட்டு வளர்த்தாலும் அச்சங்கிலி நெகிழ்ந்த மாத்திரத் தின் மலத்தினைப் பழையதோலினை முரட்டெலும்புகளைக் கௌவிக்கொண்டு அருகாகவருகிற மனுஷரைக்கண்டு உறுமுதல் போல, ஒருவன் பாவமிது புண்ணியமிதுவென்று சொல்லுமளவுங் கேட்டிருந்து அவ்விடம் விட்டு நீங்கினமாத்திரத்தில் பின்னும் பாவத்தைச் செய்துகொண்டு நல்வழி காட்டுவோரைக் காணுந்தோ றும் வெறுப்புடையாரா யிருந்துள்ள லோகாயதனாதி மூடர்களைப் போலாகாது கொலை பாவமென்று கூறியமாத்திரத்திற் கொலை செய்குதற்கு அஞ்சு.

இங்ஙனம். நாய்த்தன்மையோரென்றதற்குப் பிரமாணம் : நாலடி. 1 * " அவ்விய மில்லா ரறத்தா றுரைக்குங்காற்—செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கிலார்—கௌவித்தோ றின்னுங் 2 குணுங்கர்நாய் பாற்சோற்றின்— 3 செவ்வி கொளறேற்று தாங்கு. " என்றும், நீதிவெண்பா. * " 4 கன்மமே பூரித்த காயத் தோர் தஞ்செவியிற்—றன்மநூல் புக்காலுந் தங்காதே 5 சன்ம மெலும்—புண்டு சமிக்குநா யூனைவி னெய்யதனை—யுண்டு சமிக்கு மோவோது. " என்றும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

இவ்வரும்புரம் பொய் வாணாள் வீணாள நீக்கேல் பார்மிசை நீ புரியலை மெய்த்தவர் குழு உற்று அவர் சொற்படி அறம் நாளும் செய் மனோசுத்தி பாஞானம் சேரும் அத்தால் முத்தித் திருநாடு அடைவை. எ — து. சென்மாந்தரங்களிற் செய்துள்ள தபோ பலத்தால் அரிதாய் இங்ஙனங் கிடைத்துள்ள இந்தச்சரீரம் நீர்க் குமிழிக்கொப்பாய் அழிவதாதலின் இது உள்ள பொழுதே செய்ய வேண்டிய அறங்களைச் செய்துமுடியாது, இச்சரீரத்துக்கு அருந் தல் பொருந்தலைக் கூட்டுதல் தொழிலாக இதற்கு அமைத்தநாள்

---

1. அவ்வியம் - பொறாமை. 2. குணுங்கர் - புலையர். 3. செவ்வி- நல்லருசி. 4. கன்மம் - பாவகருமம். 5. சன்மம் - சர்மம் (தோலை யும் எலும்பையும் உண்டு திருப்தியடையும் நாய் ஆவின் நெய் கலந்த உணவை உண்டு திருப்தியடையுமோ. எ - று.)

களை வீணிற்கழித்து யமதண்டனைக்கு உட்படாவகை அறஞ்செய் வாய். செய்யுமிடத்து ஒன்றை நீ புண்ணியமென்றெண்ணிச் செய் யப் பாவமாயினும் ஆகும். பாவமென்றெண்ணி நீங்கப் புண்ணிய மாயிருப்பினும் இருக்கும். ஆதலின் உனது சுதந்தரத்தாற் செய்த லொழிந்து பூமியின்கண்ணே வேதாகமவிதி தவறாது கொலை யாதிகளை நீங்கிய சிவஞானியாரது கூட்டத்தினை அணுகிப் பத்தி மையான் வழிபட்டு அவர்களது திருவாக்கின்படியே தீவினைகளை நீங்கி நல்வினைகளைச் செய்யக்கடவாய். இங்ஙனம் நாடோறும் வழு வாது செய்குவையாயின் உன்னுடைய மனசு நிருமலமாம். அதனாற் பாரம்பரியத்திற்சிவஞானமுமுண்டாம். அந்த ஞானத்தால் மோட் சமாகிய பெண்ணிருந்து வாழும் பூரணதேசமடைகுவை. எ – று

மானுடசரீரமடைத லரிதென்பதற்குப் பிரமாணம்: திருமந் திரம். * "பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்—பெறுதற் கரிய பிரானடி சேராப்—பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம்—பெறு தற் கரியதோர் பேறிழந் தாரே." என்றும், சிவஞானசித்தி. 1 * "அண்டசஞ் சுவேத சங்க ளுற்பீச்சஞ் சராயு சத்தோ—டெ ண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தா—னுண்டுபல் யோனி யெல்லா மொழித்துமா னுடத்து தித்தல்—கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்." என்றும், அறிவானந்தசித்தி. * "தேரிற் சதுர யுகமிரண் டாயிர 2 நாட்டிங்களாண்—டோரினந் நூற்றி லயன்மாண் டொந்தமு முற்றுத்தென்பாற்—சேரு நகத் துளை யின்வட பாற்கழி செல்லெளிது—சாரும் பிறப்பொழித் திம்மா னுடத்திற் சனிக்கரிதே." என்றும், மற்றும் வருவன வற்றாற் காண்க.

யாக்கையாவது அநித்தியமாதலில் விரைந்தறஞ்செய்ய வேண்டுமென்பதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். * "நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை—மேற்சென்று செய்யப் படும்." என்றும், திருமந்திரம். * "இக்காய நீக்கி யினியொரு காயத்திற்—புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமி—னெக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்—றக்காலை யுன்ன வருள்பெற லாமே." என்

1. அண்டசம் - முட்டையினின்றும் பிறப்பன. சுவேதசம் - வேர் வையினின்றும் பிறப்பன. உற்பீச்சம் - நிலத்தைப் பிளந்து வந்து பிறப்பன. சராயுசம் - பையிற்கட்டுப்பட்டுப்பிறப்பன. (சம் - பிறப்பு). 2. சதுர்யுகம் இரண்டாயிரம் ஒரு நாளாக, நாள் முப்பது திங்களாக, திங்கள் பன்னிரண்டு ஆண்டாக, அவ்வாண்டு நூற்றில் எ-று.

றும், திருநாவுக்கரசுநாயனார் தேவாரம். 1 * "நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்—சுடலைசேர்வது சொற்பிர மாணமே—கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டா—லுடலி னார்கிடந் தூர்முனி பண்டமே." என்றும், சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம். * "வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்—பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்—றாழாதறஞ் செய்ம் மின்றடங் கண்ணான்மல ரோனுங்—கீழ்மேலுற நின்றான்றிருக் கேதார மெனீரே." என்றும், சிவஞானசித்தி. * "கருவினு ளழிவ தாயுங் 2 கழிந்திடா தழிவ தாயும்— 3 பரிணமித் தழிவ தாயும் பாலனா யழிவ தாயுந்—தருணனா யழிவ தாயுந் தானரைத் தழிவ தாயு—முருவமே யழிவே யானா லுள்ளபோ தேபாருய்ய. 4 " என்றும், சிவதருமோத்தரம். * 'அழியு மாக்கைகொ டேயழி யாப்பதங்— 5 கெழுமு வார்பெற்ற தேநல்ல கேள்வியு—மழியு மாக்கை தனையழி யாதென—விழுவ ரோநர கக்குழி வெய்யரே." என்றும், பட்டணத்துப்பிள்ளை. * "இன்றிருந்து நாளை யிறக்குந் தொழிலுடைய—புன்றலைய மாக்கள் புகழ்வரோ - வென்றிமழு—வாளுடையான் றெய்வ மருதுடையா னுயேனை—யாளுடையான் செம்பொனடி" என்றும், போதாத்தினாகரம்.* "காய மானது நீரிடைக் குமிழிபோற் கழியுமென் றறிந்தேயு—மாயு மூனினை மெய்யென முழுமல வயிறது வளர்த்தற்கே—யாய தீவினை பற்பல மருவியங் கவைசெய்து கழிந்தேவிட்—டேயு மாறெனை யாண்டவ னென்பதற் கென்செய்து முடிந்தேனே." என்றும், நாலடி. * "புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி— 6 யின்னினியே செய்க வறவினை - யின்னினியே—நின்றா னிருந்தான் கிடந்தான்றன் 7 கேளலறச்—சென்றா னெனப்படுத லால்." என்றும், மற்றும் வருவனவற்றாற் கண்டுகொள்க.

அறமும் பெரியோர் சொன்ன நெறியே செய்யவேண்டுமென்பதற்குப் பிரமாணம்: 8 சிவானந்தமாலை. *" ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்துங் கொள்ளாதே—சாரமுள தெவ்விடத்துந் தான்கொண்டு - தீரவுணர்—நல்லோர்தஞ் சொல்லை நழுவாம னன்னெஞ்சே—நில்லா யிதுவே நெறி." என்றும், ஔவையார். * "மூத்

1. நடலை - பொய். 2. கழிந்திடாது - காலஞ்செல்லாது பிறந்த உடனே. 3. பரிணமித்து - சிறிதுகாலம் கழித்து. 4. உய்யப்பார்ப்பாய். 5. கெழுமுவார் - அடையமுயல்வார். 6. இன்இனி - இனிஇனி - இப்பொழுதே இப்பொழுதே. 7. கேள்அலற - சுற்றத்தார் அழ. 8. பாடுதுறை.

தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்.” என்றும், நாலடி * “ அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்—பொறுமின் பிறர் கடுஞ்சொற் [1] போற்றுமின் வஞ்சம்—வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும்—பெறுமின் பெரியோர்வாய்ச் சொல் என்றும், மற்றும் வருவனவற்றுங் காண்க.



பெரியோரைச் சார்தலின் முத்தி கைகூடுமென்பதற்குப் பிரமாணம் : அருட்பிரகாசம். * “ [2] கொலையாதி யோரைந்துங் [3] காமாதி யாறுங் குலைந்துநிலை—நிலையா துருவென் கைதோன்றி யுயிரு ணிறைந்தமலைச்—சிலையா தியுமெளி தொன்றுவ னெங்குந் திகழ்ந்திரண்டற்—றலையா திருக்கும் பெரியோர்தங் கூட்ட மடைந்தவர்க்கே.” என்றும், போதரத்திஞைகரம். * “ நித்த ஞாருளியநெறி தெரிவது நிமலநற் கழலென்னுஞ்—சுத்த வாரமுதுறுசுவை தருவதுஞ் சொருபனற் கழற்கன்பாம்—பித்த தாகிய பெருநலம் விளைவதும் பேரெழி லடியாரா—லத்தி ஞலடி யாரவை கூட்டிய வதிசய மளவன்றே.” என்றும், திருவாசகம். * “ உடையா ஞுன்ற னடுவிருக்கு முடையா ணடுவு ணீயிருத்தி—யடியே னடுவு ளிருவீரு மிருப்ப தாஞ லடியேனுன்—னடியார் நடுவுளிருக்குமரு ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்—முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே.” என்றும், மற்றும் வருவனவற்றுற்காண்க.

இ - து. அசாபதார்த்தத்திஞும் நிஷேதபதார்த்தங்களை விடவேண்டுமென்றும், மேலையாதொருகாரியமும் ஈாதாக்களது திருவாக்கின்படி நடக்கவேண்டுமென்றும், அப்படி நடக்கிற் பாரம்பரியமாய் முத்திகைகூடுமென்றும், கூறியது.

கொலைமறுத்தல் மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன

---

1. வஞ்சனை வாராதவகை தடுத்துப் பாதுகாத்துக்கொள்ளுங்கள். 2. கொலையாதி - கொலை, களவு, கள், காமம், பொய், 3. காமாதி - காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாற்சரியம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# வைராக்கிய சதகம்.

## கணபதி வணக்கம்.

முக்கணிறை தருகரியை முன்னடத்திப் பின்னதன்றுட்
பக்கமறைந் தேகுநரெம் பாச[1] விக ஞசமுற
மிக்கவமர் விளைத்திளையா வீரரெனப் பூரணவூர்ப்
புக்கிணையில் பராநந்தப் பூவையையு மேவுவரால் (1)

## சபாபதி வணக்கம்.

அம்பல வாண னடியிணை தொழுவார்க்
கின்பமும் வீடு மெளிதினில் வருமே. (2)

## விநாயகர் வணக்கம்.

[2] நிம்ப நிழற்களி—றம்பொன் மலர்த்தாள்
நம்பீது முத்திந—லின்பம் வரற்கே. (3)

## சுப்பிரமணியர் வணக்கம்.

[3] சமர புரிக்குகன்—விமல மலர்த்தாள்
எமதுளம் வைக்குது—[4] மும்மல மறற்கே. (4)

---

1. இகல் - பகை. 2. நிம்பநிழற்களிறு - திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் வேம்படி விநாயகர். 3. சமரபுரி - போரூர். சூரபத்மனோடு முருகக்கடவுள் ஒரு முகூர்த்தம் போர் செய்த விடமென்பர். 4. மும்மலம் - ஆணவம் மாயை கன்மம்.

## குருபரம்பரை வணக்கம்

மறைமுடி யதனில் விளங்கிடு மொளியே
மனிதரைப் போலவந் தெனது
சிறைதவிர்த் தாண்ட சிவப்பிரகாச
தேசிகன் றன்னைமற் றவன்ற
னறைமல ரடியைப் போற்றிடுஞ் சாந்த
நாயகன் றன்னைமற் றவன்ற
னிறையருள் பெற்ற பழனிமா முனியை
நெஞ்சினு ளிருத்தியே பணிவாம். (5)

## நூலாசிரியர் வணக்கம்.

போந்தே முயிர்க்குயி - ராந்துணை யொத்த
[1] சாந்தையர் தம்பத - மேந்து கருத்தே. (6)

## நூல்.

பஞ்சபூத காரியமாகிய உடம்பினையும் ஞானேந்திரிய கருமேந்திரியங்களையும் நேதிகளைந்து, அதன்பின்னர் அந்தக்கரணங்களையும் நேதி களையத் தொடங்கும்போது அவைகளுக்குட் பிரதானமான மனத்தை எதிரிட்டு நோக்கி நீக்குந்தோறும் அம்மனம் அந்த விவேகத்திற்கு மிகவும் ஒற்றுமையாகலின் நீங்காது முன்னைப் பழக்கம்போல் விவேகத்தைத் தன்வயப்படுத்தித் தனக்குப் பற்றுக்களாயுள்ளவற்றில் இழுத்துச் செல்ல அஃது அங்ஙனம் இழுத்துச் செல்லுதலை விவேகம் அறிந்து தனது வலியினால் எதிரிட்டுநின்று, இஃது எவற்றைப்பற்றி நின்று எழாநின்றதென்று நோக்கி அதுபற்றிய பற்றுக்களியாவையும் இவை இவையென்று அறிந்து அதற்கு அப்பற்றுக்களையெல்லாம் விடுவித்து அதனைத் தன்வயமாக்குதற்பொருட்டு மனத்தை முன்னிலையாக்கி விவேகங் கூறிற்றென்று, விவேகத்தின்மேல் வைத்து இந்நூல் கூறுகின்றார்.

---

1. சாந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள்.

எ - ம். பிரமகீதை. (205) "சதுர்மறை யொழிந்த வாதனை பொல்லாத் தர்க்கவா தனையுல கத்தின்—மதமுறு சமய வாதனை தார மக்கள்சுற் றத்தின்வா தனையு—மிதமுறு பொருளில் வாதனை தேகேந் தியமனம் புத்திநற் பிராணன்—முதலவா தனையும் வித்தை வா தனையு முடிவில்போ கத்தின்வா தனையும்." அன்றியும். (206) "ஏறுடைச் சிவனைத் திருநெடு மாலை யிகழும்வா தனையும்வே தத்திற்-கூறிடு ஞான சாதன மாகக் கொள்ளுமுத் தானபுண் டரத்தை—மாறுட னிகழும் வாதனை பாவ வாதனை யாவுமா னுடர்க்கு—வேறடும் பரமாத் துவிதஞா னத்தை விலக்கிடும் விரோதிவிண் ணவரே." அன்றியும், (207) "ஆதலால் வீடதனி லாசை யுள்ளோ னதின்மிகவுந் தாற்பரிய னுகி முன்ன—மோதுவா தனைகளெலா மிகந்தெப் போது முற்றபர மாத்துவித ஞானி யாவன்—வேதவே தாந்தங்க ளுரைக்கப் பட்ட மேலான வத்துவித ஞான மாகு—நாதனும் பிரமத்தை நவில லாமோ நாமௌனத் திருப்பதலா லுகத் தீரே." எ-ம். ஞானவாசிட்டம். (208) "மறுகுவா தனைக ளற்ந்த மௌனத்தை யொழிய வேறே—ருறுகதி நல்ல தில்லை யுணர்வன வுணர்ந்த தாகுந்—துறுதிசை பத்துஞ் சுற்றி மீண்ட தாந் தொல்லை ஞாலத்—தறுதியா யுண்மை கண்டோர் சிலர் நின்றே ரவத்தின் மாய்வோர்." எ-ம். சிதம்பரபுராணம். (209) "அன்றியுரைக் கருமனந்த கோடிபிறப் பிடைக்கரும மாற்றினு லுந்—துன்றரிது பரகதியைச் [1]சைமினிவ வேதாந்தச் சொற்க டோர்ந்து—நன்றிதரு பொருட்டெளிவாஞ் சிவஞானஞ் சிவனருளா னண்ணின் முத்தி—யொன்றலெளி தாதலினுன் மூதுணர்வா விதற்கேற்ற வுறுதி யோர்வாய்." எ-ம். சிவஞானதீபம். (210) "சாத்திரம்புத் தகம்பூசை சமயமதந் தருக்கந் தந்திரமந் திரயோகந் தவவிரதஞ் சீல—மேத்தரிய பாவனையெண் சித்திகளே முதலா மெய்பயனு முத்தியிலக் கெனவொருசொல் லதனுற்—றீர்த்தவன் மெய்த் தேசிகனு மவனருளா லகலாச் சித்தமல மறுத்தலகிற் றீமைநன்மை செயினும்—வாய்த்தகதி ரவன்செயல்போ லிசைந் திசையா தொழுகும் வண்மையரே மெய்ஞ்ஞான வுண்மைநிலை யினரே." எ-ம். சிவானந்தமாலை. (211) "பூசனையும் வாசனையும் புத்தகமுஞ் சாத்திரமும்—வாசகமா மந்திரமுந் தந்திரமு - நேச—மிறக்கின்ற சிந்தனையு மெல்லாம் பொருளை—மறப்பென்று மாணு மதி." எ-ம். ஒழிவிலொடுக்கம். (212) "கிரியைக் கிளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா—திரியச் சுகம்விளைத்த சீமான் - குருவன் றிச்—சற்றே பதைப்பைத் தரினுஞ் சகம்படைக்கக்—கற்றானுங்

1. சைமினிவ—சைமினிமுனிவர்.

காலனுமாங் காண்.'' அன்றியும், (213) "சுகாதீதம் வேண்டிற் றெழில்செய்வோ மென்று—னகாரோ தயில்வார் நடந்தோ—விகாரமெனச்—சாத்திரமும் பூசைச் சமாதிகளுஞ் சார்போதக்—கோத்திரங்காண் மாயைக் குழாம்.'' எ - ம். வள்ளல்வாக்கு. (214) வார்த்தையா லர்ச்சனையான் மந்திரத்தாற் பாவகத்தாற்—சாத்திரத்தாற் றந்திரத்தாற் றர்க்கத்தா - லூத்தையுட—லுற்ப வமு மோயாதிங் குன்னுனை மாணவக—தற்பரமுங் கிட்டாது தான்.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (௫௯)

வாதனைகளெல்லாம் நீங்கிய மாணக்கனுக்குச் சமாதி கூடு தற்கு ஆசனம் மேற்கூறுகின்றார்.

ஒட்டற முத்தித் தடையா யுளவெலாம்
விட்டனை யேலினி யுந்தீபற
மேவொண் சுகாசனத் துந்தீபற. (60)

எ - து. முத்திவிலக்கென்று இங்ஙனம் கூறப்படுஞ் சகல வாசனையும் மாசற ஒருங்கே நீத்தனையாயின், மேற்சமாதி கூடு கைக்கு அநுகூலமாகியது யாதொரு சுகாசனம்; அவ்வாசனத் தைப் பொருந்துக. எ - று.

இ-ம். பகவற்கீதை. (215) "தலையுங் கழுத்து முடம்புமிவை செவ்வே தளரா தேயிருக்கு—நிலையி லிருந்து கண்களைத்தன் மூக்கி னுநிமே லேநிறுத்தி—யலையுங் கடல்போற் காமமுமெய்ப் பயமுந் தன்னை விட்டகல—வுலையு மனமுள் ளடங்கவெனை யுணர்ந்தே யிருக்கு மதுயோகம்.'' எ-ம். பிரமகீதை. (216) "தக்கஞா னத் தைத் தான்பெறற் பொருட்டுத் தனியிடந் தனையடைந் திதய—துக்கமே வாமற் சுகாசனத் திருந்து தோடலை கழுத்துடம் பிவைநே—ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த வுடம்பையுத் தூளனம் பண்ணி—மிக்கவாய் வருமிந் திரியங்களை யெல்லாம் விடயமே லெழாவகை விலக்கி.'' எ-ம். அமுதசாரம். (217) "செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற—வெவ்வா தனத்தே யிருந்தவர்க் குங் - கைவந்தால்—வாத முதனோய் நலியா மதியுடையோ—ராதன மென்ப தது.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற்காண்க. (௬௰)

மேல் இச்செய்யுள்தொடங்கி உண்மை நிஷ்டை கூறுகின்றார்

வாங்கிப் பொறியைந்து ணின்ற மனந்தன்னை
நீங்கா தகத்திருத் துந்தீபற
நினைவு மெழாமலென் றுந்தீபற. (61)

எ - து. ஐம்பொறிகளோடு கூடிச் சத்தாதி விஷயங்களைக் கவராநிற்கும் மனத்தினை அவற்றினை விட உள்ளே வாங்கிப் பின்பு அவற்றின் வழி போகாமல் நெஞ்சிலே வைத்து அவ்விஷய வாசனைகளும் எழாதபடி அடக்கவேண்டும். எ - று.

இ-ம். தேவாரம். (218) "பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை—நெறிப் படுத்து நினைந்தவர் சிந்தையு—ளறிப்பு றும்ம மு தாயவ னேகம்பங்—குறிப்பி னுற்சென்று கூடித் தொழுதுமே." எ - ம். திருவாய்மொழி. (219) "புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி நலமந்த மில்லதோர் நாடு புகுவீ—ரலமந்து வீய வசுரரைச் செற்றான்—பலமுந்து சீரிற் படிமினோ வாதே." எ-ம். பகவத்கீதை." (220) "வாங்கி யைம்பொறி நின்ற மனத்தினை —நீங்கி டாவகை நின்னு ளிருத்தியே - தீங்கி யாவையுஞ் சிந்தை செயாமையாம்—பாங்கி யாதது வேபயில் வாயரோ." எ-ம். ஞான வாசிட்டம். (221) "மனமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றா—கனமுறு விவேக நீராற் கழுவினுற் சித்தி காட்டும்—வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற்கண்டு —சினமுறு பொறியை வென்று தீர்வரும் பிறவி தீர்வாய்." எ-ம். பிரபுலிங்கலீலை. (222) "இந்திய மோரொன் றாவிட் டிடின்மற்றை யொன்று சாரு—முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பி —னைந்தலை களினு னொன்றை யரிந்திடின் மற்றொன் றாலஞ்— சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ." எ - ம். சிவானந்தமாலை (223) "பூதஞ் சுழலும் பொறிபுலனுந் தக்கரணம்— போதங் கழித்துநாள் போக்காதே - போதச்—சிறையா நிறை வகலச் சின்மயனே யத்தே—நிறையா நிறைவாகி நில்" எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௬௧)

பதைத்தெழா துள்ளம் புதைப்பாய் பதைக்கில்
வதைப்பாயங் கங்கேயென் றுந்தீபற
மாயு மனப்பேயென் றுந்தீபற. (62)

எ - து. சித்தத்தைச் சற்றும் அசையாதவண்ணம் அடக்கக்கடவாய். அங்ஙனம் அடங்காது அசைந்து ஒருபொருளைப்

பற்றுமாயின், பற்றுமுதிர்ந்து நிச்சயிப்பதற்கு முன் விவேகத்தால் உடனே அழித்து முன்னின்ற நிலையே நிற்கக்கடவாய். அப்பொழுது அலகைபோல் உழலாநிற்கிற மனம் இறந்திடும். எ - று.

இ-ம். தேவிகாலோத்தரம். (224) "பற்றினுற் சலிக்கு முள்ளம் பற்றுமற் பண்ணிக் கொள்க—நிற்றலின் றெனினுந் தத்த நிலையினி னிறுத்திக் கொண்டாற்—பெற்றன மென்று பேணிப் பின்னைப்பே ராமற் காக்கு—நற்றவ ரன்றி யிந்த வுலகினி னல்லார் யாரே." எ - ம். ஞானவாசிட்டம். (225) "எந்த வெந்த வாதனைக ளிதயத் தெழுந்த வைவையெல்லா—மந்த வந்த விடத்தழிக்கி னதுவே மாயைக் கழிவாகு—முந்து போக பேதமென மொழிந்த விருவா தனைவிட்டு—வந்த பாவா பாவங்கண் மாற்றி விகற்ப மறமகிழ்வாய்." அன்றியும், (226) "எங்கே யெங்கே மனமோடி யிளையோ ரென்ன வீழ்ந்தழுந்து—மங்கே யங்கே நின்றெழுப்பி யகண்ட வறிவி லடைவிப்பாய்—சங்கே தமதா யிவ்வாறு சாதித் துளமா மதகரியை—வெங்கே தமறத் தளைத்தெல்லா விசாரத் தாலும் வீடணைவாம்." எ - ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (௬௨)

அசைவறச் சித்த மடங்குமேற் பின்ன
ரசையாமற் காத்திடென் றுந்தீபற
அறிவால் வருந்தியு முந்தீபற. (63)

எ - து. அசைவொழியாத சித்தம் யாதொரு காலத்து அசைவொழிந்து அடங்குமாயின் பின்னர் அசையாதபடி அதன்கண் அசைவு பிறப்பித்தற்கு உரியன எவையேனும் அவற்றை அறிவினது வீரப்பாட்டால் அக்கணமே நீக்கித் திடசித்தம் பண்ணிக்கொள். எ - று.

இ-ம். திருவள்ளுவர். (227) "எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்—திண்ணிய ராகப் பெறின்." அன்றியும், (228) "துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி—யின்பம் பயக்கும் வினை." தேவிகாலோத்தரம். (229) "ஆராத சித்த மியாதோர் காலத்தி லடங்கு மாறுற்—போராமல் வருந்திக் காத்துப் பின்னைச்சிந் தனைகள் சென்று—சாராமல் வல்ல வாறு தடுத்துச் சார் வான வெல்லாஞ்—சேராமன் மயக்க நீக்கித் திரமாகச் செய்து கொள்வான்." எ-ம். ஞானவாசிட்டம். (230) "வருந்தி முயன்று மனந்தன்னை மாற்றி யில்லை யுண்டென்னு—திருந்த பதத்தி விருந்

திடுவா யிடர்தீர் செல்வ மிடரின்றிப்—பொருந்த வேண்டு மனம்வெ ன்றூற் புவன மூன்றுந் துரும்பாகுந்—திருந்த வினிதென் றனவெல் லாந் தீதாய்த் தோன்றின் மனமாளும்.'' எ-ம். நாலடியார். (231) ''ஊக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்—தாக் கருந் துன்பங்க டாந்தலை வந்தக்கா—னீக்கி நிறூஉ முரவோரே நல்லொழுக்கங்—காக்குந் திருவத் தவர்.'' எ-ம். அருட்பிரகாசம். (232) ''கடைதரு தீப்புகை கால்வருத் தங்கொடு கைநெகிழ்ந்து— விடினவிந் தாக்க வொணுத்துய ரெய்தலின் வெம்பொறிவாய்ப்— படர்தரு சித்த மொருகா லடங்கிற் பினைப்படாத்—தடைசெயல் வேண்டும் படர்ந்தா லெவர்பின் றடுப்பவரே.'' எ-ம். மற்றும் வரு வனவற்றூற் காண்க. (௬௩)

ஆங்கறி யாமையுஞ் சாரா தறிவொடுந்
தூங்குவாய் நாளுமென் றுந்தீபற
தோன்றும் பரம்பொரு ளுந்தீபற. (64)

எ - து. விகற்பவுணர்வாகிய சித்தசலனமற்றிருந்துள்ள அவ் விடத்து அறியாமையாகிய கேவலமும் பொருந்தாமல் உன்னு டைய சுபாவ அறிவோடுங்கூடி இரவும்பகலும் இடைவிடாது சாதகம் செய்வாயாகில் அங்ஙனம் உனக்கு மேலாகிய பரம்பொ ருளே தோன்றும். எ - று.

இ-ம். திருமந்திரம். (233) ''அறிவறி யாமை யிரண்டு மகற் றிச்—செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப்—பிறிவறி யாது பிரா னென்று பேணுங்—குறியறி யாதவர் கொள்ளறி யாரே.'' அன்றி யும், (234) ''பொங்கு மிருணீக்கும் புண்ணியக் கூத்தனை —யெங்குமாய் நின்றாடு மேகம்பக் கூத்தனைக்—கங்குல் பகலி னுங் காணாத கூத்தனை—யிங்கெ னிடமாக யான்கண்ட வாறே.'' எ-ம். பட்டணத்துப்பிள்ளையார்பாடல். (235) ''சினந் தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று—நினைந்தது மற்று நினையா ததுமற்று நிர்ச்சிந்தனுய்த்—தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற—வனந்தலி லென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே.'' எ-ம். தேவிகாலோத்தரம். (236) ''நித்தி ரையும் பராக்கினையு நீக்கிச் சித்த மொருநிலையு நீங்காம னிறுத்திக் கொண்டாற்—சித்தமொரு பொருளினையுஞ் சேரா தாகிச் சேரும்

231. ஊக்கி—முயன்று. உரவோர் — மனவலியுடையோர். திரு வத்தவர்—மேன்மையுடையர், அத்துச்சாரியை பெற்றது.

வகை சேராமற் செல்ல நின்று—மத்தமன முதலாய வவத்தை யொன்று மருவாத வகைநிற்கு மதுவே யாகு—முத்திநெறி யென் றுமறை யிடைவி டாது முறையிடவு மாகமங்கண் மொழியுங் காணே." எ-ம். திருவுந்தியார். (237) "இரவுபக லில்லா வின்ப வெளி யூடே—விரவி விரவிநின் றுந்தீபற—விரைய விரையநின் றுந்தீபற." எ-ம். சிவஞானசித்தியார். (238) "அறியாமை யறிவ கற்றி யறிவி னுள்ளே யறிவுதனை யருளினு லறியாதே யறிந்து—குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகிற்--பிறியாத சிவன்றானே பிறிந்து தோன் றிப் பிரபஞ்ச பேதமெலாந் தானுய்த் தோன்றி—நெறியாலே யவையெல்லா மல்ல வாகி நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னேயே." எ-ம். திருவம்மானை. (239) "உற்ற மறப்புநினைப் பற்றேன்கா ணம்மானை—யோவாத சித்தத்தே யொத்தேன்கா ணம்மானை." எ-ம். ஒழிவிலொடுக்கம். (240) அறிவா யிரீர்மயக்க மாகா தசையில்—விறிசாய் விடாதோ விகற் பம் — பிறியாத் — தராசு நுனிபோல் சமாதிவரின் ஞான — விராசனுமக் கொப்பா ரெவர்." எ - ம். மோகவதைப்பரணி. (241) "ஆங்குணரா மையுமுணர்வு மாகியகோ ளறவிருந்து—தூங் கினர்காண் சுகமடைவார் சும்மேலோ சும்மலக்காய்." அன்றியும். (242) "நீங்குதலில் லாவறிவே நிகழ்ந்தக்கால் விழிப்பதுவுந்—தூங்குதலு முண்டாமோ சும்மேலோ சும்முலக்காய்." எ - ம். அஞ்ஞவதைப்பரணி. (243) "ஒழித்தே யுள்ள முணர்வுடைய வொழியா வொருவன் வருமளவும்—விழித்தே யுறங்கும் விளங் கிழையீர் மேவுங் கபாடந் திறமினோ" எ - ம். மற்றும் வருவன வற்றாற் காண்க. (சுச)

அந்தப் பரத்தோ டிரண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்தீபற
அத்து விதவீடென் றுந்தீபற. (65)

எ - து. அங்ஙனம் சுத்தாவத்தையிற்றோன்றிய பரத்துடன் காண்பானும் காட்சியும், இன்றி வேறறக்கலந்து நிற்கும் அந்தச் சிறப்பினையுடைய நிஷ்டையே அத்துவிதமாகிய முத்தி யெனப் படும். எ - று.

---

240 இரீர்—இருங்கள். விறிசு—ஒன்றனந்தமாகும் ஓர் வகை வாணம்.

இ-ம். திருமந்திரம். (244) "குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்—தறியா வறிவி லவிழ்ந்தேக சித்தமாய்—நெறியாம் பரானந்தி நீடருளொன் றுஞ்—செறியாச் செறிவே சிவமென லாமே." அன்றியும். (245) "சித்தம் பரனோ டியிருற்று நீண்மனஞ்—சத்த முதலைந்து தத்துவந் தானீங்கிச்—சுத்த மசுத்தந் தொடரா வகை வினைந்—தத்த னவன்பா லடைதல்சித் தாந்தமே." எ-ம். கந்தரலங்காரம். (246) "போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள் ளும்—வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்து வந்து—தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே—யாக்கு மறுமுக வாசொல்லொ ணாதிந்த வானந்தமே." எ-ம். கந்தரனுபூதி. (247) "ஆனா வமுதே யயில்வே லரசே—ஞானா கரனே நவிலத் தகுமோ—யானா கியவென் னைவிழுங் கிவெறுந்—தானாய் நிலைநின் றதுதற் பரமே." அன்றியும், (248) "வானோ புனல்பார் கனன்மாருதமோ—ஞானோ தயமோ நவினுன் மறையோ—யானோ மனமோ வெனையாண் டவிடந்—தானோ பொருளா வதுசண் முகனே." எ-ம். திருவாய்மொழி. (249) "நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரிய மெல்லாமீர்த்—தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து—சென்றாங் கின்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றா—லன்றே யப்போ தேவீ டதுவே வீடு வீடாமே." எ-ம். பகவத்கீதை. (250) "யாதொன் றிந்தப் புலனறியா வளவி லின்ப மாயிருக்கும்—யாதொன் றினைச்சென் றடைந்தோர்கள் பின்னை யதனி னிரண்டாகார் — யாதொன் றினைப்பெற் றவரிதனின் மிக்க தொப்ப துண்டென்னார் — யாதொன் றிந்த வறிவிற்கே யறிவாய் நிற்கு மதினின்றோர்." எ-ம். பிரமகீதை. (251) "சுழுத்தியத னிற்றுயர் துவக்குமுட றன்னின் —றெழும்பியுள தன்வடிவி னுவிறையை யெய்துற்—றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கு—முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்றான்." எ-ம். பிரபுலிங்கலீலை. (252) "ஞேய ஞானஞா திருவெனு மிவைபல நிற்கு—மாயின் வேறற முத்தியன் றதுசக மாமென்—றேயு மாறிது வதுவெனுஞ் சுட்டிலா வியல்பை—மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்." எ-ம். ஞானவாசிட்டம். (253) "முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டியலதுவா மும்மை யாகி, யடர்தருஞா திருஞான ஞேயமெழுந் தொடுங்கு மிட மதுவே யாகுந் — திடவிசும்பன் றாயிருந்தும் விசும்பான நிலையதுவாஞ் சித்தம் புந்தி—படர்மனம்போய்த் தாவரம் போற் பெறுமுளறி வொப்பாமப் பரம ரூபம்." எ-ம். சிவப்பிரகாசம். (254) "பொறி புல கருவி யாவும் புணராமே யறிவி லாமைச்—சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற—சிற்பர மதனை

லுள்ளச் செயலறுத் திடவு திக்குந்—தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே.'' எ - ம். சிவநெறிப்பிரகாசம். (255) "ஞானமு டன் ஞேயஞா திருவென்னு மூன்று நாடாமற் றனதுவாய் நண்ணி யிட றனே—யூனமிலா வுன்மனைக்கு மேலான முத்தி யுற்றதுநின் மலதுரியா தீதமென வுரைப்ப—ரானவிதே சுத்தமா முத்தியாகு மன்றிவே றுரைக்குமுத்தி யவைக ளெல்லா — மீனமா முத்தியது தன்னை யெல்லா மியம்புவா மறிந்ததனை யிசையார் வாறே.'' எ-ம். திருவம்மானை. (256) "சத்திய மானது சத்தே காணம்மானை—தற்போதம் போனவிடந் தற்பரமா மம்மானை.'' எ-ம். சிவானுபூதிவிளக்கம். (257) "எரிசுத்தங் கொண்ட விரும் புபோ லெங்கும்—பரிசுத்த மான பராபரமே யானதே.'' எ-ம். நெஞ்சொடுமகிழ்தல். (258) "நீரொடுதண் ணெவிவிண்டு நீரான வாறேபோ—லூரொடுபே ரில்லாறே டொன்றினாய் நெஞ்சமே.'' எ-ம். சிவானந்தமாலை. (259) "மித்தையுடற் கட்டறுத்து மெய் யருளாய் மெய்யொழிக்குந்—தத்துமுங் கேவலமுஞ் சார்வகற்றிச்- சுத்தத் — தனியாகித் தானும்போய்த் தற்பரமாய் விட்டாற்— சனியா னிதுசத் தியம்.'' எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௬௫)

எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீபற
தற்போத மாய்க்குமே லுந்தீபற. (66)

எ - து. இங்ஙனங் கூறியது ஒழிந்து பின்னும் நானாவித மாக முத்திநிஷ்டை கூறுவாரும் உளர். யாதொரு சமயி கூறிய யாதொரு நிஷ்டையேனும் ஆத்மாவினது தற்போதத்தைக் கெடுத் துச் சிவத்தோடு இரண்டறக் கலப்பிக்குமாயின் அந்நிஷ்டைகளும் எமக்கு அவிரோதமே. எ - று.

இ-ம். சிவுானந்தமாலை. (260) "நாலாய நற்பதமு நல்ல வவுத்திரியு—மாலாய தந்திரமு மந்திரமு-மேலாய—சிற்போத வுண் மைத் தெரிசனமு மெல்லாமுன்—றற்போத நட்டமெழத் தான்.'' எ-ம். வீராகமம். (261) "வேதவா கமமுந் தீக்கை விதிகளுஞ் சரி யையாதி—மேதகு பாத நான்கு மிகுபத முத்தி நான்குந்—தீதின் மா ணவக மற்றுஞ் செப்பிய வனைத்து முன்றற்—போதநீ றாக நாதன் புந்திசெய் தமைத்த வாமே.'' எ-ம். மற்றும் வருவனவற் றாற்காண்க. (௬௬)

நானற்ற போதத்தே நானான முத்தியை
நானெங்ங னஞ்சொல்வ துந்தீபற
நான்மறைக் கெட்டாதென் றுந்தீபற. (67)

எ - து. காண்பானும் காட்சியும் இறந்து அத்துவிதமாகிய பரசுகாதீதத்தை இவ்வண்ணம் இருந்ததென்று இங்ஙனங் கூறுவது எங்ஙனம் அந்நிலை வேதாதீதமாதலின். எ - று.

இ-ம். திருமந்திரம். (262) "முகத்துக் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்கா—ளகத்துக் கண்கொண்டு பார்ப்பதே யானந்த—மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய—சுகத்தைச் சொல்லென் றாற் சொல்லுமா றெங்ஙனே." எ-ம். தேவாரம். (233) "மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையானென்னி னல்லா—னொப்புடைய னல்ல னொருவ னல்ல னோரூ ரனல்லனோ ருவம னில்லி—யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக் காணி னல்லா—லிப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே." எ-ம். திருவாய்மொழி. (264) "நின்ற வொன்றை யுணர்ந்தேனுக் கதனு ணேர்மை யதுவிதுவென்—றொன்று மொருவர்க் குணரலாகா துணர்ந்து மேலுங் காண்பரிது—சென்று சென்று பரம்பரமா யாது மின்றித் தேய்ந்தற்று—நன்று தீதென் றறிவரிதாய் நன்றாய் ஞானங் கடந்ததே." எ-ம். பிரமகீதை. (265) "ஒழிவிலாப் பரம யோகிய நுபவ முள்ளவா றுரைத்திட வெனக்கோர்—வழிபெறே னெடுமான் மகேசன்மா முனிவர் வானவ ருரைத்திட மாட்டார்—விழிமிகுஞ் சிவனால் விஞ்சையாஞ் சிவையால் விளம்பவும் படாதது விளம்பு—மொழியெலாம் வந்து மோனபாவத்தே முடியு மந் நிலமதே முடிவு. எ-ம். நித்தியானந்த தரிசனம். (266) "மோகித்த காமத் தின்கண் முயற்சியிற் சுகமுந் தண்ணீர்-தாகித்த தாகந் தானுந் தாகித்தோ னறிவ தல்லா—லேகத்த பொருள தாகி யிடைவிடா தமுத மூறும்—போகத்தை நுகர்வ தல்லாற் போதத்தாற் புகல லாமோ." எ-ம். சிவானந்தமாலை. (267) "சொல்லுவான் சுட்டுவான் போனசுகா தீதத்தைச்— சொல்லுவா யென்றா லென் சொல்லுகேன் - புல்லிவிடா—வண்மைக்குஞ் சேய்மைக்கு மப்பாலா மத்துவித—வுண்மைக்கோ ருத்தரமுண் டோ." எ - ம். திருவம்மானை. (268) "உண்டுதேக் கிட்டெங்கு மொன்றானே னம்மானை—உண்மைக்கோ ருத்தரந்தா னில்லைகா ணம்மானை." எ - ம். ஒழிவிலொடுக்கம். (269) "சத்தாதி தத்துவம்போய்த் தானுமெதிருங்கழன்றாற்—சித்தாந்த வேதாந்தச் செம்மையிலை-

முத்தி—யநிர்வசன மின்ப வதீதமெனி லாங்கே—பினமிடுதல் கன் மம் பிளாய்.'' எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (சுஎ)

பெத்தர்க் கொருசிவ மின்மையிற் பேரருண்
முத்தர்க் குலகுமின் றுந்தீபற
முழுதுஞ் சிவமாத லுந்தீபற. (68)

எ - து. பெத்தராயினோர்க்கு உலகமேயன்றிச் சிவந்தோன் றாது: அதுபோலும் பேரருளினை நீங்காத முத்தராயினோர்க்குச் சிவமேயன்றி உலகம் தோன்றாது; அச்சிவத்தையன்றி வேறொரு பொருளும் இன்மையால். எ - று.

இ-ம்.பிரமகீதை. (270)''தன்னின் வேறிலா மையிற் பர முத்தி யிற் றனதுபுத் தியினாலே-யன்னி யங்களாய்த் தோற்றுமா பாசர்க் கும் பரபத மறிகின்றான்—முன்ன மெப்படி மூடமாந் தசையிற் றன் மோகத்தா லெலாம்பந்த—மென்ன வுற்றனன் முத்தியு மப்பரி சிருக்கும தியல்பேயாம்.'' எ - ம். சிவப்பிரகாசம். (271) ''அகம் புறமெனவி ரண்டா லருச்சனை புரியு மிந்தச்—சகந்தனி லிரண்டு மின்றித் தமோமய மாகி யெல்லா—நிகழ்ந்திட மகிழ்ந்து வாழு நீர்மையார் போல ஞானந்—திகழ்ந்தகம் புறமெ ஞைத செம்மை யோர் நன்மை யோரே.'' எ - ம். அறிவானந்தசித்தியார். (272) [1]''பெத்தனைச் சேதிக்க வென்றே மொழியவிப் பேருலக—மித் தனை யும்மிறு மென்றனக் கில்லை யெனுமதுபோ — லத்தன்சொ லொன்றி லெனமாயச் சேதிக்க வன்றெனக்குச்—சித்த மயலுல கெல்லா மிறந்ததென் செப்புவதே.'' எ - ம். சிவானந்தமாலை. (273) ''நின்செயலற் றெப்போது நம்முடனே நிற்குநிலை—யுன் செயலற் றோதியிட வுற்றுக்கே - ளென்சுவடங் — கொன்றுமற வொன்றாகி யொத்துடனன் பந்தத்தி—னின்றதுபோன் முத்தி யிலு நில்.'' எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (சுஅ)

எல்லாஞ் சிவமேயென் றெண்ணினு நின்போத
மல்லாலஃ துண்மையன் றுந்தீபற
ஆங்கது நீங்கிடென் றுந்தீபற. (69)

எ - து. உள இல என்பன வெல்லாப்பொருள்களும் சிவமே யெனக் காணுமிடத்தும் காண்பதும் நின்போதமாதலின் அதுவும்

1. பித்தனை. எ - ம். பாடம்.

உண்மையன்று: எவ்விதத்தேனும் நின்போதம் எழாமல் அடக்குதலே உண்மை நிஷ்டை. எ - று.

ஆங்கதுமென்ற வும்மையால் நாலுவிதமாகி யெழாநிற்கும் ஆத்மபோதமெல்லாம் அடங்குகவென்பதாயிற்று.

இ-ம். சிவானந்தமாலை (274) "பற்றிலிழப் பாயகலும் பார்க்கிலிவ னுண்டாகு—முற்றுணரில் வேறுகு மொன்றுமெனின்—முற்றும் – பிரியாப் பொருள்பிறியும் பேசுமுரைக் கெட்டாக்—குறியாக் குறியாங் குறி." அன்றியும், (275) "கண்ட வறிவு கடமே யெனிலதமங்—கண்டழித்துக் காணுமை காணுமது—கொண்டுணரின் - மத்திமமே யந்த வகுப்பொன்றுங் காணுத—துத்தமமா மென்றே யுணர்." எ - ம். ஒழிவிலொடுக்கம். (276) "கட்டிய நாண் விட்டாலுங் [1] கந்தகலாக் கன்றுகளைத்—தட்டிப் புறப்படுத்துந் தன்மைபோ—லொட்டொழித்து - நின்றுற்போ னீசிவமாய் நில்லென்று நீக்கமறுத் — தொன்றுக்கி லொன்றிரண்டா கும்!" அன்றியும், (277) "குரங்கை நினையா திருவென்று கூறத்—திரும்பி யதுவே தியானம்—வருங்கதைபோ - னீசிவமாய் நில்லென்று னீங்கியதுவா நினைந்து— [2] மாய்வையது வன்றோ மலம்." எ - ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (சுக)

பாவனு தீத நினைவின்மை யுண்டெனிற்
பாவனை யாகுமென் றுந்தீபற
பன்னூற் கருத்துமீ துந்தீபற. (70)

எ - து. பாவனைக்கு அதீதமாகிய உண்மை நிஷ்டை யாதென்னில் உன்னுடைய நினைவிறந்து நின்றவிடம். அஃது ஒரு சற்றுண்டேனும் அதுவே பாவனையென்று சொல்லப்படும். எல்லா நூல்களினது துணிவும் இதுவே. எ - று.

இ-ம். சிவப்பிரகாசம். (278) "பாவிக்கின் மனுதி வேண்டும் பயனிலை கரண நீத்துப்—பாவிப்ப னென்னி லென்னை பழுதன பாவ கத்தாற்—பாவிக்க வொண்ணு னென்று பாவிப்ப னென்னினீயென்—பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றினோர்க்கே." எ—ம். ஒழிவிலொடுக்கம். (279) "குறங்குகுத்திக் கொண்டு குரோக்கைகத்திக் கூட்டை—மறந்தழைத்தாற் றூக்கம் வருமோ-வெறுங்

1. கந்து - கட்டுத்தறி. 2. மாய்வை-வருந்துவை. 279. குறங்கு—தொடை. குரோக்கைகத்தி—குறட்டைவிட்டு.

கெடுவீர்—தன்னை யழித்தெழுந்த சச்சிதா னந்தத்தை—யுள்ளி லொளித்துவிடா தோ.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற்காண்க.
(எ0)

ஒன்றிய கேவல மென்றே யுனத்தகுந்
துன்றிரு ளொன்றிலா துந்தீபற
சுத்த மிதாயதென் றுந்தீபற. (71)

எ-து. சகலகரணங்களும் ஆத்மபோதமும் அடங்கினவிடத்துத் தோன்று நிற்கும் சுத்தாவத்தையும் உயிர்களுக்குச் சகசமாயுள்ள கேவலாவத்தையென்றே எண்ணப்படும். அக்கேவலத்திற்கு உண்டாகிய பேரிருளொன்றும் இன்மையின் இது சுத்தாவத்தை யென்னும் பேருடைத்து. எ-று.

இ-ம். கந்தரலங்காரம். (280) "வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற—புரையற்ற வேலவன் போதித்த வாபஞ்ச பூதமுமற்—றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்—கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.'' எ-ம். மோகவதைப்பரணி. (281) "யாதுமா யறிவிறந்த விருளொன்று மிலதே—யாதுமா யறிவிறந்த வொளியொன்று முளதே.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க.

வாங்கிப் பொறியைந்துமென்ற செய்யுள் தொடங்கி இச்செய்யுள்காறும் உண்மைநிஷ்டை கூறினாரெனக்கொள்க. (எக)

இங்ஙனங் கூறிய உண்மை நிஷ்டைக்குளிருந்தும் துவித பாவனை தோன்றுமாகில் அஃது ஒழிந்து முன்னிலை கூடுதற்கு மேலும் ஒருபாயநிஷ்டை கூறுகின்றார்.

பாவனா தீதம் பதியா விடத்தேக
பாவனை பற்றிநின் றுந்தீபற
பழுத்தா லொழித்திடென் றுந்தீபற. (72)

எ-து. முற்கூறிய சகசநிஷ்டை பதியாவிடில் அங்ஙனம் தோன்றிய நினைவு அனேகபாவனைகளைப்பற்றி மயங்காமல் எல்லாப் பாவனைகளும் தன்னுள் அடங்குவதாகிய ஏக பாவனையைப்பற்றி நின்று அப்பாவனை முதிர்ந்து மற்றொரு பாவனையும் தோன்றுதவிடத்து அதனையும் மெள்ளமெள்ள நீக்கவே முற்கூறிய உண்மை நிஷ்டைகூடும். எ-று.

பழுத்தாலொழித்திடென்றது மேற்கூறுவனவாகிய உபாய நிஷ்டைகளுக்கும் ஒக்குமெனக்கொள்க.

இ-ம். திருவாசகம். (282) "அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி—விளைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனைக்—களவிலா வானந்த மளித்தென்னை யாண்டானைக் களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே." எ-ம். ஞானவாசிட்டம். (223) "பொய்ய தாமுயற் கொம்பினைப் பற்றவும் போக்கவு நினைப்பாரா—ரைய னேபர போதபூ ரணத்திலே யயலொன்று வருமாறென்—பொய்ய தாகிய வனேகபாவனையினைப் பொருந்தல்புன் பிறப்பாகு—மைய மின்றிய வேகபாவனையினி லழுந்துதல் பவந்தீர்தல்." மற்றும் வருவனவற்றாற் காண்க.

பழுத்தா லொழித்திடென்றதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். (284) "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்- சார்தரா சார்தரு நோய்." எ-ம். சிவதருமோத்தரம். (285) "நீங்கி னரிந்த வுண்மை நிலையினை நெஞ்சந் தன்னிற்—றாங்குக சகளந் தன்னைச் சங்கரன் றன்னை யுன்னி—நீங்குக சகளந் தன்னை முன்னையி னிலையி னீடித்-தூங்குக திரியிற் பின்னுஞ் சகளமா தரிக்கை சூழ்ந்தே." எ-ம். திருக்களிற்றுப்படியார். (286) "பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து—பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - பற்றதனிற்—பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகு—மற்றமிது சொன்னே னறி." அன்றியும், (287) "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றமையாற் — சார்புணர்வு தானே தியானமுமாஞ் – சார்பு — கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்—படவருவ தில்லைவினைப் பற்று." எ-ம். மற்றும்வருவனவற்றாற்காண்க. (எஉ)

ஏகபாவனை யிதுவென்று மேற்கூறுகின்றார்.

பாராதி யெட்டுமப் பாலுமப் பாலுமா
யோர்சோதி யேநின்ற துந்தீபற
உன்னுவே றில்லையென் றுந்தீபற. (73)

எ - து. பிருதிவியாதி அட்டமூர்த்தமும் அவற்றினுக்குப் பரமாகியுள்ளனவும் பின்னும் வாக்கு மனத்திற்கு எட்டுவனவும்

285. சமாதியை நீங்கினவர்கள் சகுண சிவத்தியானஞ் செய்க, அதுவிடிற் சமாதிபுரிக, அது விடிற் சகளத்தியானமே செய்க.

எட்டாதனவுமாய் விரிந்துநிற்பது ஒருசோதியே வேறொரு பொருளும் இல்லையென்று பாவனை பண்ணுவாய். எ - று.

இ-ம். திருமந்திரம். (288) "தானே கடன்மலை யாதியுமாய் நிற்குந்—தானே திசையொடு தேவருமாய் நிற்குந்—தானே யுடலுயிர் தத்துவமாய் நிற்குந்—தானே யுலகிற் றலைவனு மாமே." அன்றியும், (289) "எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி—யெங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்ட—மெங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்குந் — தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டே." எ-ம். திருக்கடைக்காப்பு. (290) "பட்டி சைந்த வல்குலாள் பாவை யாளோர் பாகமா—வொட்டி சைந்த தன்றியு முச்சியாளொருத்தியாக்—கொட்டி சைந்த வாடலாய் கூட லால வாயிலா—யெட்டி சைந்த மூர்த்தியா யிருந்த வாறி தென்னையே." அன்றியும், (291) "அரிய காட்சிய ராய்த்தம தங்கைசே—ரெரிய ரேறுகந் தேறுவர் கண்டமுங்—கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்—பெரிய ராரறி வாரவர் பெற்றியே." எ-ம். தேவாரம். (292) "அருந்தவர்க டொழுதேத்து மப்பன் றன்னை யமரர்கடம் பெருமானை யரனை மூவா—மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் றன்னை மறிகடலுங் குலவரையு மண்ணும் விண்ணுந்—திருந்தொளிய தாரகையுந் திசைகளெட்டுந் திரிசுடர்க ளோரிரண்டும் பிறவு மாய—பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே." அன்றியும், (293) "மாலாகி நான்முகனாய் மாபூதமாய் மருக்கமா யருக்கமாய் மகிழ்வு மாகிப்—பாலாகி யெண்டிசைக்கு மெல்லை யாகிப் பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப்—பூலோக புவலோக சுவலோகமாய்ப் பூதங்க ளாய்ப்புராணன் றானே யாகி—யேலா தனவெல்லா மேல்விப் பானா யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்ற வாறே." எ-ம். திருப்பாட்டு. (294) "ஊனா யுயி ரானா யுட லானா யுல கானாய்—வானாய்நில னானாய்கட லானாய் மலை யானாய்—தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூ ரருட் டுறையு—ளானாயுனக் காளாயினி யல்லேனெனலாமே." அன்றியும், (295) "கார்க்குன்றமழை யாய்ப்பொழி வானைக் கலைக்கெலாம்பொரு ளாயுடன் கூடிப் — பார்க்கின் றவுயிர்க் குப்பரிந் தானைப் பகலுங்கங்குலு மாகிநின் றானை — யோர்க்கின்றசெவி யைச்சுவை தன்னை யுணருநாவினைக் காண்கின்ற கண்ணை—யார்க்கின்றகட லைமலை தன்னை யாரூரானைம றக்கலு மாமே." எ-ம். திருவாசகம். (296) "நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன்—புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா—னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொரு

வனுமே—பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ." அன்றியும், (297) "வேதமும் வேள்வியு மாயி ஞர்க்கு மெய்மையும் பொய்மையு மாயி ஞர்க்குச்—சோதியு மாயிரு ளாயி ஞர்க்குத் துன்பமு மாயின்ப மாயி ஞர்க்குப்—பாதியு மாய்முற்று மாயி ஞர்க்குப் பந்தமு மாய்வீடு மாயி ஞருக்—காதியு மந்தமு மாயி ஞருக் காடப்பொற் சுண்ணமி டித்து நாமே." எ - ம். பொன்வண்ணத் தந்தாதி. (298) "அலையார் புனலனன் ஞாயி றவனி மதியம்விண்கா—ரூலையா வுயிருடம் பாகிய சோதியைத் தொக்குமிஞே—தலையாற் சுமந்துந் தடித்துங் கொடித்தே ரரக்கனென்னே—கலையா னொருவிரற் ருங்கநில் லாவிட்ட காரணமே." எ - ம். திருப்புகழ். (299) "அதல விதலமுத லந்தத்த லங்களென வவனி யெனவமரரண்டத்த கண்டமென வகில சலதியென வெண்டிக்கில் விண்டுவென வங்கிபானு—அமுத கதிர்களென வந்தத்து மந்த்ரமென வறையு மறையெனவ ருந்தத்து வங்களென வனுவி லணுவெனநி றைந்திட்டு நின்றதொர்ப ரப்ரகாசம்." எ - ம். திருவாய்மொழி. (300) "ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி—யாகியைந்து பூதமா யிரண்டு சுடரா யருவாகி—நாகமேறி நடுக்கடலுட் டுயின்ற நாரா யணனேயுன்—னாகமுற்று மகத்தடக்கி யாவி யல்லன் மாய்த்ததே." அன்றியும், (301) "துன்பமு மின்பமு மாகிய செய்வினை யாயுல கங்களுமா—யின்பமில் வெந்நர காகி யினியநல் வான்சுவர்க் கங்களுமாய்—மன்பல் லுயிர்களு மாகிப் பலபல மாயம யக்குகளா—யின்புறு மிவ்வினை யாட்டுடை யானைப் பெற்றேது மல்லலிலனே." எ - ம். தத்துவராயர். (302) "மாற்றங் களுமன னும்வினை யாவையு மற்றந்தவான்—காற்றங்கி நீர்நில முற்று மவற்றுட் கலந்துநின்ற—நாற்றஞ் சுவையொளி யூறோசையுநண் ணு மிவ்வுலகிற்—றோற்றங் களுஞ்சொரு பானந்த நாதர் சுடர்வடிவே." எ - ம். தேவிகாலோத்தரம். (303) "ஆனநிலை யாவுடைய பூதங்க ளனைத்துநா—னேனையவை யாவையுள வவையு நான் றாலநுண்மை—யானவெவை யவையுமலே னெனையறியி லறிவோர்க்கு—ஞானமொன்று மென்னுருவ நானேயெவ் வுயிர்க் குறவும்." அன்றியும், (304) "ஒன்றுடனுந் தோய்வில்லா னொத் தார்மிக் காரில்லா னுலக மில்லா—னின்றநினை வுக்கெட்டா னித் தன்கா ணப்படா னெஞ்சு ணிற்பான்—பொன்றுபிறப் பிலிமுதலா மறிவினிட்க ளன்பழையோன் பொருள்க ளில்லோ—னென்று நினைந்தடிக்கடியும் பிரமமென நோக்குதலே யியல்ப தாமே." எ-ம். சிவதருமோத்தரம். (305) "சராசரத் தமல னீங்காத் தன்மையனுத லாலே—சராசர மமலன் மேனி யெனவுணர் தக்கோர் தாமுஞ்—சரா சர வுயிர்க்குத் தாயாஞ் சங்கர னுலகஞ் சார்ந்து—சராசர மொடுங்

கும் போது தற்பரன் ருனுஞ் சார்வார்.'' எ-ம். பகவத்கீதை. (306) "மண்ணு நீருமெரி தீயும் வாயுவுமவ் வானிதேனேடுமனம் புந்தியு—மெண்ணு நீர்மைகளின் யானெ னும்பதமு மென்னு மெட்டுமிவை யன்றியே—பண்ணு நீர்மைகளின் மேல தாயுலகில் யாவையுங்கொடு பரித்துடற்—கண்ணு நீடுயிரு மாகி யென்னுடைய மாயை நிற்பதுகை வேலினேய்.'' அன்றியும், (307) "யாவனொருவ னெனையெல்லா வுயிர்க ளிடையு மென்னிடையே—மேவவெல்லா வுயிர்களையும் வேரு காதே மெய்காண்பான்—றேவர் பகைமுன் செகுத்தோனே யவன்யா தேனுஞ் செய்திடினு—மாவவவனு கின்றேன்யா னதுநீ யேது மையுறேல்.'' எ.ம். பிரமகீதை. (308) "உலகம் யாவு முயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை—யலகி லறிவா லாய்ந்திடினு மாயா விடத்து மருத்த மிதே—திலக மாய மறைதணிந்து திகழ்த்தும் பொருளு மிதுவென்ற—னிலகுந் தன்மை யனுபவமு மிதிலோ ரைய முளதன்றால்.'' அன்றியும், (309) "அங்கிதலை வாய்விவித மானமறை பானு — திங்கள் விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு—தங்குமுயிர் தன்னிதய மேசகல முங்கா—லிங்கவனி சங்கர னிருக்கும்வடி வீதால்.'' எ-ம். ஞானவாசிட்டம். (310) "திக்குங் காலமு முதலிய வசத்துறு சிறுவடி வறத்தன்பர்—தொக்க வன்னவற் றன்மறை யாமலே சூக்கமாய் ரொய்தாகி—மிக்க சோதியா யனைத்துமா யொன்றுமாய் மெய்யறி வொன்றேயாந்—தக்க விந்நிலை நில்லென வுரைத்தனன் றலைமையா முபதேசம்.'' அன்றியும், (311) "கிஞ்சிலாகி விரிந்துசகத் திரளாய்க் கிளைத்த விவையெல்லாம்—விஞ்சு பிரம மேயறிவு பிரம மிம்மே தினிபிரமம்—பஞ்ச பூதம் பிரம நாம் பிரம நமது பகைபிரமந்-தஞ்ச நட்புக் கிளைபிரமஞ் சங்க ராதி நிச்சயமே.'' எ-ம். திருவுந்தியார். (312) "எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்—விட்டா ருலகமென் றுந்தீபற—வீடேவீ டாகுமென் றுந்தீபற.'' அன்றியும், (313) "சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங் — கல்லனு யானுனென் றுந்தீபற—வம்பிகை பாகனென் றுந்தீபற.'' எ-ம். திருக்களிற்றுப்படியார். (314) "ஈருகி யங்கே முதலொன்று யீங்கிரண்டாய்—மாருத வெண்வகையாய் மற்றிவற்றின் - வேறு—யுடனு யிருக்குமுருவுடைமை யென்றுங்—கடனு யிருக்கின்றான் காண்.'' அன்றியும், (315) "அவனே யவனி முதலாயி னனு—மவனே யறிவாய்நின் றானு - மவனேகா—ணுணுகிப் பெண்ணு யலியாகி நின்றானுங்—காணுமை நின்றானுங் கண்டு.'' எ-ம். சிவஞானசித்தியார். (316) "உலகமே யுருவ மாக யோனிக ளுறுப்ப தாக—விலகுபேரிச்சா ஞானக் கிரியையுட் கரண மாக—வலகிலா வுயிர்ப்பு லன்கட்

கறிவினை யாக்கி யைந்து—நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னுதன்.'' சிவஞானதீபம். (317) "அத்துவா வடிவாமெம் மிறை முடிதான் கலைக—ளாந்தாகுஞ் சாந்திமுத லானநான் குர மாம்—வித்தைமுதன் மூன்றிரண்டாம் ப்ரதிட்டாதி யுந்தி—வியன் பாத நிவிர்த்தியதா மிளிர்துவக்கக் கரங்கள்—வைத்தபுவ னங்கண் மயிர் மந்திரங்க ளெய்த்தோர்—வளர்திகழும் பதங்களுரு தசை யாகு மதித்த—தத்துவங்கள் சுக்கிலமோ டத்தினை மூளை—சத் திகடா நேத்திரமூ வைந்தாமித் தகையே.'' அன்றியும், (318) அனுக்கிரகஞ் சதாசிவன்று ளுதத்தா லுளத்தி, லருமறைப்புச் சிந்தையினில் விந்துவினுன் மகேசன்—றுனித்தமனத் துருத்தி ரன்ருன் மகாரத்தா லழிக்கும், துழாய்முடியோன் புத்தியி னின் றுகாரத்தா லளிக்கும்—பனிப்பதும னகாரத்தா லகங்கா ரம் பொருந்திப், படைத்திடுவ னோங்காரப் படிவமுமா மதனு— லனைத்துலகு மிலிங்கமய மாமெவையு மிதுவே,யாக்கியளித் தழித் துமறைத் தனுக்கிரகஞ் செயுமே.'' எ-ம். சிவானுபூதிவிளக்கம். (319) "எட்டுருவ மென்று மிறையுருவ மென்னுமது—சிட்டா மறையுஞ் சிவாகமமுஞ் செப்பியதே.'' அன்றியும், (320) "பத்துத் திசையும் பதினு லுலகும்விடத்-தத்திக் கரைபுரளுஞ் சாகரமே யல் லவோ.'' எ-ம். நெஞ்சுவிடுதூது. (321) "பாருந்திசையும் படரொளி யாலேநிறைந்தான்—றாருந் தலையுமிலாத் தோன்றலான்—வேராகி— வித்தாகி வித்தின் முளையாகி மேவு தனுச்—சத்தாதி பூதங்கடாகு கிச் - சுத்த—வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பா— லுறுபொருளாய் நின்ற வொருவன்.'' எ-ம். காசிகாண்டம். (322) "ஐம்பெரும் பூத மாகி யவற்றுறு குணங்க ளாகி—யைம்பொறியாகி யந்தக்கரணமா யறிவுமாகி—யைம்பெருங் கருமமாகி யனைத்தினுந் தோய்ந்துந் தோயா — வைம்பெருங் கடவுளாகு மாதிநின் னடிகள் போற்றி.'' அன்றியும், (323) 'உயிர்ப்பரு மறைக ளோவிவ் வுலகெலாஞ் செய்ய பொற்ருன்—பயிர்ப்பறு நில நின் சென்னி பரமவா காய மாகும்—வியப்புறு சுழிகொளுந்தி நடுவெளி யாகு மெய்யின்—மயிர்த்தொகை யனைத்து மெண்ணில் வான்றருக் குலங்க ளாமால்.'' எ-ம். பெரியபுராணம். (324) "ஆயி னும்பெரி யாரவ ரென்பது—மேய விவ்வியல் பேயன்றி விண் முதல்—பாய பூதங்கள் பல்லுயி ரண்டங்க—ளேயும் யாவு மிவர்வடி வென்றதாம்.'' எ-ம். திருவம்மானை. (325) "பார்த்தவிட மெல் லாம் பரமேகா ணம்மானை—பாராம லின்னாளும் பாழ்பட்டே னம் மானை.'' எ-ம். நெஞ்சொடுமகிழ்தல். (326) "மண்ணிறந்து நீரி றந்து வளியிறந்து தீயிறந்து—விண்ணிறந்து நின்றநிலே மேவி னையே நெஞ்சமே.'' அன்றியும், (327) "பார்த்தவிடந் தோறும்

பரந்துபரந் தெஞ்ஞான்றுங்—கோத்திருந்த பாழ்தனிலே குடியிருந்தாய் நெஞ்சமே.” எ-ம். மற்றும் வருவனவற்றாற்காண்க. (எ௩)

அட்டமூர்த்தமும் சிவமேயென்று வேதாதிகள் கூறினும் உலகின்கண் வரைந்து நீக்குவனவாகிய தீயனவற்றையும் அங்ஙனம் காணுதல் கூடுமோவென்பாரைப் பற்றி மேற்கூறுகின்றார்.

உதித்தச் சிவத்தோடேய்ந் துள்ளதேன் மாயை
யதற்கன் னியமென்னு ருந்தீபற
அதினன்கு தீதியா துந்தீபற. (74)

எ - து. ஜகத்காரணமாகிய மாயை நித்திய பூரணமாகிய சிவத்தினிடத்திலே நின்றுந் தோன்றி அதனையே கலந்து கொண்டிருத்தலால் அச்சிவத்திற்கு அம்மாயையை அன்னியமென்று சொல்லார் அறிவுடையோராதலின் மாயையினுண்டாகிய புவனகோடிகளின் ஒரொரு பதார்த்தங்களை இதுநன்று இதுதீதென்று கூறுதல் கூடாது அவையும் சிவமேயாதலின். எ - று.

அஃது எங்ஙனமெனின், மாயையைச் சிவத்திற்குப் பேதமென்றும் அபேதமென்றும் கூறுவார் உளராயினும் முத்திதசையில் அனைவர்க்கும் அபேதமென்பதே உண்மை. அஃது எப்படியென்னில், பேதமென்று காண்பார்க்கும் சுத்தசித்தாகிய வஸ்து பூரணனுகையால் வேறொருமாயை உண்டாயினும் அவனிடத்து நின்றுந்தோன்றி அவனையே கூடிநிற்பதல்லது அன்னியமாய்த் தோன்றுதற்கும் நிற்றற்கும் இடம் இன்மையாலும், உப்பளத்திற் கனலிற் பரிசனவேதியாதியிற் கூடிய திருணுதிகள் தத்தந்தன்மைகெட்டு அவற்றினது தன்மையாய் விளங்குதலின் மாயையும் சிவமேயாய் விளங்கா நிற்பதாதலின் அச்சிவத்தின் கண்ணே தோன்றுநிற்கிற ஓசையாதி விஷயங்களை இது நன்று இது தீதென்று பற்றுதல் விடுதல் கூடாது. கூடுமேல் பூரணநிஷ்டையும் கூடாது. இதுவன்றியும் ஒரொருகாலதேசங்களில் நிருமலபாவனை பற்றித் தீயனவற்றையும் நல்லனவெனக் காணநிற்கிற அபரிச்சின்ன நிஷ்டைகளும் கூடாது; காலதேசங்களும் அவைகளிற் காணப்படுகிற பொருளும் மாயையாதலின். இதுவன்றியும் நன்மை தீமைகளாய் விளங்காநிற்கும் புவனபோகங்கள் தம்மதீனமாகிய தனுகரணங்களை அடைவது ஒழிந்து நிரவ

யவனாகிய ஆத்மாவைப்பற்றாமையாலும், ஒருவன் தனக்கு அன்னியமாகப் பற்றிய சரீரத்தினும் இகழப்படும்பொருள் வேறின்மையாலும், ஒருவகைப் பொருளிலே பேதந் தோன்றுதல் சிவகற்பனையாதலினாலும் கற்பனாரகிதமாகிய பூரணநிஷ்டைக்கு அஃது இல்லையென்றதெனக்கொள்க.

மாயாப்பிரபஞ்சமெல்லாம் சிவத்திற்றோன்றி யொடுங்குதலின் அம்மாயையும் சிவத்திற்கு அன்னியமாகாதென்பதற்குப் பிரமாணம்: தேவிகாலோத்தரம். (328) "புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளு மில்லை— திறனுடை யுருவ மெல்லாந் தானாகித் தேக மின்றா—யறன்முறை யடங்கு ஞான யோகினா லறியப் பட்ட—விறன்மலி ஞானா னந்த மேன்மையால் விளங்கா நிற்கும்." அன்றியும், (329) "கன்மபல மேதுமில சுபாவமே காணுங்காற்—றொன்மையுல குயிரில்லை தோன்றுவதெ லாமசத்து—நன்மையினைத் தோற்றுவித்துப் பற்றிலதாய் நணுகரிய—தென்னவறிந் தா்னுலகு மிலதாகிச் சுத்தனுமாம்." எ - ம். பிரமகீதை. (330) "எப்பொருளு மாயையினா லெனச்சிலவ ரியம்புவர்கண்—மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை—யொப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகி—லப்பரமன் றன் பெருமைக் கதுநேரே யழிவன்றோ." அன்றியும், (331) "ஒழிந்த தொரு பொருளில்லை யுள்ளதெல்லா மவனேமுன்—கழிந்தபொருண் மேலும்வரக் கடவபொரு டானுமவன்—மொழிந்ததனி பலவிச்சை யவிச்சையெனு முற்றுமவ—னிழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய." எ-ம். ஞானவாசிட்டம். (332) "நானாவாம் பணதிகளுண் ணண்ணுகினு மொருமையே நண்ணுங் கற்போ—லானாத சகங்களையுள் ளடக்கினும்வேற் றுமைமேவா தறிவொன் றேயாங்—கானாப்பங் கயமெல்லாம் வேறன்றிக் கன்மயமாங் கணக்கே போல—வானார்சிற் சொரூபத்தைப் பிரியாத தன்மயமாம் வைய மெல்லாம்." அன்றியும், (333) "நனிமெய்யாய் மாயையில தென்றிவ் வாறு நாவோய் ஞானியாய் ஞானம் பெற்றாற்—றனிசெயுமீ துளமாயை யறிதியன்றே தூகனிலா நற்போதந் தோன்றுமட்டும்—பனிமாயை யில்லையென வென்சொல் லாலே பழுதில்லா வறுதியுறப் பற்றி நிற்பாய்— புனிதமுறு பிரமமே யெல்லா மென்று புந்தியிற்கண் டோர்முத்தி பொருந்தி னோரே." எ - ம். சிவானுபூதிவிளக்கம். (334) "பதிபசு பாசப் பரப்பறிந்து பார்க்கப் — பதிபசு பாசப் பரப்பா யிருந்ததே." அன்றியும், (335) "பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்த்தனவிற்—பேய்த்தேர்போ லில்லையாய்ப் பேறிவே கண்டனமே." எ-ம். திரு

வம்மானே." (336) "மெய்யான தொன்றுமே மெய்யான தம்மானே-மெய்யன்றி மற்றெல்லா மித்தைகா ணம்மானே." எ-ம். சிவானந்த மாலை. (337) "எங்குஞ் சிவமொழிய வில்லையவன் றன்னுணே—யங்கந் திரள்கருவி யாணவமாம் - பொங்குமிருண் — மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்—பொய்பொய்பொய் பொய் பொய்பொய் பொய்." எ-ம். காசிகாண்டம். (338) "கானலிடைத் தெண்ணீருங் கயிற்றினில்வா ளரவுமலை கடலிற் பட்ட—கூன் முதுகிப் பியிற்றோன்றும் வெள்ளியுமம் முதலுண்மை குறிக்கிற் றீரு மானவைபோ னினையறியிற் றோன்றுசக மனைத்துநில்லா தழியு மாற்றாற்—றேனவிழ்பூங் கடுக்கையணி செல்வனின தறைக ழற்றாள் சென்னி சேர்ப்பாம்." எ-ம். தத்துவராயர். (339) "உலகமாந் தோற்றம்போ யோரொளியாய் நேரே—யிலகினு மென் கண்ணி னிற்கட் - புலனொழித்துக்—கையாற் றடவினர்க்குக் காண்கின்ற வோவியங்கள்—பொய்யாய்ச் சுவரானாற் போல்." எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க.

பிரபஞ்சமெல்லாஞ் சிவமேயாதலின் இப் பிரபஞ்சத்தின் கண்ணே தோன்றிய பொருள்களில் யாதொன்றையும் இது நன்று இது தீதென்று பற்றுதல் விடுதல் கூடாதென்பதற்குப் பிரமாணம்: திருக்கடைக்காப்பு. (340) "குற்றநீ குணங்கணீ கூட லாலவாயிலாய்—சுற்றநீ பிரானுநீ தொடர்ந்தி லங்கு சோதிநீ—கற்ற நூற் கருத்துநீ யருத்த மின்ப மென்றிவை—முற்றுநீ புகழ்ந்து முன் னுரைப்ப தென்மு கம்மனே." எ - ம். திருவாசகம். (341) "கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ—தேறும்வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ—வேறோர் பரிசிங்கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கிற்—றேறும் வகையென் சிவலோகா திகைத்தாற் றேற்ற வேண்டாவோ." எ - ம். பொன் வண்ணத்தந்தாதி. (342) "தவனே யுலகுக்குத் தானே முதறான் படைத்தவெல்லாஞ் — சிவனே முழுதுமென் பார்சிவ லோகம் பெறுவர்செய்ய—வவனே யடல்விடை யூர்தி கடலிடை நஞ்சமுண்ட—பவனே யெனச்சொல்லு வாரும் பெறுவரிப் பாரிடமே." எ-ம். தத்துவராயர். (343) "நிகழ்கின்ற வெல்லாமு நின்மலமே யானு—லிகழ்கின்ற வேறுதா னேதோ - புகழ்வின்றி—நாடப் படா வெங்க ளையனார் சீர்பாதஞ்—சூடப் படாதார்தஞ் சொல்." அன்றியும், (344) "யாதொன்று நீயன்றி யில்லாத பின்பிங் கெவற்றை நன்று—தீதென்ப தெங்கள் சிவக்கனி யேசெய்ய வேண்டுவது—மாதொன் றியகின் றிருமேனி கொண்டிங்ஙன் வந்தவிந்தப்—போதொன் றியகழ லேவழு வாது புகழ்விப்பதே." எ - ம். பகவத்

கீதை. (345) "நன்றே ஞான வருமறையோ னன்னுயந்நா யிறைச்சிதனைத் — தின்றே யுழலு மவனியானை யாவென்றிந்த திறத்தெல்லா — மன்றே யென்னு தாமென்னு தறிவாய் நின்ற வெனையெங்கு—மொன்றேயாகக் காண்பானிவ் வுடம்போ டிருந்தே யுடம்பறுப்பான்." எ - ம். பிரமகீதை. (346) "போதமதாகித் தோன்றும் பொருளெலாஞ் சிவமேயாக—வேதமி லறிவாற் காண்பா னெவனவ னுண்மை கண்டான்—தீதிலாச் சிவமன்றென்று சிறிதொன்றைச் சிந்தை செய்வோன்—பேதமா மருளின் மேய பித்தனென் றறிய லாவான்." அன்றியும். (347) "சிவனிது வன்றே யென்று சிறிதொன்றைச் சிந்தை செய்யு—மவனறி வுடையோர் தம்பா லதமனென் றறியப் பட்டா — னுவமையொன் றில்லா வீசன் றனையிகழ்ந் தொழுகு வானும்—பவமதி லென்று மேவும் பசுவெனப் படுகின் றானும்." அன்றியும், (348) "தீதெனும் பொருள்க ணன்றெனும் பொருள்கள் செய்யலா வன செயப்படாத— வேதமா முடல மிந்தியம் பிராண னிசைமனம் புத்தியாங் காரந்—தீதுறு காமங் கோபமே முதலாந் தீயன சாந்தி தாந்திகளே—யாதியா நலங்க ளடையவுந் தானே யாகியே தோன்றுமெய் யருளால்." எ - ம். ஞானவாசிட்டம். (349) "மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில்—வானில்லை யகத்திலெங்கு நானன்றி மற்றொன் றில்லை—யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லை-தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதானந்த மென்றான்." அன்றியும், (350) "மேவ லுற்ற போகத்தில் விருப்பு வெறுப்பு மெனக்கில்லை—யாவ தெய்து மதுவருக யாதுபோகு மதுபோகப்—பாவ மிகுமிவ் வஞ்ஞானப் பகைவ னலே விவேகமெனு—மேவ மில்லாப் பொருளெல்லா மிழந்தே னுணர்வாலவைபெற்றேன்." எ - ம். மோகவதைப்பரணி. (351) "சத்தமாதிகளுமெலாந் தற்சொரூப மானபரி—சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய்." எ - ம். சிவானுபூதிவிளக்கம். (352) "வெறுப்பு விருப்பென்று வேறுரைத்தா லெந்தை — யுறுப்பிற் குறையாதோ வுணர்வுடையோர் சொல்லுவரோ." அன்றியும், (353) "வேண்டலும்வேண் டாமலுமாய் மேவு வினைப்பயனு—மாண்டகையோ டுற்ற வனுபூதி யானதே." அன்றியும், (354) "எல்லாஞ் சிவமென் றிருக்கு மொழியுமுறை—யல்லாமல் வேறு முண்டாமோ." எ - ம். திருவருட்பயன். (355) "உள்ளும் புறம்பு மொருதன்மைக் காட்சியருக்—கெள்ளுந் திறமேது மில்." எ - ம். நெஞ்சொடுமகிழ்தல். (356) "உள்ளும் புறம்பு முவட்டாத வானந்தக்—கள்ளருந்தி நின்ற களிப்பென்கொ னெஞ்சமே." எ - ம். அருட்பிரகாசம். (357) நெளியும் புழுவு மலமும் பொதியூ ழலுநிமல

—வொளியின் வடிவென வேவேத மோதுத லோர்ந்துமுண்மை —தெளியும் பரிசில ஞய்ச்சிவ மன்றிது வென்னவொன்றை— யெளியொன் றினைப்புகழ் வோனையு ஞானி யெனப்படுமே.'' எ-ம். மற்றும் வருவனவற்ருற் காண்க. (எச)

இந்நிஷ்டைக்கண் யான் பிறரென்னும் விகற்பங்களே தோன்றுமாயின் அவற்றினை நீக்க உபாயம் மேற்கூறுகின்ருர்.

தோன்றுமேல் யான்பிறர் தோன்றுஞ் சுகாதிக
டோன்ரும னில்லுயிர்க் குந்தீபற
சுதந்திர மின்மைதேர்ந் துந்தீபற. (75)

எ - து. இங்ஙனங்கூறிய நிஷ்டைக்கணின்றும் யான் பிற ரென்னும் விகற்பங்கள் தோன்றுமாயின் சுக துக்க ராகத்துவேஷ மென்னும் இருவகைத் துவந்துவங்களும் கூடவே தோன்ருநிற்கும். அவ்விகற்பங்கள் தோன்ருதபடி எல்லாவுயிர்கட்கும் சுதந்திர மின்மை தேர்ந்து உன்னையும் பிறரையும் காணுமலே நிற்பாய். எ - று.

தோன்ருமனில்லென்றமையால் அந்நிலை நிற்கவே சுகாதிக ளும் தோன்ருது பூரண நிஷ்டையும் கூடுமென்பதாயிற்று. அஃது எங்ஙனமென்னின், எல்லாச் சீவர்களுக்கும் தனுகரணங்களைக் கூடாதவிடத்து அறிவு உதியாமையால் அவர்கள் தாமே அவற் றினைக் கூடுகைக்குச் சத்தி இல்லாமையினுலும், அவைகள் உயிர் களைக் கூடாதவிடத்துப் பிரேரகம் இன்மையவாகிய சடமாதலா லும், தாமே கூடாதவற்றினைக் கூட்டி உயிர்க்கு அறிவை விளக்கு வான்சிவனே. நானும் பிறரும் சுதந்திரால்லமென்று ஒருவன் சுக துக்கங்கள் தோன்றின விடத்தெல்லாம் தன்னையும் பிறரையும் காணுமற் சிவனையே கண்டு நிற்கவே அச்சிவன்மீது இவனுக்குப் பிரியாப்பிரியங்கள் தோன்றுவது இன்மையால் பூரணநிஷ்டை கூடுமென்றதெனக் கொள்க.

இ-ம். தத்துவராயர். (358) "புகழ்ந்தேன் புகழல்ல சொல்லி யொன் ருகப் புவியினுள்ளோா—ரிகழ்ந்தேன் னேனையவ ரென் செய்கி லென்னினி யாவையுமாய்த் — திகழ்ந்தெங் கணுந்தன் செயலன்றி யின்மையைத் தேற்றிச்சிந்தை—நிகழ்ந்திங் கெனை யின்று நீங்காம னின்மல னின்றனனே.'' எ - ம். சிவப்பிரகாசம்.

(359) "மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங்—கருவிக ளுன்கு நீங்காக் கலாதிக ளேந்துங்கூடி—யொருபுல னுகருமிந்த வொழுங்கொழிந் துயிரு மொன்றைத்—தெரிவுறா தவணுழிந்தத் திரள்களுஞ் செயலி லாவே." அன்றியும், (360) "தனக்கென வறிவி லாதான் ருனிவை யறிந்து சாரான்—றனக்கென வறிவி லாத வாயிரு னறியா சாரத்—தனக்கென வறிவி லாதான் றத்துவ வன்ன ரூபன்—றனக்கென வறிவா னுலிச் சகலமு நுகருந் தானே." எ-ம். சிவநெறிப்பிரகாசம். (361) "தன்மைமுன்னிலை படர்க்கை மூன்றுவிதத் தாலே சாருமுயிர்க் கறிவிப்ப னிறைவனதிற் றன்மை — தொன்மையதா ஞானத்தைத் தடுத்திடுமாணவத்தைத் துறந்தெவையு முள்ளபடி தோற்றுவித்த லுளத்தே—நன்மையுடன் றீமையினை யவரவரா லறிய நல்குவது முன்னிலையா நரகசொர்க்க மாதிப் — பன்மையதாம் பரலோக பாவபுண்ணியத்தின் பலமதனை நூலினு னுணர்த்திடுகை படர்க்கை." எ-ம். சிவஞானதீபம். (362) "சத்தமுதல் விடயத்தைப் பகுத்தறிதலவித்தை தக்கதொழிற் படுத்திடுத லீசர்தொழின் ஞான—மொத்ததுசா தாக்கியமாஞ் சத்திநசை யுறவே யுருசிப்பித் திடுதல்சிவந் தற்செயல்பண் ணுவதாந்—தத்துவநா லொன்பதுவுஞ் சடமெனவிட் டகன்றே தானறிவா காமலறி யாமையுமா காம—லத்தனுணர்த் திடவுணரு மறிவுயிரென் றருளா லறிந்தெவையுமிறைசெயலென் றுன்செயல்விட் டகலே." எ-ம். உண்மைவிளக்கம். (363) "அக்கரங்கட் கெல்லா மகரவுயிர் நின்றாற்போன்-மிக்கவுயிர்க்குயிராய் மேவினு - மெக்கண்ணு—நில்லா விடத்துயிர்க்குநில்லா தறிவென்று—நல்லா கமமோது நாடு." எ-ம். திருவருட்பயன். (364) "ஊனறியா தொன்று முயிரறியா தொன்றுமிவை-தானறியா தாரறிவார் தாம்." எ-ம். சைவசமயநெறி. (365) "உண்டோ வதீதத் துணர்வுதிக்கை யாமுளத்திற்—கொண்டகுறிப் பின்றிவிளங் கும்." எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (எ௫)

எல்லாத் துவந்துவமும் உடலைப்பற்றிவருதலால் அதனதுகாவலைக் கைவிடல் வேண்டுமென்று மேற்கூறுகின்றார்.

படைப்பாதிக் கீச னதிகாரி பற்று
துடற்காவ லீவிடுத் துந்தீபற
ஓவா தவனைநோக் குந்தீபற. (76)

எ - து. அனைத்துயிர்க்கும் இத்தசைக்கண்ணுண்டாகிய சராசர தேகங்களும், அவற்றினைப்பற்றி வருகிற சுக துக்க போகமும்

அத்தேகங்களினது நீக்கமும், உணர்வைப்பற்றி வருகிற மயக்கமும் தெளிவும், ஊழின் வலித்தன்மை யாதிகளாலே கூட்டிச் சிவனே ஐந்தொழில்களையும் பண்ணுகிற்கிற அதிகாரியாதலின் யாதொன்றன்கண்ணும் யான் பிறர் அதிகாரி யென்குதலையும், யான் இந்தவுடலைக் காக்கின்றே னென்னுமபிமானத்தையும், பற்றறக் கைவிட்டுச் சுதந்திரனாகிய பரனையே ஒழியாது நோக்குவாய். எ - று.

உடற்காவல் கைவிடென்றமையால், அதனைக் கைவிடவே அதன்கட் பற்றிவரு மிருவகைத் துவந்துவமும் கூடவே நீங்குமென்பதாயிற்று.

இ-ம். திருமந்திரம். (366) "எவ்விடத் துந்தம் பணியின்மை கண்டுளோ—ரெவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே—யவ்விடத் தைங்கரு மத்தா லறிதலா—லுவ்விடத் தோருக்கோ ருபாயமில்லையே." எ-ம். தேவாரம். (367) "நன்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்—றென்க டம்பைத் திருக்காக் கோயிலான்—றன்கடனடி யேனையுந் தாங்குத—லென்க டன்பணி செய்து கிடப்பதே." எ-ம். திருப்பாட்டு. (368) "தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்—வானைக் காவல் கொண்டு நின்றூர றியா நெறியானே—யானைக் காவி லரனே பரனே யண்ணு மலையானே—யூனைக் காவல் கைவிட் டென்னை யுகப்பா ருணர்வாரே." எ-ம். திருவாசகம். (369) "நாயிற் கடையா நாயேனை நயந்து நீயே யாட் கொண்டாய்—மாயப் பிறவி யுன்வசமே வைத்திட்டிருக்கு மதுவன்றி—யாயக் கடவே னானேதா னென்ன தோவிங் கதிகாரங்—காயத் திடுவா யுன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே." எ-ம். குகைநமசிவாயர்பாடல். (370) "ஐயா மரப் பாவை யாடுவதுஞ் சூத்திரிதன்—கைவாசி யோபாவை கற்றதோ-வெய்யவினை — யென்னிச்சை யோவருணை யீசா படைத்தளிக்கு—முன்னிச்சை யன்றோ வுரை." அன்றியும், (371) "நீயே படைத்தவுட னீகாப்பை காவென்ன—நாயேனுக் கென்பொறுப்பு நாயகனே - யாயுமறைச்—சீர்கேட்குஞ் சோணகிரிச் சீமானே வைத்தவனை—நீர்கேட்கு மோமரங்க ணின்று." எ-ம். தேவிகாலோத்தரம். (372) "கடைபடு மூலகிய றன்னைக் காண்குறீஇ—யுடையவ ரெனையிலை யானுடை யாரிலை—யடையவு மெனக்கிலை யானு மன்னதே—நண்டயிது நிலையெனிற் றமிய னணரோ." எ - ம். சிவபோகசாரம். (373) "அன்றே யனாதி யமைத்தபடி யல்லாதொன்—றின்றே புதிதா யிசையுமோ - வென்றுஞ்—சலியா

தியற்றுவான் றன்னையே நோக்கி—மெலியா திருந்து விடு.'' எ-ம். உப்பை. (374) "கண்ணுழையாக் காட்டிற் கடுமுண் மரத்துக்கு— முண்ணும் படிதண்ணீ ரூட்டுவா - ரெண்ணு—நமக்கும் படியளப் பார் நாரியோர் பாகர்—தமக்குத் தொழிலேது தான்.'' உறுவை. (375) " சண்டப்பைக் குள்ளுயிர்தன் றுயருந்தத் தான ருந்து— மண்டத் துயிர்பிழைப்ப தாச்சரிய - மண்டி—யலைகின்ற வன்னு யரனிடத்தி லுண்மை—நிலைகண்டு நீயறிந்து நில்.'' எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (எசு)

ஊழின் வழியால் வரும் இன்பதுன்பங்களை யாவரொருவ ரேனும் அனுபவியாது நீங்குதல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

இரும்பூ ரணனின் மலன்வினை யெல்லா
மொருங்குணர்ந் தூட்டுமே லுந்தீபற
உண்ணு தொழிப்பதா ருந்தீபற. (77)

எ - து. மகத்துவமாகிய பூரணத்தையும் நிருமலனுகையாற் சுதந்திரத்தையும் முழுதுணர்தலையும் உடைய பரமேசுவரன் பல்லுயிர்களது வினைகளையும் அதற்கேற்ற தனுவாதிகளையும் ஏக காலத்து உணர்ந்து ஊட்டுமாயின், அவ்வினைப் பயன்களை அனு பவியாது நீங்குவது யாவரால் ஆவது. எ - று.

அஃது எங்ஙனமெனில், அனைத்துயிர்க்கும் தத்தம் உபாய தந்திரத்தால் துன்பத்தை நீங்கி இன்பத்தைக் கூடவேண்டுமென் பது துணிவாதலின் பகவான் உணர்ந்து கூட்டாநிற்கும் இன்ப துன்பங்களை ஒருவன் பற்றுதல் விடுதல் செய்வான் நினைத்தல் பழுது. அங்ஙனமன்று; எல்லாவினைகளும் சிவனே கூட்டுகின் றனே அவனை அறியாமல் வரும் இன்ப துன்பங்களை நீங்க வேண்டாவோவெனில்; அவ்வஸ்துவுக்குக் கர்த்திருத்துவமும், சர்வஞ்ஞத்துவமும், உண்டென்பது கூடாது. அங்ஙனம் உண் டாயினும் அவ்வஸ்து அறிந்து கூட்டாநிற்கும் இன்பத்தைக் கைப் பற்றித் துன்பத்தை உபாயத்தால் நீங்கிவிடுவேனெனில், அவ் வஸ்து பூரணனுகையால் நீங்குதற்கு இடமே இல்லை; அங்ஙனமா யினும், அவ்வஸ்துவையன்றி எழுவகைத் தோற்றத்தும் ஓரொரு சீவர்களால் வரும் இடையூறுகளை என்னுபாயத்தினுலே நீக்கிக் கொள்வேனெனில், எல்லாவுயிர்களையும் கன்மத்தளவில் இயக்கும் சுதந்திரன் சிவனேயாதலின் அவனையன்றி உனக்கும் பிறர்க்கும்

இயங்குதல் கூடாது. இவ்வாறு சுதந்திர ஹீனராகிய உன்னையும் பிறரையும் சுதந்திரராகப் பாவித்தல் சிவதூஷணமாதலின் ஜனன மரணங்களை ஒருக்காலும் நீங்குதல் கூடாது. ஆதலால், யாதோரிடத்தும் சிவத்தையேகண்டு யான் பிறரென்று காண்குதலை ஒழிந்து யாதொன்று வரினும் எடுத்த வுடற்கு அடைத்தபொறியளவே வந்து முடியாநிற்குமென்று தமது மனோவாக்குக் காயங்கள் அசையாமல் அடங்கி நிற்பர் மெய்யுணர்வுடையோரென்றதெனக்கொள்க.

இ-ம். திருமந்திரம். (376) "செத்திடுவன் சீவிடுவன் செஞ்சாந் தணிகிடுவன்—மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிடுவன்—வித்தகனந்தி விதிவழி யல்லது—தத்துவ ஞானிக டன்மை குன்றாரே." எ-ம். குகைநமசிவாயர். (377) "பேரா யிரமுடைய பெம்மானைச் சோணகிரி—யாரா வமுதை யறியாமல் - வாராது—தீது நலமுந் தெரியுங்கா னெஞ்சமே—யேதுமவ னென்றே யிரு." எ-ம். சிவஞானதீபம். (378) "சித்தமுறு நினைவுரைக டொழில்பொய் வாய்மை தீமைநலம் விருப்புவெறுப் பின்ப துன்பம்—வைத்தபுசிப் பிகழ்ச்சிபுகழ் தருமந் தான மடிமுயற்சி பேறிழவு மற்று மெல்லா—மத்தனறிந் தளவிலவ ரவர்க்கு நாளு மருங்கனவு நனவினுநின் றளிப்ப தோரார்—தத்தமறி வானுகருங் கருத்த ராகித் தடுமாறியுளமெலிந்து தளர்வ ரந்தோ." அன்றியும், (379) "உடலிலிருவினையுதவு மிதமகிதப் பயனு ளவாகு மின்பதுன்ப முணவொழியா துயிர்க்கு—நடலைமரு ளறிவினுட னுமருந்தி லதுவே நமன்றூத ரருத்துவதா நணுகிடுமேல் வினையுஞ்—சடமுடலம் வினைநுகரா தறிந்துயிர்தா னருந்தா தலைவனவ னவளதுவா நிலைமையினு லுயிர்கட்—கிடமுடனின் றருத்துவனென் றுணர்ந்தருளாலருந்தி லிறைபணியா மெதிர்வினையு மெரிசேர்வித் தாமே." எ-ம். திருப்பனுவல். (380) "ஈன னேனுடற் கின்பதுன் பங்கணீ—ஞான பூரண நல்கவு நானுனித்—தானி னைப்பதென் னேசென்னித் தண்கிரி—வானு ளோர்தொழு மார்க்கண்ட லிங்கமே." அன்றியும், (381) "இன்ப துன்ப மெனக்குநீ நல்கவு—மன்ப கன்றினி யல்லும் பகலுநா—னுன்பி ரதாப முணருத லோவினேன்—மன்ப ராபர மார்க்கண்ட லிங்கமே." எ-ம். மற்றும் வருவன வற்றுற் காண்க. (எஎ)

யான் பிறனென்னும் பாவனைநீங்கும் அவதி கூறுகின்றார்.

உறும்பொழு தவ்வி டொருதன் னுழப்பா
னுறும்பிறர் யானென்பொ யுந்தீபற
அலதொன் றினுமாறு துந்தீபற. (78)

எ - து. ஒருவனுக்கு முத்தியடையுங் காலையில் தன்னிடத் துண்டாகிய யான் பிறனென்னும் பொய்ப்பாவனை முயற்சியால் நீங்கா நிற்கும்: அஃதன்றி மற்றொன்றனாலும் அப்பாவனை நீங்கிச் சிவபாவனை தோன்றாது. எ - று.

அஃது எங்ஙனமெனில், ஈசுவரன் முழுதொருங் குணர்ந் தோனாதலின் யாவரொருவர் முத்தியடையுங்காலம் அவனான் மதிக் கப்படும். அங்ஙனம் அவன் நியமித்த காலத்தன்றி ஒருவர்க் கும் இடையே யானெனதென்னும் பாவனை நீங்கி முத்திகூடுதல் கூடுமோவெனில், கூடாது. ஆயின் இவ்வுபாயநிஷ்டை கூறியது யார்க்கெனின், நிருமலனாகிய பகவான் எல்லாவுயிர்களது பருவ மும் ஒருங்கே நியமித்து அதற்கு ஏற்ப வேதாதி நூல்களும் அன்றே கூறியதாதலின் முத்தியடையும் பருவமுடையோர்க்கு அவரது மனத்தின்கண்ணே பொய்மை நீங்கி மெய்மை கூடுவதா கிய விழைவு தோன்றுதலின் அன்னோர்க்கு இத்திறநூல்கள் சம்மதமாய் இவைகளிற் கூறியபடியே முயற்சி உண்டாகா நிற்கும். இஃது இன்னும் பிறத்தற்கு உரியோர்க்கு யான் பிறரென்னும் பொய்ப்பாவனை நீங்குதற்குரிய முயற்சி உண்டாகாமையால் பிறப்பு நீங்குவது இல்லையாதலின் முத்திக்கு யான் பிறரென்னும் பாவனை யைக் கெடுப்பதாகிய முயற்சியே நிமித்தமெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: பட்டணத்துப்பிள்ளையார்பாடல். (382) "உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ—கழப்பின் வாராக் கையறவுளவோ." அன்றியும், (383) "கிளையார் மெலியார் நிறைய ழியார் வாளா- புனைவார்க்குங் கொன்றை பொதுவோ - வனைவீரு —மெச்சியே காண வியன்றில்லை யானருளென்—பிச்சியே நாளைப் பெறும்." எ-ம். குகைநமசிவாயதேவர்பாடல். (384) "சும்மா கிடைக்குமோ சோறு சலன்பாத—மம்மால் விரிஞ்ச னறிகிலார்- நம்மா — விருந்துகதை சொன்னக்கா லென்னுகு நெஞ்சே — பொருந்த நினையாத போது." எ-ம். தத்துவராயர் பாடல். (385) "ஒளியார் வளைகலை நாணிழ வாருரு வுந்திரியார்—தெளியாத பித் தென்று செப்ப விரார்நின்று தேங்கக்கண்ணீர்—குளியா ரினிய கொடியவென் னூர்குர வன்சொரூப—னளியா ரலங்க லெளிதோ புனைய வரிவையர்க்கே." அன்றியும், (386) "தொழிலான துன் பணியாத் தோத்திரஞ்செய் தோவா—தழலாகி னியஞ்ச லென்பா-

382. கழப்பு — சோம்பல். கையறவு—துன்பம். 383. என் பிச்சி—என் மகளாகிய பித்தேறிய பெண்.

யெழிலார்—நிருபா திகனே நினையவுநான் மாட்டேன்—சொரூபா வென் செய்குவேன் சொல்.'' எ-ம். பிரமகீதை. (387) "திரமாம ருத்தத்தி னன்மைந்த ரானுந் தீராத வற்றின்றி யாகத்தி னலே—யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா லுற்பன்ன மாம்விச்சை யாநிச்சயத்தாற்—பரமான வஞ்ஞான வந்தத்தி லேயப் படிஞான வுபதேச மொன்றாலு மேயிப்—புரமாமு டம்புக்கு ளேயந்த முத்திப் பொருள்கண்டு வீடெய்து வாரிப்பு விக்கே.'' அன்றியும், (388) "உலத்த லின்றியொழி வற்றபொரு ளுண்மை யதுவாஞ்—சலித்த லின்றிய தவத்தினர் தங்க ளெதிரே—திலத்தி லெண்ணெயா ணிக்கன றதிக்க ணிகழ்நெய்—நிலத்தி னீரென நிகழ்ந்துவெளி யாகி நிலையாம்.'' எ-ம். ஞானவாசிட்டம். (389) "இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதி லுண்டாம்—பனிச்சுடர்வெண் ணித்திலங்க ளுத்தமமா மூங்கிலலாற் படுவ துண்டோ-செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திராய்த் தெளிந்தோராகி—யனித்தமறு முத்தராய் ஞானிகளாங் குணமெல்லா மவரைச் சாரும்.'' அன்றியும், (390) "சனன மஞ்சினர்க் கவருடை முயற்சியே சாணுந்—தினமு மிங்கிவனு னெனுஞ் சிறுமைதான் சிதையி—லனக மாயுல கெங்குமாம் விசாலமுண் டாகு—மனனு றத்தன துயர்ச்சிதான் காண்புற வருமால்.'' எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (எஅ)

இப்பாவனு நிஷ்டையினது சிறப்பும் இதனால் வரும்பயனும் மேற்கூறுகின்றார்.

இப்பாவ னுநிட்டை மாயோக மீசற்கீ
தொப்பின்மா பூசையு முந்தீபற
உண்மையைக் கூட்டுமென் றுந்தீபற. (79)

எ - து. இங்ஙனங் கூறிய பாவனு நிஷ்டை மகாயோக மென்று கூறப்படுவது. இஃதே அகண்டாகார சுத்தசைதன்னிய சிவத்தை அர்ச்சித்தது. இந்நிலை கைவரவே உண்மை நிஷ்டையும் எளிதிற் கிடைக்கும். எ - று.

இந்நிஷ்டையே மகாயோகமென்பதற்குப் பிரமாணம்: திருப்புகழ். (391) "ஐந்து பூதமு மாறு சமயமு மந்த்ர வேதபு ராண கலைகளு மைம்ப தோர்வித மான லிபிகளும் வெகுரூப, வண்ட ராதிச ராச ரமுமுயர் புண்ட ரீகனு மேக நிறவனு மந்தி போலுரு வானு நிலவொடு வெயில்காலுஞ்—சந்த்ர சூரியர் தாமு மசபையும்

விந்து நாதமு மேக வடிவம தன்சொ ரூபம தாகி நிகழ்வது சிவ யோகம், தங்க ளாணவ மாயை கருமம லங்கள் போயுப தேச பர குரு சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ.'' எ-ம். ஞானவாசிட்டம். (392) "பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினேங் கடிகை பூசிக்கி—லிராச சூய மிலக்கநிக ரிவ்வா றொருநா ளருச் சிக்கி—லாசி லாத்த பரவொளியி லமர லாகு மிதுதானே—யேசில் பரம யோகமிது தானே. பரம கிரியையுமே.'' எ-ம். அமுதசாரம். (393) "யோகத் தபாவமெனும் யோகமது கைகூடி—னேகப் பொருளதனு னெய்தியிடு - மேக—மதுவா மிதுவன்றெ னுவ கண்ட மான—வதுவாகை மாயோக மாம்.'' எ-ம். மற்றும் வருவன வற்றுற் காண்க.

இந்நிஷ்டையே சிவபூசையுமென்பதற்குப் பிரமாணம்: பிரம கீதை. (394) "எப்பொருள் களுந்தா னுகி யிலங்கிடு மறிவா மீச—னப்படி விளங்கு கின்ற தறிதலே யவன் றனக்கு—மெய்ப்படு பூசை வேறோர் செயலினு லன்று மெய்யே—யிப்படி ஞானந் தன்னு லிறைஞ்சிடப் படுவா னீசன்.'' அன்றியும், (395) "ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடயமிந்தியமாய்த்—தானுமாகித் தனைத்தன்னுற் றுனே நுகருந் தன்மையது—வூன மாகு ஞாதாதி யொழிந்தே யுள்ள வறிவதனுற்—றுனே யாகக் கண்டிடுதல் சத்தா யுள்ள பூசையதே.'' எ-ம். ஞானவாசிட்டம். (396) "தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களில்த் தெய்வ முண்டோ—பாகமறப் பணதியற வடிமுடிவற் றுளவுணர்வே பரம போத—மாகலினு லதுதெய்வ மருச்சித்தற் குரியதாகு மறிவி லாத—மூக ருக்கு வடிவுமுத லருச்சனையே யியல்பென்று மொழியு மன்றே.'' அன்றியும், (397) "அறிவுசம பாவனைசந் தோடமெனு மலர்களா லந்தத் தேவாம்—பிறிவரிய வாத்துமதத் துவத்தையருச் சிப்பதே பெரிய பூசை—குறிவடிவிற் பூசனைபூ சனையல்ல வகண்டமெனக் கூறுந் தெய்வ—நெறிகொள்புறத் தொழில்களா னேராதிங் கத னுலே நிறையு மின்பம்.'' எ-ம். போதாமிர்தம். (398) "ஓது பேதம் பேய்த்தேறொன் றுணர்த லதுவொண் புனலாகுங்—காத லின்ப மிடர்கனவென் றிடலே கருது புகை யொளிதான்—வாதங் கழிய மறித்துணர்தன் மலர்பூ ணுடை மகிழ்சார்த—மேத மின்றி யிருந் திடுத லிறைவற் கெலேயில் பூசையதே.'' எ-ம். சிவானந்தமாலே. (399) "எங்குஞ் சிவாலயமா மெங்குஞ் சிவமாகு—மெங்குஞ் சிவ னடிமை யெங்குமாய்ப் - பங்கறவே—நிற்றல் சிவபூசை நின்றநிலே யாய்நிறைவிற்—பற்றொழிதல் பூசா பலம்.'' எ-ம். மற்றும் வருவன வற்றுற் காண்க.

பாராதியென்னுஞ் செய்யுட்டொட்டு இச்செய்யுள் காறும் பூரண பாவனைநிஷ்டை கூறியதெனக் கொள்க. (எக)

இப்பூரணபாவனை கூடாதார்க்கு மேலும் ஒரு குறிப்புப் பாவனை கூறுகின்றார்.

கொள்ளரி தேலக் குறியெம திவ்வுரு
வுள்ளத்தி னுள்ளேவைத் துந்தீபற
ஓங்கார முச்சரி யுந்தீபற. (80)

எ - து. முற்கூறிய பூரணபாவனைக்கண் மனம் நில்லாவிடத்து உன்னையாளும் பொருட்டாக நாம் கொண்டருளிய இக்குரு வடிவத்தை இதயத்தினுள்ளே தியானஞ்செய்து அவ்விதயத்தினுள்ளே பிரணவாக்ஷரத்தை யுச்சரி. எ - று.

பூரணனாகிய சிவன் ஒருவனுக்கு அனுக்கிரகஞ் செய்யுமிடத்துக்கொள்ளுந் திருமேனி குருவடிவேயாதலானும், மற்றொரு குறிப்புவடிவங்களும் அவனருளாற் பெறப்படுவ வாதலாலும், இங்ஙனங் குருவடிவே குறிப்புருவமாகக் கூறினாரெனக் கொள்க.

குருத்தியானத்திற்குப் பிரமாணம்: திருமந்திரம். (400) "குருவே சிவமெனக் கூறினன் நந்தி—குருவே சிவமென் பதுகுறித்தோரார்-குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்கும்-குருவே யுரையுணர் வற்றதோர் கோவே." அன்றியும், (401) "கருட னுருவங் கருதுமளவிற்—பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற் — குருவினுருவங் குறிக்கொண்டு நோக்கத்—திரிமலந் தீர்ந்து சிவனவனாமே. எ - ம். சிவானுபூதிவிளக்கம். (402) "சீருருவங் கொண்டருளுந் தேசிகன்செம் மேனிபோ — லோருருவங் கொண்டங் குணராதுணர்த்தினனே." எ - ம். "வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்—தந்த சிவானுபவந் தானருந்தப் பெற்றனமே." எ - ம். அமுதசாரம். (404) "உள்ளத்தி னின்று மொளித்தான் பரன்குரவன்—கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினான் - வள்ள—லருவான கோலமோ வக்கோலங் காட்டும் — குருவான கோலமோ கூறு." எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க.

பிரணவமுச்சரித்தற்குப் பிரமாணம் : திருமந்திரம், (405) "ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி — யோமெனு

மோங்காரத் துள்ளே யுளபேத—மோமெனு மோங்காரத் துள்ளே யுருவரு—வோமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே.” எ - ம். திருவாசகம். (406) உய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற—மெய்யா விமலா விடைப்பாகா.” எ - ம். பிரமகீதை. (407) “நீம ரங்தொறு மடைந்தழி வுறுது தெரிவா—காமை நின்ற ரணி யால் வடிவு காணு மதுபோ—லாமு டம்பிலழி வின்றிமறை கின்ற வமல—னேமெ னும்பொரு ளுணர்ந்திட வுடம்பில் வெளி யாம்.” எ - ம். ஞானவாசிட்டம். (408) “ஓங்குஞ் சின்மாத் திரப்பொருளா மோங்கா ரத்தை யுண்ணினைந்து—தூங்குந் தியான பாஞகித் தொடர்சங் கற்ப மெல்லாம்போய்—வாங்குந் தொழிலே டுணையைய மனன ஞான ஞேயமிவை—தாங்கு ஞாதா வினைத் துமறத் தனிச்சித் திரம்போ னெடிதிருந்தான்.” எ - ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (அ௦)

அஞ்சுமூன் றஞ்சக்க ராதியே தேனுநின்
வஞ்ச மறுத்தோதென் றுந்தீபற
மனமிட்ட மானவொன் றுந்தீபற. (81)

எ - து. பஞ்சாக்ஷரி அட்டாக்ஷரி முதலிய மந்திரங்களாயி னும் உன்மனதிற்கு இட்டமான வொன்றை ஏகாக்கிரசித்தம் பொருந்தி உள்ளத்தினுள்ளே உச்சரிக்கக்கடவாய். எ - று.

இதற்குப்பிரமாணம்: திருக்கடைக்காப்பு. (409) “தும்ம லிரும லொருடர்ந்த போழ்தினும்—வெம்மை நிரயம் விளைந்த போழ் தினு - மிம்மை வினையடர்த் தெய்து போழ்தினு—மம்மையி னுந் துணை யஞ்செ ழுத்துமே.” எ - ம். பெரியாழ்வார். (410) “ஏடு நிலத்தி லிடுவதன் முன்னம்வந் தெங்கள் குழாம்புகுந்து—கூடு மனமுடையீர்கள் வரம்பொழில்வந் தொல்லை கூடுமினோ—நாடு நகரமு நன்கறிய நமோநாராய ணயவென்று—பாடு மனமுடைப் பத்தருள் ளீர்வந்து பல்லாண்டு கூறுமினே.” எ - ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (அக)

நிருமலாந்தக்கரணத்தின் பொருட்டு மேலுங் கூறுகின்றூர்.

மந்திர நிட்டையின் றேல்வாயு வாதியாற்
சிந்தைதூய் தாவதற் குந்தீபற
செய்யோக மாதிய வுந்தீபற. (82)

எ - து. இங்ஙனங் கூறிய மந்திரநிஷ்டைகளில் மனசு நில்லாவிடத்து அம்மனசு நிருமலமாய் நிலைகொள்வதன்பொருட்டு வாயுதாரணை முதலியவற்றால் யோகமாதிய தவங்களையாயினும் செய்யக்கடவாய். எ - று.

இதற்குப் பிரமாணம்: திருமந்திரம். (411) "வாயு விருந்திட வாயு விருந்திடு—மாயு விருந்திடக் காய மிருந்திடுங்—காய மிருந் தாற் கருத்து மிருந்திடு—மேய வறிவுணர் வுற்றால் வினையின்றே." எ - ம். சிவதருமோத்தரம். (412) "இந்திய விருத்தி யெல்லாம் பிராணனே யியக்க வேயு—மிந்தியஞ் செயிக்க வெண்ணிற் பிராணனைச் செயிக்க பஞ்ச—விந்தியஞ் செயித்தார் தாமே யெய்துவர் சமாதி தன்னை—யிந்தியஞ் செயிக்க மாட்டா ரெய்துவ தேது மின்றே." எ - ம். ஞானவாசிட்டம். (413) "ஆதலா லுயிரசைவால் வாத னைப்பா லழுத்தத்தால் அறிவைவிரி வாக்கா லென்னி லோதுபிறப் பறுமறிவின் விரிவேயுள்ள முள்ளத்தா லிவ்வனந்த வுயிர்கள் வாழ்வாஞ்—சேதனயோ கிகளெல்லாம் பிராண யாமந் தியானமருந் தாகத்தின் றிறங்க ளாலே—பேதமன மொடுங்குவது பொருட்டா யன்றோ பிராணவா யுவைநிறுத்திப் பிடிக்கின்றாரே." எ - ம். பிரபுலிங்கலீலை. (414) "ஓடு மாவை நிறுத்துறி லுள்ளுறக்—கோடு வாய்க்கலி னத்தினைக் கொள்ளுவார்—நீடு மாமன னிற்க நிறுத்துறி — லோடு வாயுவை யுள்ளுற வீர்ப்பரால்." அன்றியும், (415) "வாயு நிற்ப மனனின்று மனந்தா னிற்ப பொறிநின்று—பாய பொறிக ணிற்பவிடர் படுபுன் புலன்க ணின்றன வா—லாய புலன்க ணின்றமையா னகிலந் தோன்றா துள்ளத்தே—தூய பரமா னந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்." எ - ம். திருவுந்தியார். (416) "காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினு—ளாற்றுவ தாற்றலென் றுந்தீபற—அல்லாத தல்ல லென் றுந்தீபற." எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (அஉ)

அத்தன்மையுங் கூடாதார்க்குப் பின்னுங் கூறுகின்றார்.

அயனாதி மூவரு மாங்கவர் தம்ம
தியைதரு வேடமு முந்தீபற
எல்லாமு மியாமெம தூந்தீபற. (83)

எ - து, அயனரியரனென்னுந் திரிமூர்த்திகளும் அம்மூர்த்திகளது வேஷங்களும் யாமும் எமதுவேஷமும் பிறிதன்றெனக் கொள்வாய். எ - று.

414. கலினம் - கடிவாளம்.

எல்லாமும் யாம் எமதென்றமையால் சிருட்டியாதி கிருத்தியங்களைப் பண்ணு மூர்த்திகளாயும் அம்மூர்த்திகட்கெல்லாம் காரணமாயும் நிற்பது ஒரு சிவமேயென்றதெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: திருக்கடைக்காப்பு. (417) "படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை."எ-ம்.(418) தேவாரம். "ஆதியும்மா ஞயயன் மாலுமாய்ப்—பாதி பெண்ணுரு வாய பரமனென்—ஞேதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்—வாதை தீர்த்திடும் வான்மியூ ரீசனே." எ-ம். திருப்பாட்டு. (419) "வாழ்வர் கண்டீர் நம்மு ளவர் வஞ்ச மனத்தீரே-யாவ ராலு மிகழப் பட்டிங் கல்லலில் வீழாதே—மூவ ராயு மிருவ ராயு முதல்வ னவனேயாந்—தேவர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே." எ-ம். திருவாசகம். (420) "சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல—வந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசை யறுப்பான்—முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச் சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய்." எ-ம். திருவாய்மொழி. (421) "திருமா ஞன்முகன் செஞ்சடை யானென் றிவர்களெம்—பெருமான் றன்மையை யாரறி கிற்பார் பேசியென்—னொருமா முதல்வா வூழிப்பிரானென்னை யாளுடைக்--கருமா மேனிய னென்பனென் காதல் கலக்கவே." எ-ம். பிரமகீதை. (422) "புருட னென்றுரை செயப்படு வதுபரி பூரண மாகின்ற—சொரூப நின்றவா நிற்கவிங் கருளொடு தோன்றவல் லவன்ருனே—யாஞு மன்றுமா லயனுமன் றெவர்க்குமுன் னாகியே யாவர்க்குந்—தெரிவ ருஞ்சிவ னவனையிங் கொருங்கிய சிந்தையார் தெளிவாரே." எ-ம். மற்றும் வருவனவற்ருற் காண்க. (அந)

இங்ஙனங் கூறிய திரிமூர்த்திகளினும் அவரவர் வேடமாகிய கணங்களினும் வழிபடுமுறைமை மேற்கூறுகின்ருர்.

எத்தேவை நாமென் றிசைந்தா யதைத்தொழு
சத்திய பத்தியா லுந்தீபற
தனுவாதி யைக்கொடுத் துந்தீபற. (84)

எ-து. இங்ஙனங்கூறிய முத்தேவர்களுள்ளும் அவரவர் வேடங்களுள்ளும் யாதொருவடிவத்தை நீ சிவமென்று துணிந்தாய் அந்தவடிவத்தையே நாடோறும் வழிபடக் கடவாய்; சத்தியபத்தியால் மனவாக்குக் காயத்தை அர்ப்பணஞ்செய்து. எ-று.

சத்தியபத்தியென்றது உலகர் சான்றோழிந்து தேவதை சான்ருக வழிபடுமிடத்துத் தனுவாதிகளை அர்ப்பித்துத் தலை நிற்றலெனக்கொள்க. தனுவாதி என்றது உடல் பொருளாவி யென்பாருமுளர். இது துறவிக்குக் கூறியதாகலின், அது சிறப் பன்றெனக்கொள்க.

இதற்குப்பிரமாணம்: தேவாரம். (423) "உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற்—கள்ள முள்ளவ ருக்கருள் வானலன்— வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை—வள்ள லாகிய வான்மியூ ரீசனே." எ-ம். திருவாய்மொழி. (424) "உணர்ந்துணர்ந் திழிந்த கன் றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை—யுணர்ந்துணர்ந் துணரினு மிறைநிலை யுணர்வரி துயிர்கா—ளுணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியய னரனென்னு மிவரை—யுணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட தொன்றே." அன்றியும், (425) "மகிழ்கொ டெய்வமு லோகம லோக—மகிழ்கொள் சோதி மலர்ந் தவம் மானே—மகிழ்கொள் சிந்தைசொற் செய்கைகொண் டென்று- மகிழ்வுற் றுன்னை வணங்கவா ராயே." எ-ம். சிவஞானசித்தியார். (426) "மன்மது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல— வினமலர் கையிற் கொண்டிங் கிச்சித்த தெய்வம் போற்றிச்— சினமுத லகற்றி வாழுஞ் செயலற மானால் யார்க்கு—முனமொரு தெய்வ மெங்குஞ் செயற்குமுன் னிலையா மன்றே." எ-ம். மற்றும், வருவனவற்றுற் காண்க. (௮௪)

யாதொரு போகமோக்ஷம் அன்பினலன்றி மற்றொன்றால் யாவர்க்கும் அடைதல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

நெய்யின்றி யாக முடியுமே னீடுபே
ரைவகை யாகமு முந்தீபற
அன்பின்றி யாகுமென் றுந்தீபற. (85)

எ - து. யாதாமோரிடத்தாயினும் நெய்யின்றி யாகம் முடியு மாயின், கருமயாகம் தவயாகம் மந்திரயாகம் பாவனயாகம் ஞான யாகம் என்று இங்ஙனங்கூறிய ஐவகையாகமும் அன்பின்றி ஒருவ னுக்கு முடியும். எ - று.

இதனால் போகமோக்ஷத்திற் கெல்லாம் ஆதரமே காரண மென்றதாயிற்று. இதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். (427)

"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்—புன்கணீர் பூச
றரும்." எ-ம். திருமந்திரம். (428) "அன்புஞ் சிவமு மிரண்டென்ப
ரறிவிலா—ரன்பே சிவமாவ தாரு மறிகில—ரன்பே சிவமாவ தாரு
மறிந்தபி—னன்பே சிவமா யமர்ந்திருப் பாரே." எ-ம். (429)
"என்பே விறகா விறைச்சி யறுத்திட்டுப்—பொன்போ லெரியிற்
பொரிய வறுப்பினு—மன்போ டுருகி யகங்குழைந் தார்க்கன்றி—
யென்போன் மணியினை யெய்த வொண்ணாதே." எ-ம். தேவாரம்.
(430) "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே—புக்கு நிற்கும்
பொன்னார்சடைப் புண்ணியன்—பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு-
நக்கு நிற்ப னவர்தமை நாணியே." எ-ம். திருப்பாட்டு. (431)
"இன்பமுண்டேற் றுன்பமுமுண் டேழைமனை வாழ்க்கை—முன்பு
சொன்னேன் மோழைமையான் மொட்ட மனத்தீரே—யன்ப
ரல்லா ரணிகொள் கொன்றை யடிக ளடிசேரா—ரென்பகோயி
லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே." எ-ம். திருவாசகம்.
(432) "பத்தி வலையிற் படுவோன் காண்க." அன்றியும், (433)
"தேவ தேவன்மெய்ச் சேவகன் றென்பெருந்துறை நாயகன்-மூவ
ராலுமறியொணாமுத லாய வானந்த மூர்த்தியான்—யாவ ராயி
னுமன்பரன்றி யறியொ ணாமலர்ச் சோதியான்—றூய மாமலர்ச்
சேவடிக்கணஞ் சென்னி மன்னிச் சுடருமே." எ-ம். திருவாய்
மொழி. (434) "நீர்மையி னூற்றுவர் வீய வைவர்க் கருள்செய்து
நின்று—பார்மல்கு சேனை யவித்த பரஞ்சுட ரைநினைந் தாடி—
நீர்மல்கு கண்ணின ராகி நெஞ்சங் குழைந்துநை யாதே—யூர்மல்கி
மோடு பெருப்பா ருத்தமர்கட் கென்செய் வாரே." அன்றியும், (435)
"அமரர் தொழப்படு வானை யனைத்துல குக்கும் பிரானை—யமர
மனத்தினுள் யோகு புணர்ந்தவன் றன்னொடொன் றாக—வமரத்
துணியவல் லார்க ளொழியவல் லாதவ ரெல்லா—மமர நினைந்
தெழுந் தாடி யலற்றுவ தேகரு மம்மே." எ-ம். சிவதருமோத்தரம்.
(436) "ஆதரவே பரமான வறம தாகு மாதிநடு வந்தமிவற்
றனைத்து மாகு—மாதரவற் றவரீகை யறம தாகா வாதலினு லாத
ரவே மூல மாகு-மாதரவே பிரகிருதி யான்மா வீச னெனும்பொரு
ளு மறிவிக்கு மமலன் றானு—மாதரவே யடைவிக்கு மாத லாலே
யனைத்தினுக்கு மாதரவே மூல மாமே." எ-ம். அனுபவசாரம்.
(437) "அன்பி லாதநல் லறங்களு மைவகை வேள்வியும் பிண
மேயா—மன்பில் வாய்மையுந் தானமு மொழுக்கமும் விரதமும்
பிணமேயாந்—தன்பின் ஞானமுந் தவளிலெச் சமயமுஞ் சொல்
விடிற் பிணமேயா—மன்பி லாதிய லறம்பொரு ளின்பம்வீ டவற்
றினுக் குயிருண்டோ." எ-ம். சொருபானந்தநிலயம். (438)
அன்பு தொன்றுமற் றருஞ்சிவ மொன்றுமென் றறிபவ ரறி

வில்லா—ரன்ப தேசிவ மாயிருந் தமையறிந் தவரிறை யருள்பெற் ருர்—துன்ப வன்பவந் துவங்களில் வீடெனச் சொல்லிடு மவை யெல்லா—மன்ப தாமமு தினைமுழுந் திடவுணு வயலவ ருரை தானே.'' எ-ம். மெய்ஞ்ஞானவிளக்கம். (439) "தாமமது வெங் குளது வங்கனல தாமா—றேமமுற வேயிறைவ ஞுமவர் பாலுந்-தாமமைவி லாதுருகு தன்மைய ருளத்தே—யாமிறைவ ஞரிய தாளுமென வோரே.'' எ-ம். மெய்ஞ்ஞான நிலையம். (440) "முழு துந் தன்னையே தழுவிட நழுவிடு மூலமா மிறைவந்து—பழுதொன் றின்றிய பத்திநல் வலையினிற் படுமெனு மதுகண்டா—லெழுதி கல்வியு மிலங்குநற் றவங்களும் யோகஞா னமுமெங்கே—யழி வொன் றின்றிய வன்பினன் பெருமையை யறையவு முடியாதே.'' எ-ம். திருக்களிற்றுப்படியார். (441) "அன்பேயென் னன்பே யென் றன்பா லழுதரற்றி—யன்பேயன் பாக வறிவழியு - மன்பன் றித்—தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை—சாற்றும் பழமன்றே தான்.'' எ-ம். சிவானந்தமாலை. (442) "சீரார் பதி னெண் புராணஞ் செழுமறைநூ-லாராத வாகமங்கற் ருய்ந்தறிந்து-நேராகச்—சங்கரன் ருளிணைக்கீ ழன்பிலனேற் சண்டாள—னங் கையினிற் பாகீ ரதி.'' எ-ம். மற்றும் வருவனவற்ருற் காண்க. (அ௫)

அன்போடுகூடாத நெஞ்சிற்கு உணர்த்துதல் மேற்கூறு கின்ருர்.

அஞ்சிவக் கன்புரு தைம்புலக் கோடுமே
னெஞ்சிற் கறிவுறுத் துந்தீபற
நீதுணை யல்லையென் றுந்தீபற. (86)

எ - து. எல்லாச் சிறப்பினையுமுடைய சிவத்திற்கு அன்பு செய்யாது குற்றத்தினை விளைப்பதாகிய ஐம்புல விஷயங்களை இச் சித்து உன்னுடைய நெஞ்சம் செல்லுமாயின் அதனைநோக்கி நித் தியானந்தத்தினை நீத்துச் சிறிதாய் அழிதருஞ் சத்தாதி விஷ யத்தைக் கருதாநிற்கும் நெஞ்சமே நீ யெனக்குத் துணையாகக் கட வாயோ அல்லையென்று வலியுறுத்தி அறிவுறுத்து. எ - று.

இதற்குப் பிரமாணம்: திருவாசகம். (443) "ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்—பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர் — சூடு கின்றிலை

சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே—தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே." எ - ம். பட்டணத்துப்பிள்ளையார். (444) "பேசு வாழி பேசு வாழி—யாசையொடு மயங்கி மாசுறு மனமே—பேசு வாழி பேசு வாழி—கண்டன மறையு முண்டன மலமாம்—பூசின மாசாம் புணர்ந்தன பிரியு—நிறைந்தன குறையு முயர்ந்தன பணியும்—பிறந்தன விறக்கும் பெரியன சிறுக்கு—மொன்றொன் றொருவழி நில்லா வன்றியுஞ்—செல்வமொடு பிறந்தோர் தேசொடு திகழ்ந்தோர் — கல்வியிற் சிறந்தோர் கடுந்திறன் மிகுந்தோர்—கொடையிற் பொலிந்தோர் படையிற் பயின்றோர்—குலத்தி னுயர்ந்தோர் நலத்தினின் வந்தோ—ரெனைய ரெங்குலத்தின ரிறந்தோ ரனையவர்—பேரு நின்றில போலுந் தேரி—னீயுமஃ தறிதி யன்றே மாயப்—பேய்த்தேர் போன்று நீப்பரு முறக்கத்துக்—கனவே போன்று நனவுபெயர் பெற்ற—மாய வாழ்க்கையை மதித்துக் காயத்தைக்—கல்லினும் வலிதாக் கருதிப் பொல்லாத்—தன்மைய ரிழிவு சார்ந்தனை நீயு—நன்மையிற் றிரிந்த புன்மையை யாதலி—னழுக்குடைப் புலன் வழி யிழுக்கத்தி னொழுகி—வளைவாய்த் தூண்டிலி னுள்ளிரை விழுங்கும்—பன்மீன் போலவு—மின்னுபு விளக்கத்து விட்டில் போலவு—மாசையாம் பரிசத் தியானை போலவு—மோசையின் விளிந்த புள்ளுப் போலவும்—வீசிய மணத்தின் வண்டு போலவு—முறுவ துணராச் செறிவுழிச் சேர்ந்தனை—நுண்ணூ னூற்றுத் தன்னகப் படுக்கு—மறிவில் கீடத்து 1 நுந்துழி போல—வாசைச் சங்கிலிப் பாசத் தொடர்ப்பட்—டிடர்கெழு மனத்திறோ டியற்றுவ தறியாது— 2 குடர்கெழு சிறையறைக் குறங்குபு கிடத்தி—கறவை நினைந்த கன்றென விரங்கி—மறவா மனத்து மாசறு மடியார்க்—கருள்சுரந் தளிக்கு மற்புதக் கூத்தனை—மறையவர் தில்லை மன்று ளாடு—மிறையவ னென்கிலை யென்னினைந் தனையே." எ - ம். தத்துவராயர். (445) "மற்றிலை பற்றென்று வாழ்வித்த நாதன் மலரடியைப்—பற்றிலை மற்றொன்றைப் பற்றா தொழிந்திலை பற்றியொன்றும் — பெற்றிலை யாயினும் பேய்த்தேரை நீரெனும் பின்றொடர்ச்சி—யற்றிலை யென்செய்கின் றாய்நெஞ்ச மேயழிந் தற்றனையே." அன்றியும், (446) "நின்பெற்றி தன்னை நினைக்கவுண் டோநெஞ்ச மேநிறையப்—பொன்பெற்று வைத்தும் பொதிந்துகொள் ளாய்புன் குரம்பையிலே-தன்பெற்றி தன்னைத் தருந்தம் பிரான்வந்து சார்ந்திருப்ப—வென்பெற்று நீயிந்தி யஞ்சொன்ன வாசெய் திளைக்கின்றதே." எ - ம்.

1. நுந்துழி-கூடு. 2. குடல்பொருந்திய சிறு வீட்டினுறங்கிக்கிடக்கின்றனை.

மூலசித்தி. (447) "அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவு மளவி லாப் பகைநமக் கெனவுந்—துன்பமார் சோக மோகமே முதலாந் துயரெலாம் விளைநில மெனவு—மின்பவீ டெய்தா திடற்கிடையூரு மிருளுமென் றியம்புவர் பெரியோர்—துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே துணையல துணையல யெனக்கே." எ - ம். அனுபவசாரம். (448) "புலையுறு செயலாற் புலனுறு போகப் புகலரும் விடத்தையே நுகர்தற்—கலமரு கவலைக் கடலுளே தலைகீழாகவே விழுந்தழி நெஞ்சே—கலைகளி னுணர்வுக் கரியநற் சொரூபன் கழல்களை நினைந்துநைந் துருகி—யெலையறு மன்பா மமுதினை விரும்பா தேதுகொண் டென்செய்தாய் கெடுவாய்." எ - ம். போதரத்நாகரம். (449) "காயநீர்க் குமிழி யதிலுறு மின்பங் கானலிற் புனலிது தனக்கங்—காயவித் துயர மளவிலை யிதுநீ யாய்வுறு மையினமழிந் தற்றாய் — நீயினிக் கவலை மயல்களைத் தவிர்ந்து நெஞ்சமே வந்தெனக் குடன்பட்—டாயநற் சொரூபற் கன்பதே புரியி லரியதே தார்நமக் கெதிரே." எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (அசு)

பின்னும் சத்தாதி விடயத்தால் குற்றமேயென்று வலியுறுத்திக் கூறுகின்றார்.

அசுணத்திக் கோரொன்று லைம்புல னுனு
மிசையுமேற் கேடெமக் குந்தீபற
எங்ஙன முய்துமென் றுந்தீபற. (87)

எ - து. அசுணப்புள் யானை விட்டில் மீன் வண்டென்பன ஐந்தும் சத்தாதி விஷயங்களில் வளைவாய்த் தூண்டிலினுள்ளிரை விழுங்கும் பன்மீன்போலவு, மின்னுபு விளக்கத்து விட்டில்போலவு, மாசையாம் பரிசத்தியானைபோலவு, மோசையின் விளிந்த புள்ளுப்போலவும், வீசிய மணத்தின் வண்டுபோலவும். ஓரொன்றுலே கேட்டையாநிற்கும். எமக்கு ஐம்புலனாலும் கேடு வருமாயின் அவற்றினை நீங்காவிடத்து எங்ஙனம் உய்குவம் நெஞ்சமே. எ- று.

இதற்குப்பிரமாணம்: ஞானவாசிட்டம். (450) "உரைத்தவசுணங்களிறு விட்டின் மீன்றே னேசையூ றொளியிரத நாற்றமென்ன—நிரைத்தவிவற் றொன்றொன்றான் மாய்ந்து போகு நிலையழிக்கு மிவையைந்து நேரே கூடிக்—கரைத்தலுறு பவர்க்கின்பமெங்கே யுன்றன் கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம்— புரைத்

தெழுநெஞ் சேயதுவே போகு மாகிற் பொருவில்சய மஃதுனக் குப் புகலுங் காலே.'' எ-ம். அமுதசாரம். (451) "சிந்தா குலமனி தா சீசீ செவிமுதலா—மைந்தாலு மீடழிய வல்லரோ - வைந்தி லொரு—வேட்கை யசுண மிபம்விட்டின் மீன்வண்டு—கேட்கை முத லோரொன்றிற் கேடு.'' எ-ம். ஒழிவிலொடுக்கம். (452) "நாய லகை நெய்விரும்பி நக்குவது நஞ்சிட்ட—பாயசமு மெய்ப்பரிசம் பாவைமிகச் - சாயனீர் — வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டிவையின்—சாட்சியைக்கண் டார்துறவா தார். எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (அஎ)

வனிதையர் விஷயத்தால் வருங்கேடு மேற்கூறுகின்ருர்.

ஆயிழை யார்பாலுண் டைம்புல வேட்கையு
நீவிரும் பிற்கேடென் றுந்தீபற
நெஞ்சமே சொல்வதென் னுந்தீபற. (88)

எ - து. வனிதையரிடத்து ஐம்புலனுகர்ச்சியும் உளதாமாத லின் அவரது போகத்தை நீவிரும்பிற் கேடென்பதற்கு ஓரையம் என்னை நெஞ்சமே. எ - று.

இதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். (453) "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு—மொண்டொடி கண்ணே யுள.'' அன்றியும், (454) "உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்-கள்ளுக்கில் காமத்திற் குண்டு.'' எ-ம். திருவாசகம். (455) "காருறு கண்ணிய ரைம்புல னுற்றங் கரைமரமாய்—வேருறு வேனை விடு திகண் டாய்விளங் குந்திருவா-ரூருறை வாய்மன்னு முத்தர கோ சமங் கைக்கரசே—வாருறு பூண்முலை யாள்பங்க வென்னை வளர்ப்ப வனே.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (அஅ)

காமத்தால் வருமின்பமும் இதனல் வருந்துன்பமும் மேற் கூறுகின்ருர்.

சிலந்தி வருடத் திகழுஞ் சுகம்போ
லிலங்கிழை யார்சுக முந்தீபற
இடராய் விளையுமென் றுந்தீபற. (89)

---

452. அலகு—வாளின் கூர்ப்புறம். சாயனீர்-கானனீர்.

எ - து. ஒருவனது உடலின்கண் தோன்றிய சிலந்தியைச் சூழ்ந்துஉகிரால் வருட உண்டாகிய சுகம் பின்பு கீறி அறுத்துத் தீர்த்தற்கு இடமாய் விதனஞ் செய்குதல்போலும் ஆபரணாதிகளினது சிறப்பால் மயக்கஞ்செய்யாநிற்கும் மகளீரிடத்து உண்டாகிய சிற்றின்பமும் பின்பு நரகாதிவாதனைக்கு இடஞ்செய்யும். எ - று.

இதற்குப்பிரமாணம்: தேவாரம். (456) "குழலை யாழ்மொழி யாரிசை வேட்கையா—லுழலை யாக்கையைப் பூணா முணர்விலீர்—தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினோ—மிழலை யானடி சாரவின் ணாள்வரே." எ-ம். திருப்பாட்டு. (457) "மாணாவுரு வாகியோர் மண்ணளந்தான் மலர்மேலய னேடியுங் காண்பரியாய்-நீணீண்முடி வானவர் வந்திறைஞ்சு நெல்வாயி லரத்துறை நின் மலனே — பாணார்நுத லார்வலைப் பட்டடியேன் பலவின்கனி யீயது போல்வதன்முன்—னாணோடுபெண் ணாமுரு வாகிநின்றா யடியேனுயப் போவதோர் சூழல்சொல்லே." எ-ம்; திருவாசகம். (458) "செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற்பன் னாள்—விழுகின்ற வென்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகா—லுழுகின்ற பூமுடி யுத்தர கோசமங் கைக்கரசே — வழிநின்று நின்னரு ளாரமு தூட்ட மறுத்தனனே." எ-ம். பட்டணத்துப் பிள்ளையார்பாடல். (459) "இலவிதழார் வீழ்வா ரிகழ்வா ரிவர்தங்-கலவி கடைக்கணித்தும் பாரே - னிலகுமொளி — யாடகஞ்சே ரம்பலத்தெம் மாளுடையா னின்றாடு—நாடகங்கண் டின்பான நான்." எ-ம். சிவதருமோத்தரம். (460) "குட்டவுடல் கொடுக்கு மிதங் கூடினழற் கொடியிடையா—ரிட்டமுமிம் முறையெனுக விளையவர்தம் பருவம்போற்—குட்டமழற் கூடுதலுங் கொழுநனுக் கொப் பெனக்கொள்க — தொட்டதுவக் கிந்திரியஞ் சொற்பொரு ளாந் துணிவாரே." அன்றியும், (461) புரிந்தவர்க டவினையைப் பொருவரியா னடிக்கன்பு—பிரிந்தவர்கள் வனிதையரைப் பெறற் கரிய பேறென்றே—யிருந்தவர்க ணடந்தவர்க ளிழுக்காய குழிவ ழிக்கே—யெரிந்தவர்கள் கிடந்தெரிவாய் நிரயத்து மிளைப்புறவே." எ-ம். ஞானவாசிட்டம். (462) "பைந்தொடியா ராசைநோய் கம் பீர மனிதரையும் பதுமந் தன்னை—முந்திரவிக் கதிர்போலு மிளிர் விக்குங் கனவிடியின் முனைகூர் வாளும்—வெந்தவிருப் புப்பொ றியு மெனக்கொடிய மனவேட்கை மேரு வொத்தோர்—சுந்தர ஞா னியர்தீரர் சூரரையெல் லாமிமைப்பிற் றுரும்பு செய்யும்." அன்றியும், (463) "மேவுதற் கரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த் — தீவினைச் சிகைசேர் மாதரெனுங்கனற் றிரணம் போல—யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத் தீக்குப்—

பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விறக தாமே.'' அன்றியும், (464) "மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பி டிக்கக்—காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர்—தீமனச் சேரூர் சன்மச் சிறுகுழி மீனு மாந்தர்க்—கேமவா தனைக்க யிற்றுத் தூண்டிலுக் கிரையு மொப்பார்.'' எ-ம். நாலடியார். (465) "அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறும்—வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்-வெம்பிக்—கவற்றி மனத்தைச் சுடுதலாற் காம—மவற்றினு மஞ்சப் படும்.'' அன்றியும், (466) "ஊரு னெழுந்த வுருகெழு செந்தீக்கு-நீருட் குளித்து முயலாகு - நீருட்—குளிப்பினுங் காமஞ் சுடுமே குன் றேறி—யொளிப்பினுங் காமஞ் சுடும்.'' எ-ம். நீதிவெண்பா. (467) "ஊரு ரெனும்வனத்தி னுள்வேற்கண் மாதரெனுங்—கூருர் விடமுட் குழாமுண்டே-சீரூர்—விரத்திவை ராக்ய விவேகத் தொடுதோ—லுரத்தணியத் தையாவென் றோது.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (அக)

நல்லுணவாகிய சுவைகள் விழைதல் தீதென்று மேற்கூறு கின்றார்.

ஆன்பாலுங் கூழு மகற்றும் பசியெலாந்
தான்பின் மலமாமென் றுந்தீபற
சடுரசந் தேடேலென் றுந்தீபற. (90)

எ - து. ஒருவனது மிகுந்த பசிக்குப் பாலும் சருக்கரை யும் முக்கனிகளும் கூட்டி அருந்தினும், அஃதன்றி உப்பற்ற நீர்க்கூழும் காடியும் மற்றுள்ள சாகமூல பலாதிகளும் அருந்தினும், உதராக்கினி அவியாநிற்கும் யாதொரு புசிப்பேனும் உதரத்தைப் பொருந்தித் தனது தன்மை கெட்டு மலத்தன்மை யொன்றே அடையாநிற்கும் ஆதலால், பசிக்கு உதவினதன்றிக் கைத்தல் கார்த்தல் புளித்தல் துவர்த்தல் உவர்த்தல் தித்தித்தல் என்கிற அறுசுவைகளைத்தேடி ஓடேல் நெஞ்சமே. எ - று.

இதற்குப் பிரமாணம்: தத்துவராயர்.'' (468) "பண்டைப் படியே நமக்களிக் கின்ற பரஞ்சுடரைக்—கண்டைக் கனியை யமுதைக்கை விட்டுக் கவலைநெஞ்சே—தொண்டைக்கு மேலுறுஞ் சோற்றுச் சுவடுந் துடியிடையார்—கெண்டைத் துணைவிழி யும்

467. விரத்தி - துறவியானவன். தொடுதோல் உரத்தணிய-செருப்பை மனமாகிய காலில் இட்டுக்கொள்ள.

முன்னி யென்னைக் கெடுத்தனையே.'' எ-ம். சிவானந்தமாலை. (469) "உப்பகன்ற நீர்க்கூழு முண்டாற் பசிகெடுமோ—லப்ப துண்டு கூவல்குள மாறதனி - லிப்படியைப்—பார்த்தமையாய் நெஞ்சே பாரந்தெழுந்து சென்றாலும்-போர்த்துளதின் மேல்வருமோ பேசு.'' அன்றியும், (470) "நீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டாமை—யேயா யமைந்தா யிடர்நெஞ்சே - காயோ—கடையானூர் காய் பசிக்கே கால்குலைவர் கற்றோ—ரடையாரோ வாங்கமைவின் பால்.'' எ - ம். மற்றும் வருவனவற்றாற்காண்க. (௯௰)

மேலமைவு கூறுகின்றார்.

வேண்டாத, துன்பமு மேவல்போ லின்பமும்
வேண்டா விடினுமுண் டுந்தீபற
விதிவழி நெஞ்சேயென் றுந்தீபற. (91)

எ - து. யாவனொருவனுக்கும் இன்ப துன்பங்களெல்லாம் ஊழின்வழியே அடைதலால், வெறுக்கப்பட்ட துன்பமும் உனக்கு இயல்பாய் வருதல்போல யாதொரு விஷய சுகமும் நீ விரும்பா விடினும் அமைத்தபடியே வந்து கூடும் அவற்றினை அவாவுதல் ஒழிவாய் நெஞ்சமே. எ - று.

இதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர் (471) "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி—தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.'' அன்றியும், (472) "பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்—சொரியினும் போகா தம.'' எ - ம். ஔவையார். (473) "ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலி—னாழி முகவாது நானாழி - தோழி—நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்—விதியின் பயனே பயன்.'' அன்றியும், (474) "எழுதியவா றேகா ணிரங்குமட நெஞ்சே—கருதியவா றாமோ கருமங் - கருதிப்போய்க்—கற்பகத்தைச் சேர்ந் தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேன்—முற்பவத்திற் செய்த வினை.'' எ - ம், குகைநமசிவாயர். (475) "வையமுழு தும்படைத்து வாழு மருணகிரி—யைய னமைத்தபடி யல்லாம-னெய்யமனை—நூறா யிரம்விதமாய் நொந்தாலு மெள்ளளவு — மேறா தகிற் குறையா தே.'' எ-ம். சிவானந்தமாலை. (476) "இல்லாத தில்லை யுளதுதவி ராதென்று—நல்லார் துணிபொருளை நாடுங்கா - லெல்லா—மமைந்தபடி யேவருமா லாங்கசைவென் னெஞ்சே—சமைந்தபொரு டாமறிவார் தாம்.'' அன்றியும், (477) "பல்காய

நற்கறியும் பானெய்பழத் தோடடிசில்—செல்வாய தேயஞ் செறிந் தாலு - மெல்லவுனை—யூட்டாவூ முண்டே லுறுபிணிமற் றேதொன்றால்—வீட்டாதோ நெஞ்சே விரைந்து." அன்றியும், (478) "இன்பத்துக் கோடி யிளைக்குமது போன்மனமே—துன்பத்துக் கோடிச் சுழலாயே - யின்பமுநீ — யப்படியென் றெண்ணியிளைப் பாறியாட் பேறுபெறு—திப்படிவந் துற்பவிப்ப தென்." அன்றியும், (479) "நீடுந் தலைகீழ்கான் மேலாகி நின்றாலும்—கூடும் படியன் றிக் கூடாதா - லோடி—வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி—யிருந்தாலோ நெஞ்சே யினிது." அன்றியும், (480) "இருந்த விடத் தேதும்வரக் கண்டிருப்ப தன்றோ – பெருந்தகைமைக் காபரணம் பேதாய் - மருந்தெனவே—யாங்கினியார் தங்கடையிற் சென்றிடினு மாதரியார்—பாங்கிதுகாண் பாழ்நெஞ்சே பார்." அன்றியும், (481) "ஆற்றங் கரைப்பசுத்தா னக்கரையோ டிக்கரையாய்த்—தோற்றும் பசும்புற் றொடர்புறுமே - யாற்ற—வதுபோல நெஞ்சே யலைந்தலைப்பட் டோடு—மிதுவே யுனக்கிதனாற் பேறு." எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (கக)

இங்ஙனங் கூறிய வுபாயங்களனைத்தையும் நெறியாகப்பற்றிச் சென்று உண்மை நிட்டையினையே கூடல்வேண்டுமென்று மேற் கூறுகின்றார்.

சொன்னவிந் நானு வுபாயங் கொடுதொடர்ந்
தன்னமெய்ந் நிட்டைசேர்ந் துந்தீபற
ஆனந்தம் பெற்றிடென் றுந்தீபற. (92)

எ - து. இங்ஙனம் பாவனையாதியாகச் சொல்லிப் போந்த நானுவுபாயங்களானும் மனசை யொருவழிப்படுத்திச் சென்று முற்கூறிய பாவனாதீத நிட்டையைப் பொருந்தி நின்று பேரானந்தம் பெறக்கடவாய். எ - று.

பாவனையாதியான நிட்டைகளொவ்வொன்றி லனேகவிதங்க ளடங்கி நிற்றலானும், பின்னு முபாயங்கள் பலவாக நூல்களிற் சொல்லப்படுமதனானும், நானுவுபாயங்களென்று கூறினரெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: தத்துவராயர். (482) "இம்மற் கிறையா னவுடம் பையெடுத் திதுகா ரணமாக விரவும் பகலு மௌிவந்

தனசெய் திதனு லமையாதே—மம்மர்க் கிடனுய் நடனு டியபொய் வாழ்வைக் கருதாதே மறையிற் றுறையிற் பொறையிற் றுறவி னிறைவிற் குறைவற்றே—யெம்மைக் குநமக் குறவா மவர்வே றலநா மலதென்றே யாதொன் றினும்யா வரொடும் பணியற் றெல்லா வழியானுந் — தம்மைப் பெறுவா னினைவா ருறவே தாலோ தாலேலோ தனிநா யகமே யெனையா ளுடையாய் தாலோ தாலேலோ.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (கஉ)

அவ்வுண்மை நிட்டைசார்ந்து சாதிப்போர்க்கு வாக்குந்தொழி லும் எதுகாறும் அடங்காதோ அதுகாறும் நிலைகொளாதென்று மேற்கூறுகின்றூர்.

நினைவெழின் மெய்ந்நிட்டை நீங்குமேன் மாணு
பினையெழி னென்னுமென் றுந்தீபற
பேச்சுந் தொழிலுமென் றுந்தீபற. (93)

எ - து. யாவனொருவ னுண்மைநிட்டை சாதிக்குமிடத்து அவனுக்கெல்லா வுபாதிகளுமடங்கி [1] நிஸ்தரங்க சமுத்திரம்போல இவ்விடத்திருக்கின்றதென்று உண்ணினைவு சற்றே உண்டாமா யினும் அது சகசநிட்டை யன்றென்று சுருதியாதிகள் கூறுநிற்கு மாயின், அந்நினைவெழாம லடக்குவதன்றி அது தடித்துப் புற நிலையாய் மனதிகளோடு கூடி அவத்தையடைந்து ஐம்புலன்களை யுங் கவர்ந்து வாக்குந் தொழிலுமாகிய கன்மேந்திரியங்களும் பிரே ரகப்படுமாயின் அந்நிட்டை யாதாய் முடியுமோ மாணுக்கனே. எ - று.

நினைவெழின் மெய்ந்நிட்டை நீங்குமென்றவதனுன், மனோ லயஞ் செய்வோர்க்கு வாக்குந்தொழிலு மசைவற அடங்குதலே நியமமென்றூரெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: திருவாய்மொழி. (483) "உள்ள முரை செய—லுள்ளவிம் மூன்றையு—முள்ளிக் கெடுத்திறை—யுள்ளி லொடுங்கே.'' எ-ம். ஔவையார். (484) "மோன மென்பது ஞான வரம்பு.'' எ-ம். சிவானந்தமாலை. (485) "ஓடியுழன் றிந்த வுடம்பை யொரூதேநீ—பாடிமிடற் றைப்புண் படுத்தாதே-கேடு பிறர்க்—கும்மால் விளையாதே யொன்றுடனுந் தாக்காதே—சும்

1. நிஸ்தரங்கசமுத்திரம்—அலையற்ற கடல்.

மாவே காணுஞ் சுகம்.'' அன்றியும், (486) "ஓடாதே தேடாதே யுன்னாதே யோசையெழப்—பாடாதே சாத்திரங்கள் பன்னாதே-கேடுபிறர்க்—கும்மாலே செய்யாதே யொன்றாதே யொன்றுமறச் — சும்மா விருக்கை சுகம்.'' எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௯௩)

இச்செய்யுள் தொடங்கி ஞானிகளதாசாரங் கூறுகின்றார்.

ஆனந்த மெய்தினோ ராடினும் பாடினு
மானந்த லீலையென் றுந்தீபற
அவர்செயல் கூறொணா துந்தீபற. (94)

எ - து. இங்ஙனங்கூறிய உண்மைநிட்டைகள் வந்து பரமானந்தம்பெற்றுள்ள ஞானிகளாயினோர் பின்பு ஓராடல்பாடல்களைச் செய்தார்களாயினும் அத்தொழில்களெல்லா மானந்தலீலையாய் முடியும் அவரது செயற்பாடொருவரானிச்சயித்துக் கூறுதல் கூடாது. எ - று.

ஆடினும் பாடினுமென்ற வும்மையால், அவை நியதமல்லவென்றதெனக் கொள்க. இதற்குப் பிரமாணம்: அஞ்ஞவதைப் பரணி. (487) "தெளியு முளத்தார் சிலவர் தெளிப்பார் சிலவர் களிப்பார் சிலவர் திகைப்பா—ரளியு முளத்தோ டழுது சிரிப்பா ரவர்கள் செயற்பா டறிய வொண்ணாதே.'' எ-ம். மோகவதைப்பரணி. (488) "அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய—வல்ல தன்றான் முகுந்தனும் பிரமனு மாட்டார்.'' எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௯௪)

சோறிட நாடுந் துணிதரக் குப்பையு
மாறினோர்க் குள்ளவா றுந்தீபற
ஆங்கவைக் கெண்ணாரென் றுந்தீபற. (95)

எ - து. சோறிடுதற்குநாடும் கோவணத்துணி கொடுத்தற்குக் குப்பைமேடு மியல்பாக விருத்தலின், அவற்றினைக் குறித்தொருவரை யனுசரித்தற்கு ஞானிகளாயினோர் மறந்தாயினு நினைப்பதில்லை. எ - று.

அஃதெங்ஙனமெனின், மெய்யுணர்ந்தோரொன்றையு மிப்பிரபஞ்சத்தின்கண் வேண்டார்களாயினும், பிராரப்த தேகமுள்

ளளவும் அதனுக்காகாரம் வேண்டுதலின் அது குறித்தாயினு மொருவரை யனுசரிக்க வேண்டுமேயெனில், அது வேண்டுவதில்லை; அறிஞர்க்கு நாடுதோறுமிரந்துண்ட லியல்பாயிருத்தலின், அங்ஙனமாயினும் அபிமானமறைப்பது நிமித்தம் ஒரு கோவணத்தையாயினுங் குறித்து அனுசரிக்கப்படுமேயெனின், அவர்க்கபிமானங் கிஞ்சித்தாயினு மின்மையாற் கோவணமே வேண்டுவதில்லை; அங்ஙனமாயின் ஞாதாக்கள் தரிப்பதேனெனின் ஊர்கடோறு மிரந்துண்பான் செல்லுமமைதியிற் றம்மைநோக்கிச் சிலரிகழ்ந்து கெடாவண்ணமும் மகளிர் நாணுவண்ணமுமாகப் பிறரைக்குறித்துக் கோவணந் தரித்தாரெனக்கொள்க. அங்ஙனமாயினும், கோவணங்குறித் தொருவரை யனுசரிக்கப்படுமேயெனில், அது தேவையில்லை; குப்பைமேடுகடோறுஞ் சதாகாலமும் பழந்துணிகளியல்பாய்க் கிடத்தலினெனக் கொள்க.

இதற்குப்பிரமாணம்: திருமந்திரம். (489) "பரந்துல கேழும் படைத்த பிரானை-யிரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கு-நிரந்தரமாக நினையு மடியா-ரிரந்துண்டு தன்னடி யெட்டவைத் தானே." எ - ம். பட்டணத்துப்பிள்ளையார் பாடல். (490) "சோறிடு நாடு துணிதருங் குப்பைதொண் டன்பரைக்கண்-டேறிடுங் கைக ளிழிந் திடுந் தீவினை யெப்பொழுது—நீறிடு மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டா—லூறிடுங் கண்க ளுருகுமென் னுவியு முள்ள முமே." அன்றியும், (491) "சின்னற் சீரை துன்னற் கோவண—மறுதற் கீளுடன் பெறுவது புனைந்து." எ - ம். மற்றும் வருவன வற்றுற் காண்க. (கூ௫)

செல்லுழிக் கண்ட சிதைவலோ டிங்கையு
நல்ல கலமவர்க் குந்தீ பற
நாட்டிலேற் றுண்பதற் குந்தீ பற. (96)

எ - து. ஆகாரத்தைக்குறித் தேகுமிடத்தெதிரே கண்ட உடைசலோடாயினும் கைகளாயினும் நாடுதோறும் பலியேற் றுண்பதற்குப் பாத்திரமாக உளவாகலின், ஞானிகளாயினோ ரேற் றுண்ணு மோட்டினைக் குறித்தாயினு மொருவரை யனுசரியார். எ - று.

இதற்குப் பிரமாணம்: தேவாரம். (492) "கட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டில்—ரட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்—

சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய—பட்ட கட்டமுற் றூரங் கிருவரே.'' எ - ம். திருவாசகம். (493) "ஓடுங் கவந்தியுமே யுறவென்றிட் டென்கசிந்து.'' எ - ம். பட்டணத்துப்பிள்ளையார். (494) "விடுங்கோ டுகிலெங்குங் கோவண முண்டுவெண் ணீ றெங்குமா—யிடுங்கோன் கரோடுங் கைக்கொளுங் கோளிடை மாமருதைத்—தொடுங்கோன் சிவசங் காரவென நாளுந் துதி செயுங்கோ — டடுங்கோள் புலனுறங் குங்கோ ணலம் பலந் தன்னிலுற்றே.'' அன்றியும், (495) "கையார வேற்றுரின் றங்கனந் தின்று கரித்துணியைத்—தையா துடுத்துநின் சன்னி திக் கேவந்து சந்ததமு—மெய்யார நிற்பணிந் துள்ளே யுரோமம் விதிர்விதிர்ப்ப—வையாவென் றோல மிடுவதென் றேகயி லாயத் தனே.'' அன்றியும், (496) "வீடு நமக்குத் திருவாலங் காடு விமலர் தந்த—வோடு நமக்குண்டு வற்றாத பாத்திர மோங்குசெல்வ— நாடு நமக்குண்டு கேட்டவெல் லாந்தர நன்னெஞ்சமே — யீடு நமக் குச் சொலவோ வொருவரு மிங்கில்லையே.'' அன்றியும், (497) "சிதவ லோடொன் றுதவுழி யெடுத்தாங்—கிடுவோ ருளரெனி னிலையினின் றயின்று—படுதரைப் பாயலிற் பள்ளி மேவி.'' எ-ம். நெஞ்சொடுமகிழ்தல். (498) "கைத்துணைப் பாத்திர மாளுய் காழு டைக் கோவண மாளுய்—பித்தனெ னப்பெயர் பெற்றுயுன் பேருணர் வென்னைகொ னெஞ்சே.'' எ-ம். அஞ்ஞவதைப்பரணி. (499) "அலைபொ ருமலொரு காறலை யெடாதமைவரே யருள் பொ ருமலுரு காவருவி பாய்நயனரே—கலைபொ ருமலொரு கோ வணவ ராய்விடுவரே கவலை தீர்பலிகொ ணீள்கரக பாலியர்களே.'' அன்றியும், (500) "உரையிறந் துணர்விறந் திடனுணர்ந் திடுவரே யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே—திரையிறந் தளவிறந் துளபரங் கடலுளே செறிதரும் படிவருந் திருவகம் படியரே.'' எ - ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (௬௬)

> ஏகாந்த மான தலமிலம் பூவணை
> யாருந் தரையவர்க் குந்தீ பற
> ஆனந்த நித்திரைக் குந்தீ பற. (97)

எ - து. ஞானிகளாயினோர்க்குப் பாழ்ங்கோயில் மலைமுழை முதலிய ஏகாந்தத்தலங்களே இல்லமாதலினாலும், அன்னோரானந்த நித்திரை செய்தற்குத் தரையே பூவணையாதலினாலும் அவற்றினைக் குறித்து மொருவரை யனுசரியார். எ - று.

இதற்குப் பிரமாணம். திருமந்திரம். (501) "இணங்க வேண் டா வினியுல கோருட—னுணங்கு கல்வியு நூல்களு மென்செயும்—

வணங்க வேண்டா வடிவை யறிந்தபின் — பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே.'' எ-ம். திருக்கடைக்காப்பு. (502) "மேனி யிற்சீ வரத்தாரும் விரிதருதட் டுடையாரும் விரவ லாகா—வூனி களா யுள்ளார்சொற் கொள்ளாது முள்ளுணர்ந்தங் கும்மின் றொண்டர்—ஞானிகளா யுள்ளார்க ணன்மறையே முழுதுணர்ந் தைம் புலன்கள் செற்று—மோனிகளாய் முனிச்செல்வர் தனித் திருந்து தவம்புரியு முதுகுன் றம்மே.'' எ - ம் ஞானவாசிட்டம். (503)"இல்லவ ளில்ல மாதிப் பற்றற விட்டா திட்டம்-புல்விடிற் சம சிற் பாவம் பொருந்துத றனக்குப் பேத—மல்லவா யவற்ற வற்றின் றேற்றங்க ளாத லென்று—மல்லலே காந்தஞ் சேர்தன் மானுடத் திரளை நீத்தல்.'' அன்றியும், (504) "சங்க மடியாப் பொருளுண் டாஞ் சங்க மடியா வாபத்தாஞ்—சங்க மடியா வாசைவருஞ் சங்க முடியாப் பிறப்புண்டாஞ்—சங்க மறுத்தல் வீடென்பர் சங்க மறுத் தல் பிறப்பறுத்தல்—சங்க மறுத்துப் பொருள்களினீ தனிச்சீ வனின்முத் தியைப்பெறுவாய்.'' எ - ம். சிவபோகசாரம். (505) "என்றுஞ் சனன விடர்க்கடலு ளேமூழ்கிப்—பொன்றுமன மேயுனக்கோர் புத்திகே - ணன்று—தனிச்சங்கஞ் சாராமற் றற்பா நீ சேரி—னினிச்சங்கஞ் சேரா திரு.'' அன்றியும், (506) "அனி த்தியத்தை நித்தியமென் றுதரிக்கும் பொல்லா—மனித்தருடன் கூடி மருவாதே—தனித்திருந்து—மோனந்த மாஞ்சிவத்துண் மூழ்கி மலத்தையறுத்—தானந்த மாயமுந்து வாய்.'' எ - ம். அருட் பிரகாசம். (507) "மைக்குழம் பன்ன விருள்வெயிற் காற்று மழையிவைகண்—மிக்குறு காலை யினும்பலர் வந்து விரவுதலம்—புக்கிதஞ் சொல்லினிற் பாரோ தனித்தோ ரிடம்பொருந்தித்—துக்கமி லாப்பர மானந்தத் தோகையைத் தோய்பவரே.'' எ-ம். (508) "கிடையாத ஞானப்பெண் கிட்டிற் றனியோ—ரிடம ருவுத லியல் பே.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க.

தரை பூவணையா மென்பதற்குப் பிரமாணம்: தேவாரம். (509) "அகலிடமே யிடமதர் மூர்க டோறு மட்டுண்பா ரிட்டுண்பர் விலக்கா ரையம்—புகலிடமா மம்பலங்கள் பூமி தேவி யுடன்கிடந் தாற் புரட்டாள்பொய் யன்று மெய்யே—இகலுடைய விடை யுடையா னேன்று கொண்டா னியாமார்க்குங் குடியல்லோ மியாது மஞ்சோந்—துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லுஞ் சொற்கேட்கக் கடவோமோ துரிசற் றோமே.'' எ-ம். பட்டணத் துப்பிள்ளையார். (510) "படுதரைப் பாயலிற் பள்ளி மேவி—யோ வாத் தகவெனு மரிவையைத் தழீஇ.'' எ-ம். சிவானந்தமாலை. (511) "காற்கட்டில் பூமி தலையணைதோள் கையிணையா-மேற்கட்டி விண்

கவரி வீசுகா - லேற்ற—விளக்கிரவி யிந்து மனைத்துறவா மெய் யே—யுளக்கண் விழித்துறங்கு வோர்க்கு.'' எ-ம். தத்துவராயர். (512) "விழித்திருந்து தூங்குவார் மெய்யுள்ளத் துள்ளே —முழித் திருந்த ஞான முனியே - யொழிப்பறநீ—யாட்டியருள் கூத்தை யாற்ற யருளாலே—காட்டியருண் மெய்ஞ்ஞானக் கண்.'' எ-ம். பாடுதுறை. (513) "படுக்கை தரைதனி லாகவும் பெற்றோம் பாணியி லேபலி கொள்ளவும் பெற்றோ—முடுக்கையுங் கோவண மாகவும் பெற்றோ மொன்றுங் குறைநமக் கில்லைகாண் பெண்ணே.'' எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௯௭)

ஒருபர மல்ல தொருவரைக் காணு
தொருதவர்க் குண்டுகொல் லுந்தீபற
உறவும் பகையுமென் றுந்தீபற. (98)

எ - து. ஏகமாகிய பரம்பொருளையேயன்றி எக்காலமு மெவ் விடத்தும் அவ்வஸ்து பின்னமாக வோர்பொருளையுங் காணு வொப்பற்ற தவத்தோராகிய ஞானிகட்கு முண்டுகொல்லோ இவ் வுலகத்தின்கண் பெறுதற்குண்டாகியபோலு முறவும் பகையும். எ - று.

உண்டுகொல்லோ வென்றவதனு லில்லையென்பதே துணிவு. அஃதெங்ஙனமெனின், ஞானிகளாயினேருர்கடோறும் புகுந்தைய மேற்றுண்ணுதலான், அங்ஙன மிதாகிதஞ் செய்வோரைக் குறித் துக் கிஞ்சித்தாயினு மொருவரோடும் உறவும் பகையும் கொள்ளா ரென்றதெனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: திருவாசகம். (514) "பார்பத மண்ட மனைத்துமாய் முளைத்துப் பரந்ததோர் படரொளிப் பரப்பே— நீருறு தீயே நினைவதே லரிய நின்மலா நின்னருள் வெள்ளச்— சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே திருப்பெருந் துறையுறை சிவனே—யாருற வெனக்கிங் காரய லுள்ளா ரானந்த மாக்கு மென் சோதீ.'' எ-ம். திருவாய்மொழி. (515) "நல்குரவுஞ் செல்வ நரகுஞ் சுவர்க்கமுமாய்—வெல்பகையு நட்பும் விடமு மமுதமு மாய்ப்—பல்வகையும் பரந்தபெரு மானென்னை யாள்வானைச்— செல்வமல்கு குடித்திரு விண்ணகர்க் கண்டேனே.'' எ-ம். தேவி காலோத்தரம். (516) "வாதுரை பயனில் சொல்லும் பிறருடன் மகிழ்ந்தி ருத்தல்—பேதுறு பிணக்கு நீங்கிப் பெரியவ ரருளி ஞலே—யோதுறு லோத லோவி யுலகிய னன்று தீதென்— றோதியி லுரைத்த வெல்லா மறவிட்டே யமர்ந்தி ருப்பான்.'' எ-ம். சிவதருமோத்தரம். (517) "விடுத்து வாழ்க்கையை மெய்யுணர்ந்

தையமுங்—கொடுக்கு மிற்ளுறுங் கொண்டுண்டு கோவண—முடுத்துப் பாரி லுறவு பகையிவை—கெடுத்த கேள்விய ரவ்விடங் கிட்டுவார்.'' எ-ம். ஞானவாசிட்டம். (518) "இவன் சுற்ற னிவன் பகைஞ னிவனு னென்னு மிவ்வெறும்பொய் யிராமநீ யிறையு மெண்ணே—லவம்பற்று நொய்யமனத் தவர்க்கிவ் வாறு மறிந்த வர்க்குச் சகமுழுது மகலாச் சுற்ற—நிவந்துற்ற பலகோடி பவமோ கத்தா னீபகைநீ யுறவென்பர் நிமிடந் தோறு—முவந்துற்ற மயக்கி துவாம் பரமார்த் தத்தா லுலகெல்லாம் பகையாகு முறவு மாகும்.'' எ-ம். சைவசமயநெறி. (519) "உறவுபகை யாசைவெறுப் புள்ளச் சழக்கு—மறினே பிறவி யறும்.'' எ-ம். சிவபோகசாரம். (520) "ஆர்பெரிய ரார்சிறிய ரார்பகைஞ ராருறவர்—சீர்பெரிய ரானந்த சிற்சொருபர் - பேர்பெரிய—ரெங்கெங்குந் தாமா யிருந்துசட சித்தனைத்து—மங்கங் கியற்றுவதனாலே.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க. (௯௮)

ஆண்டகை யீசனை யன்றியொன் றின்மையால்
வேண்டிய செய்வாரென் றுந்தீபற
விதிநிடே தங்களற் றுந்தீபற. (99)

எ - து. உள்ளன இல்லன செய்யப்படுவன செய்யப்படாதன உயர்ந்தன தாழ்ந்தன நான் பிறனென்பன ஆதியவனைத்தும் பரமேயாதலால், அவ்வுண்மையறிந்த ஞானிகளாயினோர் இச்சைப்படியே செய்யாநிற்பர், விதிநிடேதங்களொழிந்து. எ-று.

விதி நிடேதங்களொழிந்தெதன்றமையால், அவ்விரண்டினையும் பற்றுதல் விடுதலில்லை யென்றதெனக்கொள்க.

இதற்குப்பிரமாணம்: திருவாசகம். (521) "புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயர்—தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்—சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கு-மத்தன் கருணையினுற் ளோணேக்க மாடாமோ.'' எ - ம். (522) பிரமகீதை "ஓதுமிப்பரம் பெரும்பொரு ளுணர்ந்தவன் செய்வ—தேது மில்லை ஞானமுமில்லை யிரண்டிலா மையினு—னீதி வன்னவாச் சிரமமு நிடேதமும் விதியுஞ்—சாதி நல்வினை தீவினை சகலமு மிலதே.'' எ - ம். மெய்ஞ்ஞானவிளக்கம். (523) "மதிசெய் மாமறை வன்ளுச் சிரமிகள்—விதிசெ யாவிடில் வெந்நர கென்றது—துதிசெய் துற்றதி வன்ளுச் சிரமிக-ளொதுசெய் தாரது வேதவ மென்றதே.'' எ - ம். ஒழிவிலொடுக்கம். (524) "நாயேறி வீழ்ந்தென் னடாத்துகிலென் ஞானியர்க்குப்—பேயாஞ் சகம்பழித்தென் பேணுகிலென் - ளேயார்—பெருமை சிறுமையில்லை பின்னுமுன்னு மில்லை—வரை

வற்று வேண்டியசெய் வார். அன்றியும், (525) "சாவே பெருநோன்பாச் சந்தற்ற சத்தியர்க்குத் — தேவாரங் காலந் தியானமறம் - பாவம்—விதிவிருத்தம் பேசுகைக்கு வேதா கமங்க —ளதிசயிக்கு மேலுரைப்பா ரார்." எ - ம். மற்றும் வருவன வற்றுற் காண்க. (கக)

ஓங்கரு ளீசனோ டொன்றியே நின்றோரு
மீங்கரு ணீங்காரென் றுந்தீபற
எல்லா வுயிர்க்குமென் றுந்தீபற. (100)

எ - து. உயர்ந்த கருணையே வடிவாகவுடைய பரம்பொரு ளுடனே கூடி யிரண்டறக்கலந்துள்ள முத்தரும் இத்தசைக்க ணுண்டாகிய சராசரங்களிடத்தெல்லாம் அருளை நீங்கார். எ - று.

அஃதெங்ஙனமெனின், ஆரூடஞானிகள் விதிநிடேதங்கடந்து வேண்டிய செய்வாராதலின் உயிர்கட்கிதஞ் செய்யவேண்டுமென் னும் விதியினையும் பற்றுதல் விடுதலில்லையென்னில் அது கூடாது; அன்னோருயிர்கட்கிதஞ் செய்தலே இயல்பு. அஃது யாதாலென் னில்; இரும்புக்குச் சுடுந்தன்மை யின்மையாயினுங் கனலோடு கூடியவிடத்து அதனது சுடுந்தன்மையைத் தான் பற்றி நின்றது போல வஸ்துவுக்குப் பேரருளே சொரூபமாகலின் அவ்வஸ்து வினோ டிரண்டறக்கலந்து நின்றோரும் இத்தசைக்க ணெல்லா வுயிர்களிடத்துஞ் செய்யு மிதாகிதங்களெல்லாம் மாயாவுருவத் திற்கே யொழிய நித்தியவிபுவாய ஆன்மாக்கட் கில்லையெனு முண்மையறிந்துளோராயினும், அவ்வுணர்வு பெத்தத்திற் றமக் கில்லைபோலு மற்றையவுயிர்கட்கும் அஃதின்மையால் அவற்றி னது வருத்தத்தை நோக்கியருளினை நீங்காரென்பதே துணிவு நின்றோருமென்ற வும்மையான் முத்திபெற முயல்வோர்க்கு அருளே தலையாக வேண்டப்படு மென்பதூஉம் அருளில்லோர் சீவன்முத்தரன்றென்பதூஉங் காட்டிற்றெனக் கொள்க.

இதற்குப்பிரமாணம்: தேவிகாலோத்தரம். (526) "நடுங்காம லெவ்வுயிரு நறுக்காமற் றுரும்பனைத்தும்—பிடுங்காது முதலெவ்வை யும் பிரசமலர் கொய்யாது—விடுங்காலா லூழ்த்துதிர்ந்த விரைம லர்க ளவையேந்தி—யடுங்காலன் றனையட்ட வம்புயங்க ளருச்சிப் பான்." எ-ம். பட்டணத்துப்பிள்ளையார். (527) "மகவெனப் பல் லுயிரனைத்தையு மொக்கப் பார்க்கும்." எ-ம். பகவற்கீதை. (528)

525. சாவு - தற்போத இழப்பு. சந்து-இரண்டு. விதிவிருத்தம்-விதித்தனவும் தள்ளினவும்.

"இருவகை யுயிர்க்கு மினியனு மின்ப துன்பமியா னென்னதென் றறியா—தொருபொரு ளாலுங் குறைவுபா டின்றி யுள்ளமு மொரு வழிப் படரப்—பொருவருந் துணிவுங் கருணையும் புரிந்து புலன் றெரி யுணர்வையென் பாலே—மருவிநின் றொழுகும் யோகியென் பவன்காண் மன்னமற் றெனக்குவே றினியான்." எ-ம். ஞான வாசிட்டம். (529) "உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்க ளுய்ப்போ னுயுந்—தள்ளுசுக துக்கவசஞ் சாராதோ னன வரதஞ் சமாதி யுற்றோ-னுள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெ னப் பிறர்பொருள்க ளோடே யென்ன—வெள்ளுபயத் தாலன்றி யியல்பாலே கண்டானே யெல்லாங் கண்டோன்." எ-ம். தத்துவ சரிதை. (530) "ஊனென்று நசைத்திற மொன்று முணர்ந்தி லானைத்—தீனஞ்செயிராக மயக்கொடு சேர்வி லானை—மோனந் தனமென்று மகிழ்ந்த மனத்தி னானைத்—தானென் றிவனைத் துயிரும்பரி தன்மை யானே." எ-ம். திருவள்ளுவர். (531) "நல் லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்—றேரினு மஃதே துணை." அன்றியும், (532) "பொருணீங்கிப் பொச்சாந்தா ரன்ப ரரு ணீங்கி—யல்லவை செய்தொழுகு வார்." அன்றியும், (533) "அறி வினா னாகுவ துண்டோ பிறிதினோய்—தந்நோய்போற் போற்றாக் கடை." எ-ம். சித்தாந்தகரணம். (534) "ஐயைந் துருவு மருளா னுயிர்க்காய—வைய னருளிங் கடைந்தோரும் - வெய்ய—தடையு மழலா ரயம்போன் றருளே—யுடையா ரனைத்துயிர்பா லும்." எ-ம். அருட்பிரகாசம். (535) "உயிர்நித்த மென்றறிந் தாலுநல் லோர் பல் லுயிர்களுற்ற—துயருக் கிரங்கல் புதுமைகொல் லோவருட் டோன்றலந்நாட்—செயிருற்ற தேவர் முறைகேட் டிரங்கித் திரு வுளத்து—டயர்வுற் றுருத்தகண் ணீரக்க மாமணி யாய்த்தெ னிலே." எ-ம். ஞானசாரம். (536) "மருளுறு மெவையு நூறி மயக் கறத் தெளிந்து ளோர்க்கு—மருளறத் துறக்க லாகா வயலொரு பொருளு மில்லாத்—தெருளுறு முறைமை யாலுஞ் சிவமெவ ருளமு மன்னு—மருளினை யறித லாலு மவர்தொழி லருள றந் தான்." எ-ம். வரும். மற்றும் வருவனவற்றுற் காண்க.

ஆனந்தமெய்திறேனென்னுஞ் செய்யுள் தொடங்கி இச்செய் யுள் காறும் ஞானிகள தாசாரங் கூறினுரெனக் கொள்க. (௧௦௦)

அவிரோதவுந்தியார் மூலமும் உரையும்

முற்றிற்று.

குருமணிதன் றுள்வாழ்க.

# பாட்டு முதற் குறிப்பு.

## கொலைமறுத்தல்.



## வைராக்கிய சதகம்.

## வைராக்கிய சதகம்.



## வைராக்கிய தீபம்.

## வைராக்கிய தீபம்.

## வைராக்கிய தீபம்.



## அவிரோதவுந்தியார்.

## அவிரோதவுந்தியார்.



## உதாரண நூல்களின் பெயர்.

அஞ்ஞவதைப்பரணி
அமுதசாரம்
அருட்பிரகாசம்
அருணகிரியந்தாதி
அவிரோதபோதம் *
அறிவானந்தசித்தியார்
அனந்தபோதம் *
அனுபவசாரம் *
அனுபூதிநிலையம் *
ஆனந்தத்திரட்டு
இதிகாசம்
உண்மைநிலையம்
உண்மைவிளக்கம்
உபதேசம்
உறுவை
ஒழிவிலொடுக்கம்
ஏகசமதநிராகரணம்
ஔவையார் பாடல்

## உதாரண நூல்களின் பெயர்.

கந்தரலங்காரம்
கந்தரனுபூதி
கலிமடல் (தத்துவராயர்)
காசிகாண்டம்
குகைநமசிவாயர்பாடல்
குறுந்திரட்டு
கூர்மபுராணம்
சசிவர்ணபோதம்
சமயாசாரம் *
சித்தாந்தகரணம்
சித்தாந்ததீபிகை *
சிதம்பரபுராணம்
சிவஞானசித்தியார்
சிவஞானதீபம்
சிவதருமோத்தரம்
சிவநெறிப்பிரகாசம்
சிவப்பிரகாசம்
சிவப்பிரகாசவெண்பா
சிவபோகசாரம்
சிவவாக்கியர்பாடல்
சிவானந்தமாலை
சிவானுபூதிவிளக்கம்
சைவசமயநெறி
சொரூபானந்தநிலையம் *
ஞானசாரம் *
ஞானசித்தி *
ஞானசூரியன் *
ஞானுசாரம்
ஞானவாசிட்டம்
தத்துவசரிதை *
தத்துவராயர்பாடல்
தத்துவாத்ஞகரம் *
தத்துவாமிருதம் *
திருக்கடைக்காப்பு (திருஞான
திருப்புகழ் சம்பந்தர்)
திருப்பாட்டு(சுந்தரமூர்த்திகள்
திருமந்திரம்
திருவம்மானை
திருவருட்பயன்
திருக்குறள்
திருவள்ளுவமாலை
திருவாசகம்
திருவாய்மொழி
திருவாதவூரர்புராணம்
திருவிளையாடற்புராணம்
திருவுந்தியார்
தேவாரம் (திருநாவுக்கரசர்)
தேவிகாலோத்தரம்
நல்வழி
நாலடியார்
நித்தியானந்ததரிசனம் *
நீதிசாரம்
நீதிவெண்பா
நெஞ்சுவிடுதூது
பகவற்கீதை
பட்டணத்துப்பிள்ளையார்
பரிபூரணசித்தி [பாடல்
பாடுதுறை
பிரபுலிங்கலீலை
பிரமகீதை
பிரமோத்தரகாண்டம்
புலான்மறுத்தல்
பெரியபுராணம்
பெருந்திரட்டு
பொன்வண்ணத்தந்தாதி
போதாமிருதம் *
போதரத்ஞகரம் *
மூலசித்தி *
மெய்ஞ்ஞான நிலையம் *
மெய்ஞ்ஞான விளக்கம் *
மெய்ம்மொழிச்சரிதை *
மோகவதைப்பரணி
வள்ளலார்சாத்திரம்
வீராகமம்

ஆக நூல்கள் 92. * இந்நூல்கள் பெருந்திரட்டி லுள்ளன.

# அச்சுப் பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 9 | 35 | காதலித்தூ | காதலித்து |
| 10 | 26 | வேறேரு | வேறொரு |
| 11 | 4 | புண்ணிய | புண்ணிய |
| 24 | 18 | குனறி | குன்றி |
| 31 | 22 | துர்ககா | துர்க்கா |
| 42 | 14 | களாறறு | களாற்று |
| 44 | 10 | தின்றன | தின்றன் |
| ,, | 12 | ஷுனிறசி | ஷுனிற்சி |
| 55 | 10 | தன்னுன் | தன்னுன் |
| 60 | 16 | தெரிக | தெறிக |
| ,, | 27 | சததை | சத்தை |
| 64 | 1 | ஸதிரீ | ஸ்திரீ |
| 65 | 20 | போன | போன் |
| 89 | 1 | தாகாரமாகங்கி | தாங்கிகாரமாக |
| ,, | 5 | லொன்றலால | லொன்றலால் |
| 97 | 18 | சிவன | சிவன் |
| 104 | 15 | முனனு | முன்னு |
| ,, | ,, | நினருய் | நின்ருய் |
| ,, | 17 | மையென | மையென் |
| ,, | ,, | புகனினறே | புகனின்றே |
| 105 | 6 | செயயு | செய்யு |
| 107 | 22 | ஐம்பல | ஐம்புல |
| 109 கு-ரை. | 1 | நினேமேல் | நினையேல் |
| 113 | 8 | சிரமங் | சிரமுங் |
| ,, | 10 | தருமப | தரும்ப |
| 118 | 1 | இவவி | இவ்வி |
| 123 | 12 | அருந து | அருந்து |
| 125 | 26 | மேவுபா | மேயுபா |
| 130 | 19 | என்றிடன் | என்றிடின் |
| 134 | 4 | களினமீ | களின்மீ |
| 135 | 29 | டேலரன | டேலரன் |
| 160 | 18 | பிறப்படை | பிறப்புடை |
| 174 | 23 | றவிர்த்த | றவிர்ந்த |
| 176 | 4 | கொள்ள | கொன்க |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 175 | 7 | திரிவுத | திரிவித |
| 178 | 10 | பெரியேன் | பெரியோன் |
| ,, | 11 | கைப்பல்வைகக | கைப்பால்வைக்க |
| ,, | 12 | வேதாந்த | வேதாந்தப் |
| [illegible] | 13 | தணர்க்கின | தணர்க்கின் |
| [illegible] | 20 | தெளியககூறன | தெளியக்கூறன் |
| [illegible] | 7 | சீவன | சீவன் |
| [illegible] | 25 | ஞானமென | ஞானமென் |
| [illegible] | 21 | டிககெங | டிக்கெங் |
| 185 | 16 | தெனிற | தெனிற் |
| 187 | [illegible] | லெனறு | லென்று |
| 184 | 3 | பற்றெம் | பற்றென |
| 184 | 4 | நிற்குன | நிற்கும் |
| 199 | 16 | யன்ள | யுள்ள |
| ,, | 27 | முதரலெவை | முதலெவை |
| 200 | 25 | காணுந | காணுந் |
| 211 கு-ரை. | 2 | அரசசை | அரசரை |
| 222 | 8 | மிகரு | மிக்கு |
| 226 | 32 | தர்சான் | தர்பான் |
| 228 | 20 | பார்ழங்கோ | பாழ்ங்கோ |
| 231 | 6 | திருதுந்த | திருந்துத |
| ,, கு-ரை. | 2 | என்றுங் | என்னுங் |
| ,, | 3 | னின்னுங்நீ | னின்றுநீ |
| 238 | 7 | தருமாம் | தருமம் |
| 257 | 23 | அவரவா | அவரவர் |
| 259 | 4 | வைருயட் | வையருட் |
| 268 | 1 | படாமை | படாமையி |
| 280 | 13 | சிதைவற் | சிதைவுற் |
| 283 | 26 | பரம | பிரம |
| 294 | 13 | வோவா | யோவா |
| 296 | 15 | தத்துமுங | தத்துவமுங் |
| 298 | 10 | தனனின் | தன்னின் |
| 303 | 26 | ரேற்றங | ரேற்றங் |
| ,, | 30 | சாரசர | சாாசர |



எலெக்டிரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், கோயமுத்தூர்.